# காரைக்காலம்மையார் வாழ்வும் வாக்கும்







இரா. கலைமணி சிவா

# காரைக்காலம்மையார்
# வாழ்வும் வாக்கும்

இரா. கலைமணிசிவா
எம். ஏ., எம்.பில்.

1, யமுனை வீதி,
நைனார் மண்டபம்
கடலூர்ச் சாலை,
புதுச்சேரி - 605 007.

நூல் ஆசிரியர் : திருமதி. கலைமணி சிவா

நூல் தலைப்பு : காரைக்காலம்மையார் வாழ்வும் வாக்கும்

பொருள் : வரலாறும், திறனாய்வும்

முதற்பதிப்பு : திருவள்ளுவராண்டு 2032 5, நவம்பர் 2001

பக்கங்கள் : XVI + 166

அச்சகம் : காரனேசன் அச்சகம், புதுவை–3.

விலை : ரூ. **50.00**



**இந்தநூல் திருமலை திருப்பதி தேவத்தானத்தின் நிதியுதவியைப் பெற்று வெளியிடப்பெறுகிறது.**

**இந்த நூல் 05-11-2001 அன்று வாரணாசியில் நடைபெற்ற பெரியபுராண ஆய்வு மாநாட்டில் வெளியிடப்பெற்றது.**



# படையல்

உலகெலாம் உணர்ந்து ஓதற்கரிய

இறைக்கும்

அன்றாடம் ஆண்டவனின்

அரும்புகழ் பாடும்

இறையன்பர்களுக்கும்

# பொருளடக்கம்

# அணிந்துரை

**'நூற்கடல்' தி.வே. கோபாலய்யர், பிரஞ்சிந்திய நிறுவனம், புதுச்சேரி**

'காரைக்கால் அம்மையார்' வாழ்வும் வாக்கும் என்ற தலைப்பில் உருவான நூலை முழுமையாக நோக்கினேன். வழிகாட்டியாக அமைந்த பேராசிரியர் குறிப்பிட்ட வகையில் தந்த பல தலைப்புகளை வகுத்துக் கொண்டு இவ்வாய்வு நிகழ்த்தப்பட்டுள்ளது.

அம்மையாரின் வரலாற்றைக் குறிப்பிடப் பெரியபுராணச் செய்தியொடு பிற்காலத்து நூல்களாகிய காரைக்கால் தலபுராணத் தமிழாக்கம், பிரமாண்ட புராணத்துக் காணப்படுவதாகக் கூறப்படும் அம்மையார் வரலாறு, அம்மையார் வரலாறாக அண்மைக்கால அறிஞர்கள் குறிப்பிட்டுள்ள செய்திகள், கன்னடமொழியில் உள்ள அம்மையார் வரலாறு என்ற பல நூற்செய்திகள் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன.

சேக்கிழார் பெருமான் திருமுறைகள் வாயிலாக அறியப்படும் செய்திகள், கல்வெட்டுச்செய்திகள் என்பவற்றோடு தாம் நேரில், கண்டு சேகரித்த செவி வழிச் செய்திகளையும் உளங்கொண்டே தம் திருத் தொண்டர் புராணத்தை இயற்றியுள்ளார். அவர் குறிப்பிடும் தனதத்தன், நிதிபதி, பரமதத்தன், புனிதவதி என்ற பெயர்கள் அவர் காலத்தில் காரைக்கால் பகுதியில் வாழ்ந்த நன்மக்களால் செவிவழிச் செய்தியாகத் தொன்று தொட்டு வழங்கி வரும் பெயர்களே என்று கருதுவதே ஏற்புடையதாகத் தோன்றுகிறது. பூதன் என்ற பெயர் மக்களுக்கு இயற்பெயராக வழங்கியமை 'ஆதனும் பூதனும்' என்று தொல்காப்பிய நூற்பாவில் இடம் பெறுகிறது. உலகத் தோற்றத்துக்கு அடிப்படையான ஐந்து முதற்பொருள்கள்

பூதம் என்று வழங்கப்பட்டமை 'வளி என வரூஉம் பூதக்கிளவியும்' என்பதனால் அறியப்படுகிறது பூதம், பேய் என்ற தெய்வீக உயிரினங்கள் பற்றிப் 'பால்வரை தெய்வம் வினையே பூதம்' பேய் ஓம்பிய பேய்ப்பக்கமும். பேய் புண்ணோற்றுள்ளுதல் கடிந்து தொடாக் காஞ்சியும் முதலிய தொல்காப்பிய நூற்பா அடிகள் குறிப்பிடுகின்றன 'கூறாமல் குறித்தன் மேல் செல்லும் கொடுங்கூளி மாறாப்போர் மணிமிடற்று எண்கையாள் கோளினி' என்ற கலித்தொகைக் கடவுள் வாழ்த்துப் பாடலடிகள் சிவபெருமானுக்குப் பேய் பூதம் ஆகிய கூளிப்படை உண்மையைத் தெரிவிக்கிறது. சிவபெருமானுடைய பெயர்களாகிய பேயன், பூதன் என்பனவற்றை மக்கள் தம் பெயராகக் கொண்டனர் இன்றும் வாழைப்பழங்களில் பூவன், முகுந்தன், பேயன் என்ற மும்மூர்த்திகளின் பெயர்பூண்ட வகைகளைக் காண்கிறோம். எனவே, ஆய்வுத்திரட்டு ஆசிரியர் அம்மையாருடைய பெற்றோர்கள் அவருக்குப் பேய் என்று பெயரிட்டிருப்பார் எனவும், பிறகு அது பூதம் என்று திரிய அம்மையார் பெயர் பூதவதி ஆயிற்று என்றும் தலபுராணம் குறிப்பிடுகிறது. இவ்வாறு கூறுவது சற்று வியப்பாக உள்ளது. பேய் மகள் என்ற புலமகளின் இயற்பெயர் இளவெயினி என்பதே. பேய்ச்சி என்பது பேய்களைப் பரிவாரமாக உடைய இறைவி என்றும் பொருளது. பொய்கையார், பூதத்தார், பேயார் என்பன ஆழ்வார்களின் இயற்பெயர்கள் அல்ல. அவர்கள் பிறப்பு வளர்ப்பு பற்றி எதுவும் அறியப்படாமையாலும், அவர்கள் தம் பெயர்களைத் தாங்களே யாண்டும் குறிப்பிடாமையாலும் அவை பிற்காலத்து அவர்களுக்கு மக்கள் இட்டு வழங்கிய பெயர்களேயாம்.

தல புராணமும் பிரமாண்ட பெரியபுராணத்தை ஓரளவு உள்ளத்துக் கொண்டு அவ்வந் நூலாசிரியர் தம் கற்பனைகளைக் கலந்து வரையப்பட்டனவே ஆதலின், அவையும், அவை போல்வன பிற நூல்களும் அம்மையார் வரலாறு மக்களிடையே பலவகைத் திரிபுகளோடு பரவியிருந்தது என்பதனை உணரவே பயன்படும்

இத்தகைய பல செய்திகளையும் இவ்வாய்வு நூல் தொகுத்துக் கூறியது அம்மையாரைப் பற்றிய பல புதிய செய்திகளை அறிய வாய்ப்பாக உள்ளது.

திருமணத்தின் முன் பெற்றோர்களே ஒரு பெண்ணுக்குச் சிறந்த உறவினர். திருமணத்தின்பின் கணவனே அவளுக்கு எல்லா உறவும் ஆவான். அவனால் கைவிடப்பட்ட பெண் தனிமைப் படுத்தப் படுகிறாள். கணவனுடைய உகப்புக்குப் பயன்பட்ட அவள் வனப்பு பிறரைக் கவர்வதாக இருப்பதனையும், அதனால் பிறர் பலவகை அல்லலுறுவதனையும் கற்புடைய பெண் விரும்பமாட்டாள். எனவே, மற்றவர் தன்னிடம் உரையாடுதல் அவர்களுக்கு விடை கூறுதல் என்பனவற்றைத் தவிர்க்க மற்றவர் அணுகிவர அஞ்சும் பேய்வடிவு தனக்குத் துணையாகும் என்று பேய் வடிவினை அம்மையார் வேண்டிப் பெற்றார்.

பேய் வடிவு உற்ற பின்னரே அம்மையாருக்கு உற்பவித்து எழுந்த ஞானம் செய்யுளியற்றப் பயன்பட்டது. இறைவன் அருளிய பேய் வடிவே அம்மையாரின் இரண்டாவது பிறவி. அப்பிறவியில் அந்தாதி முதலியன பாடப் பட்டதாலும் அவர் காரைக்காலை அன்றி வேற்றிடங்களில் வாழாமையாலும் அவ்வூரைத் தமக்கு அடையாளமாகக் காட்டித் தம்மைக் 'காரைக்கால் பேய்' என்று அம்மையார் குறிப்பிட்டுக்கொள்கிறார்.

ஆழ்வார்களில் அந்தாதி பாடிய பொய்கையார், பூதத்தார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார் என்ற ஐவரும் அம்மையாரைப் போலவே அந்தாதியை மண்டலித்துப் பாடினார் எனினும் தம் பெயர்களை அவ்வந்தாதிகளில் குறிப்பிடவில்லை. தம்பெயரை முதன் முதல் குறிக்கத் தொடங்கியவர் அம்மையாரே அதனையும் அவருடைய இரட்டை மணிமாலையில் காண

இயலவில்லை. அம்மையார் பதிகங்களில் 11ஆவது பாடலிலும், அந்தாதியில் 101வது பாடலிலும் அம்மையார் பெயர் காணப்படுவது கொண்டு தம் பெயரைப் பொறிப்பதற்காகவே அம் மிகைப் பாடல்களை அவர் பாடியுள்ளார் என்று அறிகிறோம்.

தேவார முதலிகள் மூவரும் திருவாலங்காடு என்ற திருத்தலம்பற்றிப் பதிகங்கள் பாடியுள்ளனர் என்றாலும், அவ்வப் பதிகங்களில் ஆங்காங்கிருந்த அடியார்கள் பெயரைக் குறிப்பிடாததன் காரணம் புலப்படவில்லை. அம்மையாரைத் திருஞான சம்பந்தருக்கும், திருநாவுக்கரசருக்கும் முற்பட்டவர் என்று கொள்வதற்கு இச்செய்தி சற்று இடர்ப்பாடு தருகிறது.

அம்மையார் பாடல்களில் காணப்படும் பலதிறப்பட்ட செய்திகளும் விரிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன. சங்ககால இறுதியில் வாழ்ந்த செங்கனார் எண்தோள் ஈசற்கு எழில்மடம் எழுபது எடுப்பித்தவன் காலத்தில் தமிழகத்தில் சிவன் கோயில்கள் நூற்றுக் கணக்கில் இருந்திருக்கும். சிவபெருமானைப் பற்றிய சங்ககாலச் செய்திகளுக்கு மேல் பல புதிய செய்திகள் இக்கால மக்களிடையே பரவியுள்ளன. சங்ககாலச் சிவபெருமான் பற்றிய செய்திகளாக அம்மையார் குறிப்பிட்டனவும், சங்ககாலத்தில் வழங்காத செய்திகளாக அம்மையார் குறிப்பிட்டனவும் தனித்தனியே விளக்கப்பட்டிருக்கலாம்.

அம்மையாருடைய கோயில்கள் பற்றிய நடப்பு சிறப்பாக அமைந்துள்ளது. காரைக்கால் கோயிலும் மாம்பழத்திருவிழாவும் விரிவாக விளக்கப்பட்டுள்ளன. மாங்கனிகள் சுவையாகப் பழுக்கும் ஆனிமாத நிறைமதி நாள் விழாவிற்குக் கொள்ளப்பட்ட திறம் போற்றற்குரியது. திருவாலங்காட்டு வருணனையும் சிறப்பாக உள்ளது.

சிவபெருமானுடைய பலவகைத் தாண்டவங்களும் பல நூல்களின் துணை கொண்டு நன்கு விளக்கப்பட்டுள்ளன தாண்டவம் என்பதனைத் தமிழ்ச்சொல்லாகக் கொண்டு நிலத்தில் தட்டி ஆடுவதால் தாண்டவம் எனவும் சான்றோர் சிலர் குறிப்பிடும் செய்திகளை இந்நூல் குறிப்பிடுகிறது. இந்த ஆராய்ச்சி வியப்புத் தருகிறது.

காரைக்கால் அம்மையாரின் உருவத் திருமேனிகளாகப் பல திருத் தலங்களிலும் காணப்படும் திருமேனிகளின் அமைப்பும், அவற்றிடையே உள்ள சிற்சில வேறுபாடுகளும் சிற்பிகளின் கற்பனைத் திறங்களும் விரிவாக விளக்கப்பட்டுள்ளன. கடல் கடந்த நாடுகளிலும் அம்மையார் திருமேனிகளின் காணப்படுதல் பற்றிய தலைப்பு பல புதிய செய்திகளை வெளியிடுகிறது. கடல் கடந்த நாடுகளிலும் அம்மையார் திருமேனி காணப்படுதல். தமிழரின் கடல்கடந்த வாணிபத்தை விளக்கும் கருவிகளில் ஒன்றாக அமைந்துள்ளது. 'மரக்கலராயர்' என்று சிறந்த வணிகர்களுக்கு வழங்கிய பொதுப்பெயர் 'மரக்காயர்' என்று ஒரு சாரார் பெயராகக் குறுகிவிட்டது.

அரிய பல செய்திகளை முயன்று தொகுத்துள்ளதால் பெரும்பாலும் முழுமைபெற்ற இந்தநூல் போற்றற்குரியது. முழுதும் படித்துப் பயன் கொள்ளத்தக்கது. ஆசிரியரின் முயற்சி பாராட்டத்தக்கது.

32, வைசியர் தெரு
புதுச்சேரி. 12–8–01

அன்பன்
தி.வே. கோபாலையர்

# வாழ்த்துரை

**(திரு. சொக்கலிங்கம், தலைவர், தெய்வச் சேக்கிழார் மன்றம், புதுவை)**

உலகம் யாவும் ஏத்தும் உமையொருபாகனைப் பலரும் பலவிதமாகப் போற்றியுள்ளனர். பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய இறையடியார்கள் பலர். அவர்களில் தனியே குறிக்கத்தக்கவர் காரைக்காலம்மையார். அவருடைய வாழ்வையும் திருவாக்கையும் விளக்கும் நூலொன்றைத் திருமதி. கலைமணிசிவா எழுதியுள்ளனர். அதனைப் படித்தபோது இறையடியார்களின் தொண்டும், இறையின் திருவுள்ளமும் அழகாகப் புலனாகின. என் இனிய நண்பர் திரு. மு. இராமசாமி அவர்கள் சைவத்தின்மீதும் பக்தி இலக்கியங்கள் மீதும் அளவற்ற ஈடுபாடு காட்டுபவர். அவருடைய திருமகளார் உருவாக்கியுள்ள இந்த நூல் பல்வேறு சிறப்புகள் கொண்டது.

காரைக்காலம்மையாரின் பாடல்களை மட்டும் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளாமல், அவரின் வாழ்க்கை, தமிழ் நூல்கள் கூறும் சிவதாண்டவங்கள் போன்றவற்றையும், நோக்குகின்றார் ஆசிரியர். ஆரூரர் காரைக்காலம்மையாரைப் 'பேயார்' எனச் சுட்டுவதும், பழையனூர்ப் பதியில் ஆண்டவனின் திருநடனம் கண்டுறைபவராக அம்மை அமர்த்தப்பெற்றார் எனக் காட்டுவதுமாக இந்நூல் பல செய்திகளைக் கூறுகின்றது. பூதவதி, புனிதவதி, பேய் போன்ற பெயர்கள்பற்றியும் இந்நூல் ஆய்வு செய்துள்ளதைக் காணலாம்.

அம்மையார் தம்மைக் காரைக்கால் பேய் என்று அடையாளங்காட்டும் பாடல்களும், அறநெறிக்கால வெண்பா அமைப்பைப் பின்பற்றி அவரெழுதிய இலக்கியங்களும் நூலாசிரியரால் விரிவாக எடுத்துக் தரப்பெற்றுள்ளன. அவருடைய நூல்களை

மதிப்பீடு செய்யும் இயல் கருத வேண்டிய ஒன்று. பின்வந்தோருக்கு இசைத்தமிழை அறிமுகம் செய்துவைத்த பெருமை அம்மையாருக்கு உண்டு. 'மூத்த திருப்பதிகம்' போன்ற நூல்களையும், 'உமையென்னும் மெல்லிய ஓர் கூற்றானை' போன்ற வரிகளையும், 'செஞ்சடையாய்', 'வார்சடை' போன்ற சொற்களையும் தமக்கே உரியமுறையில் திருமதி கலைமணிசிவா எடுத்துமொழிவது பயன்தரக் தககதாகும். புராணச் செய்திகள் பற்றியும் விரிவாக இந்நூல் பேசுகிறது. சுடுகாட்டின் அழகினை அம்மையார் விவரிக்கும் செய்தி உட்படப் பல செய்திகளை இந்தநூலில் காணமுடிகிறது. அவரைப் போலத் தலையால் நடந்து சென்ற அடியவர் யார் என வள்ளலார் கேட்பதாக வரும் பகுதிகள் நெஞ்சைக் கவர்கின்றன. கூடுதலாக அந்தாதி நூல்கள் பற்றி மிகவும் விளக்கமாக இந்நூல் பலவற்றைப் பேசுகிறது. நயங்களைச் சுட்டும் இடங்களில் நயமாகச் செய்திகளை நூலாசிரியர் பதிவு செய்கின்றார். சான்றாக, நெருப்பை ஏந்தி ஆடுவதால் சிவனின் கரங்கள் சிவந்தனவா அல்லது, கரங்களின் செம்மையால் நெருப்பு சிவந்ததா என்று அதிசயத்து நிற்கும் பகுதியைக் காட்டலாம். 'தாண்டவம்' என்ற எப்படியெல்லாம் உருவாகியிருக்கலாம் எனப் பலகோணங்களில் ஆசிரியர் சிந்தித்துள்ளார். தாமிரக்கலை, சித்திரக்கலை என அனைத்துச் செய்திகளும் அழகாகத் தரப்படுகின்றன. எந்தக் கால் தூக்கி ஆடுவது என்பது பற்றிய விவாதங்களும் சரியாகத் தரப்பட்டுள்ளன. காரைக்காலுக்கு நேரில் சென்று மாங்கனித் திருவிழாவைப் பலமுறை பார்த்து, உற்றுநோக்கி, தகவல்கள் திரட்டி அவற்றை ஒழுங்குபடுத்தி இந்தநூலில் விரிவாகத் தந்துள்ள ஆசிரியரை எவ்வளவு பாராட்டினாலும் சரிதான். அவ்விழாவில் திருவீதி உலாவரும்போது தேங்காய் உடைக்கப்படாத காரணத்தை இந்நூலில் கண்டு தெளியலாம்.

காரைக்காலில் உள்ள அம்மையார் கோயில்கள் செய்திகள், அம்மையாரின் திருமேனிச் சிறப்புகள், அவர்பற்றிய செவிவழிச் செய்திகள் என்று ஏராளமாகத் தகவல்களை இந்த நூலில் பெறலாம். இந்த நூலைப் படிப்பவருக்குக் காரைக்காலம்மையாரைப் பற்றிய ஒரு தெளிவு ஏற்படும் என்பது உண்மை.

'காரைக்கால் அம்மையார் – வாழ்வும் வாக்கும்' என்ற தலைப்பில் தன் முதல்நூலைப் பரிமாறும் திருமதி கலைமணி சிவா தமிழும் சைவமும் ஓங்குமாறு இன்றும் ஏராளமாக நூல்களைப் படைக்க வேண்டும். நோக்கரிய நோக்காய், நுணுக்கரிய நுண்ணியனாய் விளங்கும் வேதபுரீசுவரன் அவருக்கு எல்லா நலன்களையும் தருவார். காலம் காலமாகப் போற்றப்பட்டுவரும் பக்திநெறி தழைக்க நூலாசிரியர் பாடுபடுவாரென எண்ணுகிறேன். அம்மையைத் தன்னுடம்பின் பாதியாகச் கொண்ட, ஆலவாய் அண்ணலின் திருவருளால் திருமதி கலைமணி நலமும் வளமும் பெற்று வாழ்வாங்கு வாழ வாழ்த்துகிறேன்.

இறையன்பர்கள் இந்த நூலைப் படித்துப் பயன்பெறுவார்களாக

சிவமயம்

புதுச்சேரி *எம். சொக்கலிங்கம்*

## என்னுரை

பக்தி இலக்கிய காலத்தில் தோன்றிய அடியார்களுள் மூத்தவர் என மதிக்கத்தக்கவர் காரைக்காலம்மையார் ஆவார். சைவ அடியார்கள் அறுபத்து மூவருள் பெண் அடியார்களாக விளங்குபவர் மூவர். இம் மூவருள் காரைக்கலாலம்மையார் படைப்பாளர் என்னும் நிலையில் சிறப்புப் பெறுபவர். இறைவனால் ஆட் கொள்ளப்பட்டவர். பக்தி இலக்கியங்கள் பலவற்றுள் இக்காரைக்காலம்மையாரின் வாழ்க்கை வரலாற்றைப் படிக்க நேர்ந்தபோது அரியபல செய்திகள் தெரிய வந்தன. இந்நிலையில் இச் செய்திகளைத் தொகுத்து நூலாக்க வேண்டும் என்கிற ஆவலின் காரணமாக எழுந்ததே 'காரைக்காலம்மையார் வாழ்வும் வாக்கும்' என்னும் இந்நூல். இந்நூலில் பின்வரும் கருத்துக்கள் விளக்கப்படுகின்றன.

காரைக்காலம்மையாரின் இயற்பெயர் குறித்துச் சிந்திக்கப்படுகிறது. நம்பியாரூரரும், நம்பியாண்டார்நம்பியும் அம்மையாரைப் பேய் என்று குறிப்பிடுவர். காரைக்கால் தலபுராணம் பூதவதி என்று கூறும், பெரிய புராணம் புனிதவதி என்னும் பெயரைச் சொல்லும். இச்செய்திகள் சிந்திக்கத்தக்கன.

காரைக்கால் அம்மையார் இயற்றிய நூல்களில் இடம்பெறும் கருத்துக்களைப் பலவகையாகப் பகுத்து, இலக்கியச் சிறப்புகளை விளக்குவது தேவையானது.

சைவத்திருமுறை ஆசிரியர்களுள் காலத்தால் மூத்த காரைக்காலம்மையாருடைய தாக்கம் பின்னால் வந்த தேவார ஆசிரியர்களிடம் எவ்வாறு அமைந்துள்ளது என்பதைக் காணும் நோக்கில் ஆய்வுப் போக்கு அமைந்தது.

சிவபெருமானின் பல்வகைத்தாண்டவங்கள் நினைக்கத்தக்கன. காரைக்காலம்மையார் பாடல்களில்

சித்திரிக்கப்படும், சிவபெருமானின் நடனமும், அந்நடனத்தின் பின்னணியும், இசைக்கப்படும் இசைக் கருவிகளும் சிந்திக்கத் தூண்டின.

காரைக்காலம்மையார் ஐக்கியமான திருவாலங்காட்டிலும், பிறந்த இடமான காரைக்காலிலும் அம்மையாருக்குக் கோயில்கள் அமைந்துள்ளன. கோயில் அமைப்பையும், திருவிழாக்களையும் காண நேர்ந்தது.

காரைக்காலம்மையாரின் உருவத் திருமேனிகள் இந்தியாவில் மட்டுமல்லாமல் தென்கிழக்காசிய நாடுகளிலும் காணப்படுகின்றன. இவ்வுருவத் திருமேனிகளின் அமைப்பையும், அவை வெளிநாடுகளில் பரவிய பாங்கையும், எடுத்துக் கூற வேண்டுமென்ற ஆவல் எழுந்தது. இவையே நூலுக்கான பின்புலங்கள்.

அடியேனின் இந்நூல் பணியை வாழ்த்தி அணிந்துரை நல்கியவர் நூற்கடல் எனப் போற்றப் பெறும் அறிஞர் தி.வே. கோபாலய்யர். அவர்களுக்கு மனமார்ந்த நன்றிகள் பற்பல.

இந்நூலுக்காக மனமுவந்து வாழ்த்துரை நல்கிய புதுவைச் சேக்கிழார் மன்றத் தலைவரும் சைவத் தொண்டில் ஈடுபாடு மிக்கவருமான திருநிறை சொக்கலிங்க ஐயா அவர்களுக்கும் என் நன்றிகள்.

தமிழ் இலக்கியத்தில் ஆர்வத்தைத் தூண்டிய என் குருநாதர் முனைவர். அ. பாண்டுரங்கனார் அவர்களுக்கும், இந்நூல் உருவாக்கத்திற்கு உதவிய சகோதரர் அ. அறிவு நம்பி அவர்களுக்கும் நன்றிகள்.

இந்நூல் குறித்த தகவல்களைத் திரட்டிய காலத்தே 'காரைக்காலம்மையார் கோயில் அமைப்பை, விளக்கியுரைத்த அ. இராஜேந்திரன் (தரங்கம்பாடி, தொல்பொருள் ஆய்வுத்துறை) அவர்களுக்கும், திருவாலங்காடு பற்றிய செய்திகள் வழங்கிய தி.மு. சபாபதி தேசிகர் (திருவாலங்காடு) அவர்களுக்கும், நூலுக்குகந்த படங்களை நல்கிய புதுவை – பிரெஞ்சு இந்தியப் பண்பாட்டுக் கழகத்திற்கும் என்றும் நன்றியுடையேன்.

திரட்டிய தரவுகளின் தொகுப்பு, நூலாக வடிவுபெற பல்வகையில் உதவிநின்ற திருப்பதி தேவத்தான அலுவலர்களுக்கு என் நன்றிகள்.

இந்நூல் உருவாக்கத்திற்குத் துணைநின்ற என் கணவர் திரு. சிவா அவர்கள் உட்பட அனைத்து அன்புள்ளங்களுக்கும் நன்றிகள்.

அச்சிட்டுத் தந்த புதுவை காரனேசன் அச்சகத்தாருக்கும் நன்றி.

இந்நூல் என் முதல்நூல் என்பதால் ஆங்காங்கே பிழைகள் தென்படின் சரிசெய்து கொள்ளுமாறு கேட்டுக் கொள்கின்றேன். இநத நூலினைப் பற்றிய செய்திகளைத் தெரிவித்தால் நூலாசிரியரான எனக்குப் பல்வேறு வகையில் பயன்படும். தங்களின் வாழ்த்துகள் எனக்கு உறுதுணையாகும் என நம்புகிறேன்.

அன்பே சிவம்

புதுவை–3. *இரா. கலைமணிசிவா*

# 1. முன்னுரை

தமிழ் இலக்கிய வரலாற்றிலும் பண்பாட்டு வரலாற்றிலும் பக்தி இலக்கியங்கள் உயரிய இடத்தைப் பெற்றிருக்கின்றன. சங்க காலம் இயற்கை நெறியோடு இயைந்த இன்பக் காலமாக விளங்கி, வாழ்வோடு தொடர்புடைய செய்திகளை இலக்கியங்களாகப் படைத்தது. சமண பௌத்த சமயங்கள் தென்னாட்டில் பரவிச் சங்க காலத்தை அடுத்துப் பெருவாழ்வு பெற்றன. தமிழரசர் மூவரும் மறைந்து, அயலவரான களப்பிரர் ஆட்சி தமிழகத்தில் நிலைபெற்றது. இக்காலத்தை வரலாற்றாசிரியர்கள் "இருண்ட காலம்" என்பர். உலகியல் மறுப்பாகத் தோன்றிய சமண பௌத்த சமயங்கள் தமிழ் இலக்கியப் போக்கை மாற்றின. காதல் வாழ்வு, குடும்பம், சமுதாயம், நாடு என்ற அளவில் அகமாகவும் புறமாகவும் இலக்கியங்கள் வளர்ந்த நிலைமாறி, வாழ்வைத் துறக்க வேண்டும் என்று வலியுறுத்தும் கோட்பாடு இலக்கியத்தில் வளர்ச்சி பெற்றது. துறவும் அதனோடு தொடர்புடைய அறக்கருத்துக்களும் செல்வாக்குப் பெற்றதால், இருண்ட காலத்தை அறநெறிக் காலம் என்று அழைப்பர்.

இதனை அடுத்துப் பக்தி இயக்கம் தோன்றுகிறது. சமண பௌத்த சமயங்கள் தமிழக மன்னர்களின் ஆதரவைப் பெற்று மிக்க செல்வாக்குடன் விளங்கின. தமிழகத்தின் வடபகுதியை ஆண்ட பல்லவர்களில் சிலரும், தென்பகுதியை ஆண்ட பாண்டியர்களில் சிலரும், சமண சமயத்தைப் போற்றி வளர்த்தனர். அக்காலத்தில், காஞ்சிமா நகரமும், காவிரிப் பூம்பட்டினமும் புகழ்மிக்க பௌத்த நிலையங்களாக விளங்கின. காஞ்சியிலிருந்து புறப்பட்டுச் சென்ற பௌத்த அறிஞர்கள் ஆசியா முழுவதிலும் பௌத்தத்தைப் பரப்பினர். தென்கிழக்கு ஆசிய நாடுகளில் பௌத்தத்தைப் பரப்பிய தமிழர்களின் கதையே மணிமேகலைக் காப்பியமாக மிளிர்கின்றது. காஞ்சியை அடுத்த திருப்பருத்திக் குன்றமும், கடலூரை அடுத்த

பாடலிபுரமும் அக்காலத்தில் சிறந்த சமணத் தலங்களாக விளங்கின. மதுரையைச் சுற்றி எண்பெருங்குன்றங்களில் சமணர்கள் செல்வாக்குப் பெற்றிருந்தனர். தமிழ் நாட்டின் தென் பகுதிகளில் கிடைக்கின்ற பிராமிக் கல்வெட்டுகள் சமண சமயம் தமிழ்நாட்டில் பெற்றிருந்த பெருஞ் செல்வாக்கைக் காட்டுகின்றன. இந்தச் சூழ்நிலையில் பக்தி இயக்கம் பிறக்கின்றது. சமண பௌத்தர்களின் வரம்பு மீறிய கொள்கைகளும், நோன்புகளும், மன்னர்களைத் தம் கைப்பாவைகளாகக் கொண்டு, அவர்கள் நடத்திய சமய நெறிக்குப் புறம்பான செயல்களும் மக்களின் மனத்தில் எதிர்ப்புணர்ச்சியைக் கிளப்பி இருத்தல் கூடும். மகேந்திரவர்மனின் மத்த விலாசப் பிரகசனம் என்னும் வடமொழி நாடக நூல் பௌத்தத் துறவிகளைக் கேலி செய்கிறது. பௌத்தக் காப்பியமான மணிமேகலையில் சமண சமயத்திற்கும், வைதிக சமயத்திற்கும் எதிரான பிரச்சாரங்களைக் காணுகின்றோம்.[1]

இவ்வாறு புறச் சமயங்களான பௌத்தமும் சமணமும் தமிழகத்தில் ஒருவகையான வெறுமை உணர்வை ஏற்படுத்தி வந்த நேரத்தில், வைதிக சமயம் தொன்றுதொட்டு ஆங்காங்கு நிலவிய மக்கள் வழிபாடுகளோடு தன்னை இணைத்துக் கொண்டு இந்து சமயம் என ஒரு புதிய சமயமாக உருப் பெறலாயிற்று. திணை நிலத் தெய்வங்களாக இருந்த மாயோன், சேயோன், கொற்றவை போன்ற தமிழகத் தெய்வங்களும், பசுபதி என்னும் தொல் திராவிடக் கடவுளும், வேதங்களில் கூறப்பட்ட நாராயணனோடும், ஸ்கந்தனோடும், ருத்திரனோடும், உமையோடும் இணைக்கப்பட்டு, சைவ வைணவ பக்தி இலக்கியங்கள் உருவாயின.

இவ்வாறு உருவான பக்தி இயக்கத் தலைவர்களுள் காலத்தினால் முற்பட்டவர் காரைக்கால் அம்மையார். அவருடைய பணி பக்தி இலக்கியத்தில் காலத்தால் மிகவும் முற்பட்டது. மேலும்,

எதிர்காலப் பக்தி இயக்கத்திற்கு அவருடைய பாடல்கள் வழிகாட்டியாக அமைந்தன. உமாதேவியால் திருமுலைப்பால் ஊட்டப்பட்ட ஞானசம்பந்தப் பிள்ளையாரும், திருத் தொண்டத்தொகை பாடிய நம்பியாரூரரும், நாயன்மார்களுடைய பாடல்களை எல்லாம் தொகுத்துத் திருமுறை வகுத்து உலகிற்கு அளித்த நம்பியாண்டார் நம்பியாரும் போற்றிப் பரவும் தனிப்பெருமை உடையவராகக் காரைக்கால் அம்மையார் விளங்குகிறார். மேலும், பௌத்த சமயத்தைப் போலவே தமிழகத்தைப் பொறுத்த அளவில் முதன்முதலாகத் துறவை ஏற்று, இல்லறத்தை விட்டு வெளியேறிய ஒரு பெண்ணாகவும் அவர் திகழ்கின்றார். எனவே, அவரைப் பற்றிய ஆய்வு தமிழ் இலக்கிய, பண்பாட்டு ஆய்வில் ஒரு முக்கிய இடம் பெறுகின்றது.

## தலைப்புத் தேர்வு

சோழ நாட்டின் கடற்கரைத் துறைமுகமான காரைக்காலில், காரைக்கால் அம்மையார் பிறந்தார் என்று பெரிய புராணம் கூறுகின்றது. காரைக்கால் பகுதியில், அறுபத்துமூன்று நாயன்மார்களில் ஒருவராகிய காரைக்கால் அம்மையாருக்குக் கோயில் எழுப்பி, மாங்கனித் திருவிழாவை மிகச் சிறப்பாக மக்கள் கொண்டாடுகின்றனர். காரைக்கால் அம்மையார், வழிபாட்டு நிலைக்கு எவ்வாறு உயர்த்தப்பட்டார் என்று அறிய ஆவல் கொண்டமையாலும், அம்மையாரைப் பற்றிய ஆய்வு செய்தவர்கள் அவருடைய பாடல்களையே மையமாகக் கொண்டு ஆய்வு செய்தமையாலும், இதிலிருந்து மாறுபட்ட கோணத்தில் ஆய்வு செய்ய விருப்பம் கொண்டமையாலும் “காரைக்கால் அம்மையார் – வாழ்வும் வாக்கும்” என்னும் தலைப்பு இங்குத் தலைப்பாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது.

**ஆய்வுப் பொருள்**

'காரைக்கால் அம்மையார் – வாழ்வும் வாக்கும்' என்ற பொருளில் அம்மையார் பற்றிய செய்திகளை உள்ளடக்கியதாக ஆய்வு மேற்கொள்ளப்படுகிறது.

**இதுவரை நடைபெற்றுள்ள ஆய்வுகள்**

காரைக்கால் அம்மையாரைப் பற்றி விரிவாகப் பல ஆய்வுகள் இன்னும் மேற்கொள்ளப்படவில்லை. பெரிய புராணம் குறித்தும், பன்னிரு திருமுறை குறித்தும், பதினோராம் திருமுறை குறித்தும் தோன்றிய ஆய்வுகளில் காரைக்கால் அம்மையாரைப் பற்றிய செய்திகளும் இடம் பெறுகின்றன. மதுரைப் பல்கலைக் கழகத்தில் காரைக்கால் அம்மையாரின் சமயமும் தத்துவமும் முனைவர்பட்ட ஆய்வாக மேற்கொள்ளப்பட்டுள்ளன. ஆயினும் அம்மையாரைக் குறித்து வரலாறு, பண்பாடு, இலக்கியம் ஆகியவற்றை இணைத்து எவ்வித ஆய்வும் உருவாகவில்லை என்று தெரிகின்றது. அவ்வகையில் இது முதல் ஆய்வாக அமைகின்றது.

**ஆய்வு நோக்கம்**

காரைக்கால் அம்மையார் பிறந்ததாகக் கருதப்படும் காரைக்காலில் ஆண்டுதோறும் மாங்கனித் திருவிழா நடத்திக் கொண்டாடுகின்றனர். பெரிய புராணம் காட்டும் கதையில் இருந்து இது எந்த அளவிற்கு ஒன்றுபட்டுள்ளது அல்லது வேறுபட்டுள்ளது என்று காண்பது ஆய்வின் நோக்கங்களில் ஒன்றாகும். மேலும், காரைக்கால் அம்மையாரைப் பற்றிக் கூறும் எல்லா நூல்களும் காரைக்கால் அம்மையார் என்றோ, காரைக்கால் பேயார் என்றோ குறிக்கின்றன. அவரின் இயற்பெயர் யாதாக இருக்கக்கூடும் என்று ஆய்வாளர் சிந்திக்க முயல்கின்றார். காரைக்கால் அம்மையாரோடு தொடர்புடைய இடங்களில் அம்மையார் பற்றிய வரலாற்றுச்

செய்திகளையும், புராணம் செய்திகளையும், மக்கள் நம்பிக்கைகளையும் இவ்வாய்வேடு தொகுத்தளிக்க முற்படுகிறது. காரைக்கால் அம்மையாருடைய உருவத்திருமேனி அமைப்பும், அவருடைய உருவத் திருமேனி வெளிநாடுகளில் பரவிய பாங்கும் விளக்கப்படுகின்றன. இவ்வாறு புதிய கோணங்களிலிருந்து அம்மையாருடைய வாழ்வும் வரலாறும் விளக்கப்படுவதே இவ்வாய்வின் தலையாய நோக்கமாகும்.

## ஆய்வு மூலங்கள்

இவ்வாய்விற்கு மூலநூல்களாகக் காரைக்கால் அம்மையாரின் பதிகங்களும், நம்பியாரூரரின் திருத் தொண்டத்தொகையும், நம்பியாண்டார் நம்பிகளின் திருத்தொண்டர் திருவந்தாதியும், சேக்கிழாரின் திருத்தொண்டர் புராணத்திலுள்ள காரைக்கால் அம்மையார் புராணமும், வேதவியாச முனிவர் அருளியதாகக் கூறப்படும் காரைக்கால் தல புராணமும் அமைகின்றன. இந்நூல்களின் வழிநின்று சான்றாதாரங்கள், கள ஆய்வில் பெற்ற கருத்துக்கள் ஆகியவற்றின் துணை நின்று ஆய்வு மேற்கொள்ளப்படுகின்றது.

## ஆய்வின் எல்லை

காரைக்கால் அம்மையாரோடு நேரடித் தொடர்புடைய காரைக்காலும் திருவாலங்காடும் ஆய்வின் எல்லைகளாக அமைகின்றன. இவ்விரு இடங்களிலும் அம்மையாருக்குத் தனிக் கோயில்கள் உள்ளன. வேறிடங்களிலும் அத்தகைய கோயில்கள் இருந்திருத்தல் கூடும். கால அளவைக் கருத்தில் கொண்டு இவ்விரு இடங்களே கள ஆய்விற்காக எடுத்துக் கொள்ளப்பட்டன. காரைக்கால் அம்மையாரின் உருவத் திருமேனி பெரும்பாலான சிவபெருமான் திருக்கோயில்களில் அறுபத்துமூன்று நாயன்மார்கள்

கூட்டத்தில் ஒன்றாக இடம் பெற்றுள்ளது. அவை அனைத்தும் ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப்படவில்லை. புதுவையில் உள்ள பிரெஞ்சு இந்தியப் பண்பாட்டுக் கழகம் தொகுத்து வைத்துள்ள அம்மையார் திருமேனிகளில் அடிப்படையான சில மட்டுமே ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப்படுகின்றன.

## ஆய்வுத் திட்டம்

1. முன்னுரை
2. பெரிய புராணத்தின்வழி அறியலாகும் அம்மையாரின் வாழ்க்கை வரலாறு.
3. காரைக்கால் அம்மையார் இயற்றிய நூல்கள் மதிப்பீடு
4. பக்தி இயக்க வரலாற்றில் அம்மையார்
5. சிவபெருமானின் பல்வகைத் தாண்டவங்கள்
6. காரைக்கால் அம்மையார் கோயில்கள்
7. காரைக்கால் அம்மையாரின் உருவத் திருமேனிகள்
8. முடிவுரை

## 1. முன்னுரை

முதல் இயலான முன்னுரையில் தலைப்புத் தேர்வும், ஆய்வுப் பொருளும், இதுவரை வந்த ஆய்வுகளும், ஆய்வு நோக்கமும், ஆய்வு மூலங்களும், ஆய்வின் எல்லையும், ஆய்வுத் திட்டமும் விளக்கப்படுகின்றன.

## 2. பெரிய புராணத்தின்வழி அறியலாகும் அம்மையாரின் வாழ்க்கை வரலாறு.

பெரிய புராணத்தின் வழி அம்மையாரைப் பற்றிய செய்திகளும், சிவபெருமான் அம்மையாரை ஆட்கொண்டமையும் முதலில் ஆராயப்படுகின்றன. அம்மையாரின் இயற்பெயர் குறித்தும் சிந்திக்கப்படுகின்றது. நம்பியாரூரரும், நம்பியாண்டார் நம்பிகளும் காரைக்கால் அம்மையாரைக் காரைக்கால் பேய் என்றும் குறிக்கின்றனர். ஆயின், பெரிய புராணம் புனிதவதி என்னும் பெயரை அம்மையாருடைய இயற்பெயராகக் காட்டுகின்றது. காலத்தால் மிகப் பிற்பட்ட காரைக்கால் தலபுராணம் அம்மையாரைப் பூதவதி என்று குறிப்பிடுகின்றது. இவற்றை ஒருங்கிணைத்து ஆராய இவ்வியல் முயல்கின்றது.

## 3. காரைக்கால் அம்மையார் இயற்றிய நூல்கள் மதிப்பீடு

காரைக்கால் அம்மையார் இயற்றிய நூல்கள் பற்றிய மதிப்பீடு இவ்வியலில் மேற்கொள்ளப்படுகிறது. பதிகங்களின் பெயர்களும், அமைப்பும் விளக்கியுரைக்கப்படுகின்றன. பதிகங்களில் இடம்பெறும் கருத்துக்கள் பலவகையாகப் பகுத்து ஆராயப்படுகின்றன. அம்மையார் பாடல்களில் உள்ள இலக்கியச் சிறப்பும் ஆராயப்படுகின்றது.

## 4. பக்தி இயக்க வரலாற்றில் அம்மையார்

சைவத் திருமுறை ஆசிரியர்களில் காலத்தால் மூத்தவர் காரைக்கால் அம்மையார் ஆவார். இவருடைய தாக்கம் பின்னால் வந்த தேவார ஆசிரியர்களிடம் எவ்வாறு அமைந்துள்ளது எனக் காண்பதும், அம்மையார் காட்டும் தத்துவங்கள், சமயச் சிந்தனைகள் பற்றி ஆராய்வதும் இவ்வியலின் நோக்கமாகும்.

## 5. சிவபெருமானின் பல்வகைத் தாண்டவங்கள்

சிவபெருமான் ஆடிய ஐந்து சபைகளும், அவ்விடங்களில் ஆடப்பட்ட தாண்டவங்களும், ஏனைய தமிழிலக்கியங்கள் காட்டும் சிவபெருமானின் தாண்டவங்களும் இவ்வியலில் விளக்கப்படுகின்றன. காரைக்கால் அம்மையார் பாடல்களில் சிவபெருமான் நடனம் எவ்வாறு சித்திரிக்கப்படுகிறது என்பதும், அந்நடனத்தின் பின்னணியும், இசைக்கப்படும் இசைக் கருவிகளும், அம்மையார் பாடல்வழி விளக்கப்படுகின்றன.

## 6. காரைக்கால் அம்மையார் கோயில்கள்

இவ்வியலில் காரைக்கால் அம்மையார் ஐக்கியமான திருவலாங்காடும், பிறந்த இடமான காரைக்காலும் இடம் பெறுகின்றன. கோயில் அமைப்பு, திருவிழாக்கள் ஆகியவை விளக்கப்படுகின்றன.

## 7. காரைக்கால் அம்மையாரின் உருவத் திருமேனிகள்

காரைக்கால் அம்மையாரின் உருவத்திருமேனிகள் தமிழகத்தில் பல இடங்களிலும் காணப்படுகின்றன. இத்திருமேனிகள் கலைஞனின் கற்பனைக்கேற்ப ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகையாக வேறுபட்டு இருப்பினும் பெரும்பாலானவற்றில் கையில் தாளத்துடனே அம்மையார் காட்டப்படுகின்றார். இந்தியாவில் மட்டுமல்லாமல் தென்கிழக்காசிய நாடுகளிலும் அம்மையாரின் உருவத் திருமேனிகள் காணப்படுகின்றன. இவ்வுருவத் திருமேனிகளின் அமைப்பும் இவை வெளிநாடுகளில் பரவிய பாங்கும் விளக்கப்படுகின்றன.

## ８. முடிவுரை

முன்னர் எடுத்துரைத்த ஏழு இயல்களிலும் கண்டறிந்த செய்திகள் எட்டாம் இயலில் முடிவுரையாகத் தொகுத்து அளிக்கப்படுகின்றன.

### சான்றெண் விளக்கம்

1. மணிமேகலை, மலர்வனம் புக்க காதை, வரி. 86–103.
   மேலது., ஆபுத்திரன் திறன் அறிவித்த காதை, வரி. 63–69.

*தலையினால் நடந்துசென்று சங்கரன் இருந்த வெள்ளி*
*மலையின்மேல் ஏறும்போது மகிழ்ச்சியால் அன்பு பொங்கக்*
*கலையிளந் திங்கட் கண்ணிக் கண்ணுதல் ஒருபாகத்துச்*
*சிலைநுதல் இமயவல்லி திருக்கண் நோக்குற்றதன்றே.*

## 2. பெரிய புராணத்தின் வழி அறியலாகும் காரைக்காலம்மையாரின் வாழ்க்கை வரலாறு

<u>முன்னுரை</u>

சிவனடியார்களான நாயன்மார்கள் அறுபத்துமூவரின் பெண்பாலர் மூவர். இம்மூவரில் காரைக்கால் அம்மையார் ஒருவரே இலக்கியங்களை இயற்றிவரும், வழிபாட்டிற்கு உரியவருமாக விளங்குகின்றார். இவருடைய காலம் கி.பி. 5,6 ஆம் நூற்றாண்டு என்று கருதப்படுகிறது[1]. இவருடைய வாழ்க்கை வரலாற்றைப் பற்றி அறிந்து கொள்வதற்கு நமக்கு வழிகாட்டுவது சேக்கிழார் எழுதிய பெரிய புராணமேயாகும். சேக்கிழார் என்னும் சைவப் பெரியார் கி.பி. 12ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். இவர் இரண்டாம் குலோத்துங்கனிடம் அமைச்சராய் இருந்தவர்[2]. 5,6 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சேக்கிழார் முதன்முதலாக அவருடைய வாழ்க்கையை விரிவாக எழுதிய பெருமைக்குரியவர். இவ்வியல் பெரிய புராணத்தால் அறியலாகும் அம்மையார் வாழ்வையும், அம்மையாரின் இயற்பெயரையும் ஆராய முயல்கின்றது.

காரைக்கால் அம்மையார் பற்றிய குறிப்பு நமக்கு முதன்முதலில் நம்பி ஆரூரர் பாடிய திருத்தொண்டத் தொகையில் கிடைக்கின்றது. சிவனடியார்களை வரிசைப்படுத்திப் பாடிய ஆரூரர், காரைக்கால் அம்மையரைப் 'பேயார்' என்று மட்டுமே குறிப்பிடுகின்றார்.

"பெருமிழலைக் குறும்பர்க்கும் பேயார்க்கும் அடியேன்"[3].

நம்பி ஆரூரர் காட்டும் குறிப்பிலிருந்து 'பேயார்' என்ற குறிப்பைத் தவிர்த்து, அவர் பிறந்த ஊர், அவருடைய வாழ்க்கை வரலாறு எதுவும் நமக்குப் புலப்படவில்லை.

சைவத் திருமுறைகளைத் தொகுத்தளித்த நம்பியாண்டார் நம்பி சைவத் திருத்தொண்டர்களைக் குறித்துத் திருத்தொண்டர் திருவந்தாதி என்ற தனி நூலினை இயற்றினார். இந்நூல் 11ஆம் திருமுறையில் இடம் பெற்றுள்ளது. நம்பி ஆரூரர் மிகச் சுருக்கமாகக் கூறிய செய்திகளைத் திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சேரமான் பெருமாள், நம்பியாரூரர் போன்ற சிலருடைய வரலாறுகளைத் தவிர்த்து, ஏனைய அடியார்களின் வரலாறுகளை ஒவ்வொரு பாடலில் தனித்தனியே நம்பியாண்டார் நம்பி விளக்கிச் செல்கிறார். அவ்வாறு விளக்கிச் செல்லும்போது, காரைக்கால் அம்மையாரைக் குறித்தும் அவர் சில புதிய செய்திகளைக் கூறுகின்றார். காரைக்கால் அம்மையார் சிவபெருமான் உறைகின்ற கைலாயத்தை மிதிக்க அஞ்சித் தலையால் நடந்து சென்றதும், அச்செயலைக் கண்டு உமாதேவியார் நகைத்தலும், உமாதேவியார்க்கு விடையாகக் காரைக்கால் அம்மையாரைச் சிவபெருமான் "என் அம்மை" என்று அழைத்ததும் இப்பாடலில் தெரிவிக்கப்படுகின்றன. இப்பாடலில் அம்மையார் காரைக்காலில் தோன்றியவர் என்ற குறிப்பும் கிடைக்கிறது. இப்பாடலிலும் அவருடைய இயற்பெயர் எதுவும் சுட்டப்படவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது. அப்பாடல் வருமாறு.

"நம்பன் திருமலை நான்மிதி
யேன்" என்று தாள் இரண்டும்
உம்பர் மிசைத்தலை யால் நடந்
தேற உமைநகலும்
செம்பொன் உருவன் "என்
அம்மை" எனப் பெற் றவள்செழுந்தேன்
கொம்பின் உகுகாரைக் காலினில்
மேய குலதனமே"[4].

**பெரியபுராணம் கூறும் செய்திகள்**

காரைக்கால் என்பது கடல் துறைமுகப்பட்டினம். கடலலைகள் சங்குகளைச் சுமந்து கரையேறி அவற்றைக் கழிகளில் இட, அதனால் வளம் பெருகத் திகழ்வதவ்வூர். அவ்வூரில் வணிகர்குலத்தலைவர் தனதத்தனார் என்பவர். அவர் செய்த தவத்தினால் அவருக்குத் திருமகள் வந்து அவதரித்தாள் என்று சொல்லும்படியாகச் சிவபெருமான் பற்றிய செய்திகளையே தன் குதலை மொழியால் பேசி மகிழ்ந்தார். சிவபெருமானிடத்து அன்புகொண்டு சிறுமியருடன் விளையாடும் போதெல்லாம் சிவபெருமானைப் பற்றிய மொழிகளையே பேசியவராய் வளர்ந்து பருவமடைந்தார்.

நாகப்பட்டினத்து நிதிபதி என்பாருடைய மகன் பரமதத்தனுக்குப் புனிதவதியாரை மணம்பேசித் திருமணம் செய்தனர். புனிதவதியார் ஒரே மகளாய் இருந்த காரணத்தால் அவரை நாகப்பட்டினத்திற்கு அனுப்பாமல், காரைக்காலிலேயே ஒரு வீடு அமைத்து அளவற்ற நிதியையும் கொடுத்து, அங்கேயே அவர்களைக் குடிவைத்தார் தனதத்தர். பரமதத்தனும் பெருங்காதல் சிறக்க வாழ்ந்து, மனைவளம் பெருக்கி, வாணிகத் துறையில் மேன்மையடைந்தான். புனிதவதியாரும் சிவபெருமானிடத்துப்

பக்திகொண்டு, அதனுடனே மனையறத்தின் பண்பும் வழாது வாழ்ந்தார். சிவனடியார்கள் வந்தால் அவர்களுக்கு நல்ல உணவும், உடையும், பொன்னும், மணியும் கொடுத்து வந்தனர்.

இவ்வாறு வாழ்ந்த நாளிலே, பரமதத்தனிடம் வந்து சேர்ந்த சிலர் இரு மாங்கனிகளைக் கொடுத்தனர். அவர்கள் வேலையை முடித்துக் கொடுத்த பரமதத்தன் அக்கனிகளை வீட்டிற்கு அனுப்பினான். அப்போது சிவனடியார் ஒருவர் மிகுந்த பசியோடு அவர்கள் வீட்டிற்கு வந்தார். அப்போது கறியமுது செய்யப்படாது, திருவமுது மட்டுமே தயாராகியிருக்க, அச்சிவனடியாரின் பசிதீர்க்க எண்ணிய அம்மையார் கணவன் அனுப்பிய மாங்கனிகளில் ஒன்றை வைத்து உணவு பரிமாறினார். மூப்பின் தளர்ச்சியாலும் பசியின் மிகுதியாலும் சோர்ந்திருந்த சிவனடியார், அம்மையார் அன்புடன் இட்ட உணவை உண்டு அவரது செயலை உவந்து சென்றனர்.

அதன்பின் பரமதத்தன் வீட்டிற்கு வந்து நீராடியபின், உணவுண்ண, அம்மையாரும் திருவமுதோடு, கறியும் எஞ்சியிருந்த மாங்கனியையும் பரிகலத்தில் இட்டார். மாங்கனி மிக்க சுவையுடன் இருந்தமையால் மற்ற கனியையும் இடுக எனக் கேட்டான் பரமதத்தன். அக்கனியைக் கொண்டுவருவார்போல் உள்ளே சென்ற அம்மையார், இடர்தீர்க்கும் சிவபெருமானின் திருவடிகளை மனத்தில் எண்ணியவராய் இருந்தார். அப்போது அவரது கையில் ஒரு அதிமதுரக் கனி வந்திருந்தது.

அக்கனியைக் கொண்டுவந்து கணவனுக்கு அளித்தார். அதை உண்ட பரமதத்தன் இது நான் முன்பு கொடுத்தனுப்பிய கனியன்று, மூவுலகிலும் கிடைத்தற்கு அரியது. இதனை எங்கிருந்து பெற்றாய்? என்று அம்மையாரைக் கேட்டான். இறைவன் தனக்களித்த பேரருளின் திறத்தை மற்றவர்க்குச் சொல்லல்

தக்கதன்று என்று சொல்லவும் முடியாதெனினும், கணவன் கேட்டதற்கு உண்மையைக் கூறாமல் இருத்தல் தவறு என்ற கருத்தால் உண்மையை உரைத்தார். இது சிவபெருமானின் திருவருளாயின் மற்றொரு கனி வரவழைத்துக் கொடுப்பாய் என்றான் பரமதத்தன். அம்மையார், இறைவனைத் தொழுது, "ஈங்கு இதனை அருள் செய்யாவிடில் என் உரை பொய்யாகும்" என்று வேண்ட, அவர் அருளாலே மற்றொரு பழமும் கையில் வந்தது. அதனைக் கணவன் கையில் கொடுத்தார். அவன் வாங்கிய உடன் பழம் மறைந்தது. உடனே அவன் அம்மையாரைத் தெய்வம் என்று கருதி, அவரை வீட்டு நீங்கிவிடுதல் வேண்டும் என்று முடிவு செய்தான். கடல் வழியாகக் கப்பலில் சென்று வணிகம், செய்து வருவேன் எனறு கூற, சுற்றத்தார்கள் அவனுக்கு மரக்கலம் அமைத்துக் கொடுத்தனர். கப்பல் ஏறிச் சென்ற பரமதத்தன் தான் கருதிய இடத்தை அடைந்து, அங்கு வாணிபத்துறையில் பெரும் பொருள் ஈட்டி, மீண்டும் கப்பல் ஏறிப் பாண்டி நாட்டில் உள்ளதொரு பட்டினத்தைச் சேர்ந்தான். அவ்வூரில் ஒரு வணிகனுடைய மகளை மணந்து கொண்டான். அம்மையாருக்குத் தான் செய்த வஞ்சனை வெளியில் தோன்றாதவாறு மனத்துள்ளே மறைத்துவைத்து, வெளியில் முகமலர்ச்சியுடன் வாழ்ந்தான். இவ்வாறு மிகுந்த செல்வம் பெருக வாழ்கின்ற நாளிலே, அவர்களுக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. பரமதத்தன் தன் முதல் மனைவியைத் தன்னுடைய குலதெய்வமாகக் கருதிய காரணத்தால் புனிதவதியார் என்ற இவருடைய பெயரையே குழந்தைக்கு இட்டான்.

இவ்வாறு இவன் இங்கு வாழ்ந்துவர, காரைக்கால் அம்மையார் கற்பு நிலைகளோடு தம்மனையில் அறம் புரிந்து வாழ்ந்து வந்தார். அப்போது அம்மையாரின் உறவினர், பரமதத்தன் பாண்டி நாட்டில் வாழ்வதைக் கேள்வியுற்று, தம் நெருங்கிய சுற்றத்தாரை அனுப்பி, உண்மையை அறிந்து உணர்ந்தார். அம்மையாரைச்

சிவிகையில் ஏற்றித் திரையால் மூடித், தோழியரும் சுற்றத்தாருமாகச் சிலநாள் நடந்து, கடந்துபோய், அந்தப் பட்டினத்தை அடைந்ததும், அவருடைய கணவனுக்குச் சொல்லி அனுப்பினர். உடனே, அவருடைய மனைவி மகளுடன் அங்குவந்து அம்மையாரின் அடிபணிந்து, யான் உன்னுடைய அருளாலே வாழ்கின்றேன். இவ்விளம் குழந்தைக்கும் உன்னுடைய பெயரையே இட்டிருக்கிறேன் என்று கூறினான். கணவன் தன்னை வணங்கக் கண்டு அம்மையார் அச்சத்தோடு சுற்றத்தாரிடம் ஒதுங்கி நின்றார். உடனே சுற்றத்தார் பரமதத்தனை நோக்கி உன் மனைவியை நீ வணங்குவதேன்? என்றனர். உடனே அவன், "இவர் மானிடப் பிறவி அல்லர், தெய்வமேயாவார். இதை அறிந்து நீங்கியபின் பெற்ற இக்குழந்தைக்கும் இவர் பெயரையே இட்டுள்ளேன். ஆதலாலே இவரை நீங்களும் பணியுங்கள்" என்று சொன்னான். சுற்றத்தாரும் இது என்ன என்று அதிசயத்து நின்றனர்.

வணிகன் சொன்னதைக் கேட்ட அம்மையார், இறைவன் திருவடியைத் தொழுது, "இங்கு இவன் குறித்த கொள்கை இது. இனி இவன் பொருட்டுத் தாங்கி நின்ற அழகை அழித்து உம்மிடம் உள்ள பூத கண்ங்கள் போற்றும் பேய் வடிவம் அடியேனுக்கு வேண்டும்'' என்று பரமனை வேண்டினார்[5]. அப்பொழுதே இறைவனுடைய திருவருளினால், ஊனையெல்லம் உதறிவிட்ட எலும்பு சேர்ந்த உடம்பேயாக, விண்ணும் மண்ணும் போற்றும் பேய் வடிவமானார். எங்கும் மலர் மழை பொழிந்தது; தேவ துந்துபிகள் முழங்கின; தேவரும் முனிவரும் ஆர்த்தனர். பூத கணங்கள் குணலைக் கூத்தாடின; அம்மையாருடன் இருந்த அவருடைய சுற்றத்தார்கள் அவரைத் தொழுது பயந்து நீங்கிப் போயினர்.

அப்பொழுது உண்டான ஞானத்தினால், இறைவனைப் பாடி, அம்மையார், "திருவடி போற்றும் நாற்கணத்தினில் ஒன்றானேன் நான்", என்று மகிழ்ந்து அற்புதத் திருவந்தாதி பாடியருளினார். திருவிரட்டை மணிமாலையினையும் அருளிச் செய்து, முப்புரங்களை எரித்தவராகிய சிவபெருமான் எழுந்தருளியிருந்த பெரிய கயிலாய மலையைச் சென்றடையும் பொருட்டு வடதிசை நோக்கிச் சென்றார்.

அவரைக் கண்டவர்கள் அஞ்சி பேய் ! பேய் ! என்று ஓடினர். இதனைக் கண்ட அம்மையார், இறைவன் என்னை அறிந்தால் அதுவே போதும். இதனை அறியாதா மக்களுக்கு நான் எந்நிலையில் இருந்தால் என்ன? என்று கூறி, வடதிசைத் தேயங்களை எல்லாம் காற்றினும் கடிது சென்று, கயிலையில் அருகில் வந்தார். அங்குக் காலினால் செல்வதை விடுத்து, தலையினால் நடந்து சென்றார். அதைக் கண்ட அம்பிகை அதிசயத்து, இறைவனை நோக்கித், "தலையினால் நடந்து இங்கே ஏறி வருகின்ற எலும்புடம்பின் அன்பு என்னே?" என்று கேட்க, இறைவன், "வருகின்ற இவள் நம்மைப் பேணும் அம்மையே ஆவாள்", இந்தப் பழமைசேர் வடிவத்தினையும் நம்மை வேண்டிப் பெற்றுக் கொண்டனள் என்றருளினார்.

அம்மையாரும் அருகேவர, ஐயன் "அம்மையே" என்றழைத்தார். அதுகேட்ட அம்மையார் "அப்பா" என்று கூறி, அவருடைய திருவடிகளில் வீழ்ந்து எழுந்து நின்றார். இறைவன் அவரை நோக்கி, "நம்மிடத்து இங்கு வேண்டுவது என்ன ?" என்று கேட்க, "என்றும் மாறாத இன்ப அன்பு வேண்டும் ; பிறவாமை வேண்டும் ; அன்றி மீண்டும் பிறப்பு உண்டேல் உன்னை என்றும் மறவாமை வேண்டும் ; இன்னும், நீ ஆடுகின்ற போது நான் மகிழ்ந்து பாடிக்கொண்டு உன் திருவடியின்கீழ் இருத்தல் வேண்டும்" என்கிறார். இதைச் சேக்கிழார்,

"இறவாத வின்ப வன்பு வேண்டிப்பின் வேண்டு கின்றார்
பிறவாமை வேண்டும் ; மீண்டும் பிறப்புண்டே லுன்னை யென்றும்
மறவாமை வேண்டும் ; இன்னும் வேண்டுநான் மகிழ்ந்து பாடி
யறவாநீயாடும் போதுன் னடியின்கீ ழிருக்க" என்கிறார்[5].

என்று கூறுகிறார். இறைவனும் உடனே தெற்குந் திசையில் உள்ள பழையனூர் என்னும் பழம்பதியாக நிலவிய திருவாலங்காட்டில் நாம் ஆடுகின்ற பெருநடனத்தையும் நீர்கண்டு, எப்போதும் ஆனந்தத்துடன் நம்மைப் பாடிக் கொண்டிருப்பாயாக, என்று அருள் செய்தார். அம்மையாரும் இறைவனை வணங்கிக் கயிலையினின்றும் பேரன்போடும் திருவாலங்காட்டினைத் தலையினால் நடந்து அப்போதே சேர்ந்தனர்.

அங்கு அண்டமுற நிமிர்ந்தாடுகின்ற ஐயனது பெருங்கோலத்தினைக் காணும்பொழுது, "கொங்கை திரங்கி" என்று தொடங்கி மூத்த திருப்பதிகத்தினைப் பாடி அத்திருத்தலத்தினைச் சார்ந்து திருக்கூத்தைப் பாடிப் போற்றி, அங்கேயே எழுந்தருளினார். குழகன் ஆடும் என்ற கருத்துடன் 'எட்டி இலவம்' என்ற பதிகத்தினையும் பாடினார். இவ்வாறு ஐயனுடைய எடுத்த பாத நிழலிலே அம்மையார் என்றுமிருக்கும் பேறு பெற்றனர்.

பெரியபுராணம் காட்டுகின்ற அம்மையார் வாழ்விலிருந்து பின்வரும் செய்திகளை அறிகிறோம்.

1. அம்மையார் செல்வக்குடியில் பிறந்தவர். அவருக்குப் பெற்றோர் இட்ட பெயர் புனிதவதி.

2. அம்மையாருடைய கணவன் அம்மையாரைப் போன்று இறைவழிபாட்டில் ஊறித்திளைத்தவன் அல்லன் ; அவனுடைய இறை நம்பிக்கை உறுதியானதன்று.

3. சிவனடியார் உணவு கேட்டு அம்மையார் இல்லத்திற்கு வருகிறார்

4. அம்மையார் இறைவனிடம் வேண்டாமலே அவர் கையில் இறைவன் அருளால் மாங்கனி வந்து அமர்கின்றது. கணவனுடைய ஐயத்தைப் போக்குவதற்கே அவர் இரண்டாவது மாங்கனியை இறைவனிடம் வேண்டிப் பெறுகிறார்.

5. அம்மையாருடைய கணவன் பாண்டிய நாட்டில் மனைவியோடு வாழ்ந்த இடம் இன்னது என்று பெரியபுராணத்தில் தெளிவாகக் குறிக்கப்படவில்லை.

6. அம்மையார் என்பு வடிவம் பெற்ற உடனேயே அற்புதத் திருவந்தாதியும் திருவிரட்டை மணிமாலையும் பாடுகின்றார்; அவை பாண்டிய நாட்டில் பாடப்பெற்றவை.

7. அவர் கயிலையில் இறைவன் முன்னிலையில் பாடல் எதுவும் பாடவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. இவ்விடத்தில் சேரமான் பெருமாள் நாயனார் திருக்கயிலாயத்தில் ஞான உலாப் பாடினார் என்பது ஒப்பிடத்தக்கது.

8. சிவபெருமான் அம்மையாரைத் திருவாலங்காட்டிற்கு அனுப்பியதற்கான காரணம் பெரியபுராணத்தில் சுட்டப்படவில்லை.

9. அம்மையார் திருவாலங்காட்டில் மூத்த திருப்பதிகங்கள் இரண்டையும் பாடுகின்றார்.

10. அம்மையார் திருவாலங்காட்டில் சிவபெருமான் திருவடியில் என்றும் உறைகின்றார்.

காரைக்கால் அம்மையாரைப் பற்றிய செய்திகளை முதன் முதலில் நம்பி ஆரூரரின் திருத்தொண்டத் தொகையும், நம்பியாண்டார் நம்பியின் திருத்தொண்டர் திருவந்தாதியும், வரலாற்றைச் சேக்கிழாரின் பெரியபுராணமும் எடுத்தியம்பின.

வேதவியாச முனிவரால் இயற்றப்பட்டு, ஸ்ரீ சுப்பராய சாஸ்திரி அவர்களால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்ட காரைக்கால் தலபுராணம் காலத்தால் பிற்பட்டது. எனினும் இந்நூலில் அம்மையார் பற்றிய புதிய செய்திகள் கிடைக்கின்ற காரணத்தால் இந்நூல் ஆய்வுக்கு உதவுவதாக அமைகிறது.

### 2.1.1 காரைக்கால் தலபுராணத்தில் கிடைக்கின்ற செய்திகள்

1. சுதாம்ச சுந்தர சோழன் காலத்தில், தும்புரு முனிவர் மகள் சுமதி காரைக்காலில் தங்கிச் சிவபூசை செய்து வந்தாள். அங்கு வந்த துருவாச முனிவர், அவள் தம்மை அலட்சியம் செய்தாள் என்பதால் மானுடப் பெண்ணாகப் பிறப்பாய் என்று சபித்தார். பின் சுமதியின் வேண்டுகோளுக்கிணங்கித் தனதத்தன் என்ற வைசியனுக்கு மகளாய்ப் பிறந்து, சிவஞானம் எய்தி முத்தியடைவாய் என வரங்கொடுத்தார்.

2. தனதத்தனும் தருமவதியும் நோன்பு நோற்றுப் பெற்ற பெண்ணிற்குப் 'பூதவதி' என்று பெயரிட்டு அருமையாக வளர்த்தனர். பூதவதி ஏழாவது வயதில் முத்தியை விரும்பிச் சிவனடியார்க்குத் தொண்டு செய்யத் தொடங்கினாள்.

3. பூதவதியை நாகப்பட்டினத்தைச் சேர்ந்த பரமத்தனுக்கு மணம் முடித்தனர்.

4. பூதவதியுடன் பரமதத்தன் நாள்தோறும் ஆயிரம் சைவர்களுக்கு அன்னம் அளித்துப் பூசிப்பது வழக்கம்.

5. பூதவதிக்கு அருள்புரிய எண்ணிய சிவபெருமான், சிவனடியார் வேடத்தில் பூதவதியார் இல்லத்திற்கு வந்து மிகப் பசித்தவர் போலப் பேசினார். அம்மையார் பாலன்னமும் மாங்கனியும் படைக்க, அதை உண்டுவிட்டுச் சிவனடியார் மறைந்தார்.

6. அம்மையாரைத் தெய்வம் என உணர்ந்து, கடல்கடந்து பொருளீட்டிக் கொண்டு திரும்பிய பரமதத்தன், பாண்டி நாட்டில், பொருநை ஆறு கடலில் கலக்கும் இடத்திற்கு அருகில் 'கனகலம்' என்னும் நகரத்தில் வீடுவாங்கி அங்கே வாழ்ந்து வந்தார்.

7. கணவன் கருத்தை அறிந்ததும் அம்மையார் தன் செல்வங்கள் அனைத்தையும் பிராமணர்களுக்குத் தானஞ்செய்து இறைவனை வேண்டிப் பேயுருப் பெற்றார். இது நடந்ததும், 'கனகலம்' என்னும் பட்டினத்திலே ஆகும்.

8. அம்மையார் தன் தவத்தின் மகிமையால் கைகளைக் கால்களாகக் கொண்டு தலைகீழாகக் கைலாயத்திற்குச் சென்றார். இதைக் கண்ட பரமேசுவரி, பரமசிவனிடம், 'ஓ, சுவாமி ! தேவரீர் சமீபத்தை யெண்ணித் தலைகீழாகக் கைலாச மலையில் இருபத்து நாலாயிரம் யோசனை தூரம் நடந்துவரும் இவள் தவத்தின் மகிமையை எனக்குணர்த்தல் வேண்டும்' என்று வேண்டுகிறார்.

9. அருகில் வந்த அம்மையாரைச் சிவபெருமான் 'அம்மையே' என அழைத்து, நீ வேண்டுவது யாது? எனக் கேட்க அம்மையார்



ஆனந்த தாண்டவம் தரிசிக்க வேண்டும் என்று கூறுகிறார். ஐயன் திருவாலங்காட்டிற்கு வரும்படியாகப் பணிக்க, அவ்வளவு சேய்மைக்கு ஏக, எனக்கு ஆற்றல் இல்லை என்று, ஐயன் பாதத்தை அம்மையார் பற்றிக் கொள்ள விரைந்தோடிவர, இறைவன் மறைந்து போனார். ஆனால், அம்மையாரைக் கணபதி தன்கைகளால் தூக்கி எடுத்துத் திருவாலங்காட்டில் சேர்ப்பித்தார்.

புதுவைச் செய்திகள் என்ற இதழில் செப்டம்பர் 1972–இல் வெளியான 'பிரமாண்ட புராணத்தில் அம்மையார் வரலாறு' என்ற தலைப்பில் புலவர் மு.த. வேலாயுதனார் எழுதிய கட்டுரையிலிருந்து சில செய்திகள் கிடைக்கின்றன.

### 2.1.2 பிரமாண்ட புராணத்தில் அம்மையார் வரலாறு

பிரமாண்ட புராணத்தில் காரைக்கால் அம்மையாரைப் பற்றிக் காணக்கிடைக்கின்ற செய்திகளில் ஒரு சில செய்திகளைத் தவிர ஏனைய செய்திகள் காரைக்கால் தலபுராணத்தில் காணக்கிடைக்கின்ற செய்திகளை ஒத்துள்ளன. அவற்றுள் முக்கியமானவை வருமாறு.

1. ஒருநாள் சிவனடியார் ஒருவர் ஒரு கொம்பிலே தொங்கும் இரண்டு தேமாங்கனிகளைப் பரமதத்தனுக்குக் காணிக்கையாகக் கொடுத்தார். அதை அவர் பூதவதியிடம் கொடுக்க, பூதவதியும் அப்பழங்களைப் பாதுகாப்பாக வைத்தார். அம்மையாரைச் சோதிக்க எண்ணிய சிவன், அடியார் வேடத்தில் வந்து, மாங்கனியுடன் உணவு உண்டு மறைந்து போனார்.

2. பரமதத்தன் 'கனகலம்' என்ற இடத்தில் குடியேறி, அங்கு ஒரு பெண்ணை மணந்து, அவர்களுக்குப் பிறந்த குழந்தைக்குப் பூதவதி எனப் பெயரிட்டான்.

3. இறைவனை வேண்டிப் பேயுருப் பெற்ற அம்மையார், தலைகீழாய் நடந்து கயிலை சென்று, சிவபெருமானின் ஆணையால் திருவாலங்காட்டிற்கு வந்து ஆனந்த தாண்டவங் கண்டார். பின் சிவபெருமான் பேயம்மையைக் கயிலாய மலைக்கு அழைத்துச் சென்று சாமீப்பியமுத்தி அளித்தார்.

இதுபோல் திருமருகல் சிங்காரவேலனார் எழுதிய தெய்வீகப் பெண்மணிகள் என்ற நூலில் அடங்கியுள்ள தசை களைந்த மெய்யொளிசேர்ந்த அம்மையார் என்ற கட்டுரையும், திருமுருக கிருபானந்தவாரியாரால் எழுதப்பட்ட 'சிவனருட்செல்வர்' என்ற நூலிலும், புல்லடீன் (Bulletin) என்ற நூலில் 'காரைக்காலம்மையார் – துறவியும் கவியும்' (Karaikkalammaiyar, Saint and Poetess) என்று டோரதி பிக்கில் (Dorothy Fickle) எழுதிய கட்டுரையும் இங்கு எடுத்துக்காட்டப்படுகின்றன.

### 2.1.3 தெய்வீகப் பெண்மணிகள்

1. புனிதவதியார் சிவனடியார்களுக்குத் தொண்டுசெய்வதில் கிடைக்கக் கூடிய அருட் செல்வத்தைப் பெரிதாக நினைக்க, பரமதத்தன் அதனால் செலவாகக் கூடிய பொருட் செல்வத்தைப் பற்றிக் கவலை கொண்டான்.

2. வட இந்தியாவிலிருந்து வந்திருந்த ஒரு வர்த்தகக் குழுவினர் பரமதத்தனைச் சந்தித்தபோது மரியாதையின் அடையாளமாக முற்றிலும் புதுமையான இனத்தைச் சேர்ந்ததும் மிகவும் உயர்ந்த சுவை படைத்ததுமான இரண்டு மாங்கனிகளை அவனுக்கு அன்பளிப்பாகத் தந்தனர்.

3. கணவன் இரண்டாவது மாம்பழத்தைக் கேட்டபோது, செய்வதறியாத அம்மையார் பழம் வைத்திருந்த பாத்திரத்தில் கையைவிட்டுப் பார்த்தார். அதில் பழம் இருந்தது.

அம்மையார் பற்றி அறியக்கிடைக்கின்ற வாய்மொழிக் கதையிலும், இவ்வடிவம் நமக்குக் கிடைக்கின்றது.

4. பரமதத்தன் அனுப்பிய பழங்கள் தங்க நிறமுடையன. புனிதவதியார் வைத்த பழம் சிவப்பு நிறமாக இருந்தது. பார்த்த உடன் இவை தான் அனுப்பிய பழம் அல்ல என்பதை உணர்ந்து கொண்டான்.

5. பரமதத்தனின் இரண்டாவது மனைவி பேசுவதாக எந்த நூலிலும் காணப்படவில்லை. ஆனால், இந்நூலில் ஆசிரியர் அவரைப் பேச வைக்கிறார்.

### 2.1.4 சிவனருட் செல்வர்

திருவாலங்காட்டில், எம்பிரான், அண்டங்களில் பொருந்தத் திருவடியைத் தூக்கி ஊர்த்துவ தாண்டவம் செய்வதை அம்மையார் தரிசித்து மூத்த திருப்பதிகங்கள் இரண்டையும் பாடியருளினார்.

## 2.1.5 Karaikkalammaiyar, Saint and Poetess

1. துறைமுகம் அமைந்த நாகப்பட்டினத்தின் அருகில் உள்ள தென்கிழக்குக் கரை அமைந்த காரைக்கால் என்ற கிராமத்தின் தலைவனின் மகள் புனிதவதி. தந்தை அவளை அன்புடன் வளர்த்து, நல்ல கல்வியைத் தந்தார்.

2. கணவன் கொடுத்தனுப்பிய இரண்டு மாங்கனிகளில் ஒன்றைச் சிவனடியாருக்குப் படைத்துவிட, கணவன் இரண்டாவது பழத்தையும் கேட்டபோது செய்வதறியாத அம்மையார் சிவபெருமானிடத்தில் சென்று சிவனடியாருக்கு அளித்த அந்தப் பழத்திற்குப் பதிலாக வேறொரு பழத்தைக் கொடுக்கும்படி வேண்டினார்.

### 2.1.6 கன்னட மொழியில் காரைக்கால் அம்மையார்

'ரகளே' என்ற கவிதை அமைப்பில் ஹரிஹரர் பெரியபுராணத்தைக் கன்னட மொழியில் இயற்றியுள்ளார். இந்நூலில் பெரும்பகுதி பெரியபுராணத்திலிருந்து மாறுபட்டதாகும்.

காரைக்காலம்மையின் கணவனின் பெயர் மாணிக்கஞ்செட்டி என்பதாகும். பேய் வடிவெடுத்த அம்மையார் தலையால் நடந்து சென்று கொண்டிருக்க, சுந்தரமூர்த்தி நாயனாரும், சேரமான் பெருமாளும் கயிலைக்குச் செல்லும் வழியில் அவரைக் கண்டு, கயிலை மிகநீண்ட தொலைவில் உள்ளது என்றும் இவ்வாறு மெல்லத் தலையால் நடந்து சென்றால் பலகாலம் ஆகும் என்றும் கூறிவிட்டனர். உடனே அம்மையார் கண்ணீர்விட்டுக் கதறி அழுகின்றார். அக்கண்ணீர் ஆறாகப் பெருகிக் கயிலையைச் சென்று அடைய, அதைக்கண்ட சிவபெருமான் அக்கண்ணீர் ஆற்றிலேயே அம்மையார் மிதந்து மிக வேகமாகத் தம்மை வந்து அடையும்படிச் செய்கிறார்[7]. இதுவே ஹரிஹரர் எழுதிய காரைக்கால் அம்மையின் கதையாகும்.

## 2.2 பெரியபுராணத்தில் அற்புத நிகழ்ச்சிகள்

புனிதவதி என்னும் காரைக்கால் அம்மையார் இறைவனிடமிருந்து இரண்டு மாங்கனிகள் பெற்றதும் (1741, 1746) தசைப்பொதி உதிர்த்து பேயுருத் தாங்கி, (1766) கைகளால் கைலையை நடந்து சென்றதும் (1771) அற்புதச் செயல்களாம்[8].

## 2.3 பெரியபுராண இல்லறப் பெண்டிர்

பெரியபுராணத்துள் இடம்பெறும் இல்லறப் பெண்டிர்,

1. அன்புடைமையை முதன்மையாக் கொண்டு திகழ்ந்தனர்.

2. பெரியோரைப் போற்றுவதையும், விருந்தோம்புவதையும், தொண்டு செய்தலையும் தலையாய பணியாகக் கொண்டொழுகினர்.

3. ஒழுக்கம் மிகப் போற்றி வாழ்ந்தனர்.

4. இறைவனைத் தெய்வமாகக் கொள்ளும் கற்புநெறி வாழ்க்கையைக் கொண்டிலங்கினர்.

5. கணவன் சொல்லுக்கு அல்லது செயலுக்கு எந்நிலையிலும் எதிர்பேசாத ஏற்றமிகு வாழ்க்கை வாழ்ந்தனர்[9].

## 2.4 அம்மையார் பெயர் ஆய்வு

அம்மையார் பெயர் பெரியபுராணத்தில் புனிதவதியார் எனக் குறிக்கப்படுகிறது. அதுபோன்றே அவர் தந்தையார் தனதத்தன், கணவன் பரமதத்தன், மாமனார் நிதிபதி என்று கூறப்படுகிறது. தனதத்தன் என்பதும் நிதிபதி என்பதும் செல்வத்தைக் குறிக்கும் பெயர்கள். அவர்கள் செல்வச் செழிப்பிலே திளைத்தனர் என்பதைக் குறிக்கவே இப்பெயர்கள் அவர்களுக்கு இடப்பட்டன.

இப்பெயர்கள்யாவும் வரலாற்றைக் கூறுவதற்காகக் காப்பிய ஆசிரியர்கள் அமைத்துக் கொள்ளும் கற்பனைப் பெயர்களேயாம்[10].

அம்மையார் வாழ்வு முற்றிலும் தூய்மைக்கு இலக்காய் விளங்கிய காரணத்தால் புனிதவதியார் எனப் பெயரமைத்தது பொருத்தமேயாம். நாயன்மார்கள் 63 பேரில் வரலாற்றுக்குரிய அகச்சான்றுடையவர்கள் திருமூலர், அப்பர், சுந்தரர், சம்பந்தர்,

சேரமான் பெருமாள், ஐயடிகள் காடவர்கோன், அம்மையார் ஆகிய எழுவர் ஆவர்[11]. சைவத் திருமுறைகளில் இவர்களுடைய பாடல்கள் இடம்பெற்றுள்ளன. காரைக்கால் அம்மையார் தம் பாடல்களில் தன்னைப் பேய் என்றே குறித்துள்ளார்.

'காரைக்காற் பேய் செப்பிய செந்தமிழ்'[12]

எனக் "கொங்கை திரங்கி" என்ற முதற் குறிப்புடைய மூத்த திருப்பதிகத்தின் இறுதிப் பாடலாகிய திருக்கடைக்காப்பிலும்,

"ஆடும் அரவம் அரையில்
ஆர்த்த அடிகள் அருளாலே
காடு மலிந்த கனல்வாய்
எயிற்றுக் காரைக்காற்பேய்தன் பாடல்" [13]

என்றும் 'எட்டி இலவம்' என்ற பதிகத்தின் திருக்கடைக்காப்பிலும்,

'கரைவினால் காரைக்கால் பேய்ச்சொல் பரவுவார்[14]"

என அற்புதத் திருவந்தாதியின் இறுதிச் செய்யுளிலும் அம்மையார் தம்மைக் 'காரைக்காற் பேய்' என்று குறித்துள்ளார்.

அம்மையார் அருளிச்செய்த இப்பாக்கள் வாயிலாக நமக்குக் கிடைப்பன அம்மையார் பிறந்தருளிய ஊர் சோழநாட்டிலுள்ள காரைக்கால் என்னும் ஊர் என்பதும், அவர்க்கு வழங்கிய பெயர் பேயார் என்பதும் நன்கு புலனாகும். சுந்தரர் தம்முடைய திருத்தொண்டத்தொகையில் "பெருமிழலைக் குறும்பர்க்கும் பேயார்க்கும் அடியேன்"[15] என்று அம்மையாரைப் பேயார் என்ற பெயராலேயே குறிப்பிட்டுள்ளார். "கவுணியர்

நாவுக்கரசர் பேயார் இம்மூவர் கற்கும் இயலிசை வல்லோர்[16]" என்று சேக்கிழார் புராணம் கூறுகிறது.

எனினும் பேயார் என்பது பண்டு இயற்பெயராகவே வழங்கிவந்துள்ளது. உதாரணமாக, பேய்மகள் இளவெயினி[17], பேயாழ்வார்[18], பேயனார்[19], அகப்பேய்ச் சித்தர்[20], பேய்ச்சியம்மன்[21], போன்ற பெயர்கள் பேய் என்ற சொல்லைத்தாங்கி அமைந்துள்ளன. இதுபோலவே அம்மையாரின் பெயரும் 'பேய்' என்றே இருந்திருக்கக்கூடும். எனவேதான் பேயார், காரைக்கால் பேயார், பேயம்மையார் என்றெல்லாம் அழைக்கப்படுகிறார்.

மேலும், அம்மையாருக்குப் பூதவதி என்ற பெயரைக் காரைக்கால் தலபுராணமும், பிரமாண்ட புராணமும் இயம்புகின்றன.

திருஞான சம்பந்தர் திருத்தெளிச்சேரிக்கு வந்தபோது அங்கிருந்த சிவபெருமான்மீது பதிகம் பாடினார். அப்பதிகம் பற்றிய குறிப்பில்,

"இவ்வூருக்கு அணிமையில் போதிமங்கை என்னும் ஊர் இருக்கிறது. அவ்வூர் பௌத்தர்கள் வசிக்கப்பெற்றது. அதன் வழியாக ஞான சம்பந்தரது அடியார் திருக்கூட்டம் பரசமய கோளரி, வந்தார் என்று முத்துச் சின்னங்களை ஊதிச் சென்றது. அதைப்பொறாத பௌத்தர்கள் தடுத்தனர். . . . . . . "[22] என்ற குறிப்புள்ளது.

இங்குக் கூறப்பட்ட போதிமங்கை என்ற ஊர் அம்மையாரைக் குறிப்பதாகக் கொள்ளலாம். பூதவதி என்று அம்மையாருக்குப் பெயர் சுட்டப்படுவதால் இவ்வூர் பூதமங்கை என்றிருந்து பின் போதிமங்கையாகத் திரிந்திருக்கலாம். பூதம் என்ற சொல்லில் அச்சம் கொண்ட மக்கள் அதைப் போதி என்று

மாற்றியிருக்கலாம். போதி என்பதற்கு 'ஞானம்' என்றொரு பொருள் உண்டு. அம்மையார் ஞானம் பெற்றவர். இறைஞானம் பெற்றவர் என்ற பொருளில் காரைக்கால் அன்று போதிமங்கை என்றழைக்கப்பட்டிருக்கலாம். திருவாரூர் அருகில் இன்றும் பூதமங்கலம் என்றொரு கிராமம் இருப்பது ஈண்டு எண்ணத்தக்கது.

காரைக்காலைச் சுற்றியுள்ள திருத்தருமபுரம், தக்களூர், திருத்தெளிச்சேரி, திருவேட்டக்குடி, முதலிய திருத்தலங்கள் நாயன்மார்களால் பாடப்பெற்றத் திருத்தலங்கள். காரைக்கால் நகருக்கு மட்டும் பாடல் இல்லை. காரணம், திருவாலங்காட்டுக்கு அம்மையார் தலையால் நடந்து சென்றார் என்ற காரணத்தால் ஞானசம்பந்தர் அப்பதியைத் தன் தாளால் கடக்க அஞ்சி எல்லையிலேயே நின்றுவிட்டார் என்று பெரியபுராணம் குறிப்பிடுகின்றது[23]. அதுபோல், சம்பந்தர், அப்பர், சுந்தரர் மூவருமே காரைக்காலைச் சுற்றியுள்ள தலங்களை வழிபட்டவர்கள் அம்மையார் பிறந்தருளிய தலத்தைக் காலால் மிதிக்க அஞ்சிப் புறத்தில் நின்று தொழுதுபோயிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது.

தலையால் நடந்து சிவபெருமானைக்காண கைலைக்குச் சென்ற பேயாரைக் கண்ட ஐயன் 'அம்மையே' என்றழைத்த காரணத்தால் அனைவருக்கும் இவர் அம்மையானார். இது இவருக்கு அமைந்த காரணப்பெயர். ஒருவரைச் சுட்டிக் காட்டும்போது அவருடைய பெயரை அவர் ஊருடன் இணைத்துக் கூறுதல் மரபு. மதுரைக் கணக்காயனார், கூடலூர் கிழார், ஆவூர் கிழார் போன்ற பெயர்கள் இதற்குச் சான்றாகும். இவ்வடிப்படையில் அம்மையார் பிறந்து வளர்ந்த ஊரான காரைக்காலுடன் இணைத்துக் காரைக்கால் அம்மையார் என்று அழைக்கப்படுகிறார்.

இவற்றை நோக்க அம்மையாரின் பெயர் பேய் என்று கொள்ளலாம். 'பேய்' என்ற சொல்லின் கொடுமையைக் கண்டு அஞ்சியவர்கள் அச்சொல்லினும் வன்மை குறைந்த 'பூதம்' என்ற சொல்லை இட்டுப் 'பூதவதி' என்று அம்மையார் பெயரை மாற்றினர். பூதமும் அச்சம் தரத்தக்கதொன்று. மேலும் அம்மையார் இறையடி சேர்ந்து புனிதம் பெற்றதால் புனிதவதியார் என்று பெரியபுராண ஆசிரியர் பெயரை மாற்றினார்.

பொதுவாக மக்கள் அம்மையார் பாடல்களை அறிந்ததைவிட, பெரியபுராணத்தையே மிகப்பரவலாக அறிந்துள்ள காரணத்தால் புனிதவதியார் என்ற பெயரையே அம்மையாரின் இயற்பெயர்போல் வழக்கில் உள்ளது நினைவுகூரத்தக்கது.

## 2.5 முடிவுரை

நாயன்மார்களில் காலத்தால் முற்பட்ட அம்மையாரைப் பற்றி, அறிந்துகொள்ள உறுதுணையாய் உள்ள முதல்நூல் பெரியபுராணமே ஆகும். இந்நூலை அடியொற்றியே பின்னர் வந்தவர்கள் அம்மையாரைப்பற்றிக் கூறியுள்ளனர். நம்பியாண்டார் நம்பியும், சுந்தரரும் தம் நூல்களில் அம்மையாரைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளனர்.

பெரியபுராணத்தில் பரமதத்தன் கொடுத்தனுப்பிய இரண்டு கனிகளில் ஒன்றைச் சிவனடியாருக்குப் படைத்துவிட்டார் அம்மையார். பின்னர் உணவு உண்ணவந்த பரமதத்தன் ஒரு பழத்தை உண்டபின் மற்ற பழத்தையும் கேட்க, செய்வதறியாத அம்மையார் பரமன் தாளை நினைந்து நிற்க, ஒரு பழத்தைப் பரமன் தருகிறார். மீண்டுமொரு பழத்தைப் பெற்றுக்கொடுக்கும்படி பரமதத்தன் கேட்டதால் மீண்டும் ஒரு பழத்தை இறைவன் கொடுக்கிறார். ஆனால், இரண்டாவது வந்த பழம் மறைந்து விடுகிறது. இதற்குக் காரணம் :

முதல்முறையில் புனிதவதியார் இறைவன்பாற் பெற்றுத்தந்த பழத்தினை இது திருவருளாற் கிடைத்ததோ என்னும் ஆராய்ச்சியின்றித் தான் அனுப்பிய கனியாகவே பரமதத்தன் கருதினமையாலும், சிவனடியாருக்கு உணவாகிய அவனது பொருள் மீண்டும் பயன்வகையால் நுகரப்படுதல் முறையாதலாலும், அஃது அவனுக்கு உணவாயிற்று. இரண்டாம் முறையாக வேண்டிப்பெற்ற கனி, பரமதத்தன் இறைவனது திருவருளை ஐயுற்றுச் சோதித்தற்பொருட்டு மீண்டும் மனைவியாரைக் கொண்டு வேண்டிய நிலையில் அவனது ஐயத்தைத் தீர்த்தலொன்றே கருதி அளிக்கப்பட்டதாதலின் அவனது நுகர்ச்சியொடுபட்ட ஆராய்ச்சிக்கு அகப்படாது காணாமல் மறைந்து விட்டது[24]. இவ்வாறு பழம் மறைந்தமைக்குக் காரணம் கூறலாம்.

அம்மையாரைப்பற்றி மாறுபட்ட செய்திகள் காணக் கிடைக்கின்றன. இவர் பெயர் பூதவதி என்றும், இவர் ஏழுவயதில் முத்தியை விரும்பி நோன்பு மேற்கொண்டார் என்றும், கணவனுடன் சேர்ந்து நாள்தோறும் ஆயிரம் சைவர்களுக்கு உணவளித்தார் என்றும் அம்மையாருக்கு அருள்புரியச் சிவபெருமானே அடியார் வேடத்தில் வந்து உணவுண்டு மறைந்தார் என்றும், பரமதத்தன் பாண்டி நாட்டில் 'கனகலம்' என்ற இடத்தில் வீடுவாங்கி வசித்து வந்தான் என்றும், கயிலைக்குச் செல்ல அம்மையார் இருபத்து நாலாயிரம் யோசனைதூரம் தலையால் நடந்து சென்றார் என்றும், இறைவன் காட்சியளிக்க அம்மையைத் திருவாலங்காட்டுக்கு வரும்படிப் பணிக்க கணபதி தூக்கிச் சென்றார் என்றும், சிவபெருமானே அடியார் வடிவில் வந்தார் என்றும் மாறுபட்ட கருத்துக்கள் காணப்படுகின்றன.

சங்ககாலத்தில் பேய் என்ற பெயர் பலருக்குக் காணப்படுகிறது. புறநானூற்றில் பதினோராவது பாடலைப் பாடியவர்

பேய்மகள் இளவெயினி என்ற பெண்பாற்புலவர். ஐங்குறுநூற்றில் முல்லைத்திணை பாடல்களை இயற்றியவர் பேயனார் என்ற ஆண்பாற்புலவர். பேயாழ்வார், பூதத்தாழ்வார், பொய்கையாழ்வார் என்ற முதலாழ்வார் மூவரும் காரைக்கால் அம்மையார் காலத்தில் வாழ்ந்ததாகக் கூறுவர் தமிழண்ணல்[25]. சங்ககாலத்தோடு ஒட்டிய காலத்தில் அம்மையார் வாழ்ந்தார் என்பதாலும் முதலாழ்வார்கள் காலத்தில் வாழ்ந்தார் என்பதாலும் அம்மையாருக்கும் 'பேய்' என்ற பெயர் இயற்பெயராக இருக்க வாய்ப்புண்டு.

பேய் என்ற சொல், பக்தி இயக்க காலத்தில், கடவுள் நெறிக்கு மாறுபட்டு விளங்கிய காரணத்தால், அக்காலகட்டத்தில் அம்மையார் பூதவதி என்று அழைக்கப்பட்டு, இப்பெயரில் சேக்கிழாருக்கு உடன்பாடு இல்லாமையால் புனிதவதியாராக மாற்றப்பட்டிருக்கலாம்.

<u>சான்றெண் விளக்கம்</u>

1. தமிழண்ணல், புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, ப.223
2. சீனிவாசன், ரா., தமிழிலக்கிய வரலாறு, ப.
3. சுந்தரர் தேவாரம், திருத்தொண்டத்தொகை, பா.4
4. நம்பியாண்டார் நம்பி, திருத்தொண்டர் திருவந்தாதி, பா.28
5. பெரியபுராணம், காரைக்கால் அம்மையார் புராணம், பா.49
6. மேலது., பா.60
7. ஞானசம்பந்தன், அ.ச., பெரியபுராணம் ஓர் ஆய்வு, ப.435

8. வையை, மதுரைப் பல்கலைக்கழகம், 1974, பா.235

9. ஆய்வுக்கோவை, தொகுதி 1, தமிழ்நாடு வேளாண்மைப் பல்கலைக்கழகம், 1978, ப.166

10. திருநாவுக்கரசு, மறை., பெரியபுராண ஆய்வுரை, ப.80

11. மேலது., ப.81

12. திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம், பா.11

13. மேலது. , பா.11

14. அற்புதத் திருவந்தாதி, பா.101.

15. ஏழாம் திருமுறை, திருத்தொண்டத்தொகை, பா.4

16. சேக்கிழார் புராணம், செய்யுள் 46

17. பேய்மகள் இளவெயினி, புறநானூற்றில் 11 ஆவது பாடலைப் பாடியவர். இளவெயினியார் என்பவர் இளமையிலேயே இறந்து, பின் பேய் வடிவினைப் பெற்றனர் போலும். சேரமானின் மறத்திறத்தையும் கொடைத் திறத்தையும் இவர் போற்றிப் பாடியுள்ளார். 'ஒவ்வொருவரும் இவனைப் பாடி பரிசில் பெற்றனர்; ஆயின், யானோ, காணற்கு இயலார் பேயுருளினள் ஆதலின் யாதும் பெற்றிலேன்,

என்று இரங்குவது போலப் பாடல் அமைந்திருப்பது குறிக்கத்தக்கது.

(புறநானூறு – புலியூர் கேசிகன் உரை – பாடியோர்வரலாறு)

18. பேயாழ்வார், நாலாயிரத் திவ்வியப் பிரபந்த, மூன்றாம் திருவந்தாதி பாடியவர்.

19. ஐங்குறு நூற்றில் முல்லைத்திணைப் பாடல்கள் இயற்றியவர்.

20. சித்தர்களில் ஒருவர்.

21. கிராமத் தெய்வங்களில் ஒன்று.

22. திருஞான சம்பந்தர், தேவாரத் திருப்பதிகங்கள், பக்.96–97

23. பெரியபுராணம், திருஞான சம்பந்தர் புராணம், செய்யுள், 1008

24. வெள்ளை வாரணம், க., பன்னிரு திருமுறை வரலாறு, ப.681

25. தமிழண்ணல், புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, ப.226

*"சங்கரனைத் தாழ்ந்த சடையானை அச்சடைமேல்*
*பொங்கரவம் வைத்துகந்த புண்ணியனை — அங்கொருநாள்*
*ஆவாவென் றாழாமைக் காப்பானை அப்பொழுதும்*
*ஓவாது நெஞ்சே உரை"*

*— திருவிரட்டை மணிமாலை*

# 3. காரைக்கால் அம்மையார் இயற்றிய நூல்கள் - மதிப்பீடு

## முன்னுரை

பக்தி இலக்கியத்தில் சைவ வைணவப் பெரியார்கள் அனைவருக்கும் முன்னோடியாகத் தோன்றி, பக்தி இலக்கியத்திற்கும் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கும் வித்திட்ட முதல் பெருமை காரைக்கால் அம்மையார் அவர்களையே சாரும். பிற்காலத்தில் தோன்றிய திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஆகிய தேவாரம் பாடிய மூவர் முதலிகளைப் போன்று அம்மையார் பாடல்கள் எண்ணிக்கை அளவில் மிகுந்தன அல்லவெனினும், அப்பெருமக்களுக்குப் பாடும் முறையினையும், கருத்துகளையும் அமைத்துக் கொடுத்து, வழிகாட்டியாக விளங்கிய காரணத்தால் அம்மையாருடைய திருப்பதிகங்கள் சைவ பக்தி உலகில் தனிச்சிறப்புப் பெறுகின்றன. நீதி நூற்காலத்தில் தோன்றிய வெண்பா யாப்பினைப் பக்தி இலக்கியத்திற்கும் பயன்படுத்திய பெருமை அம்மையாருக்கே உரியது. அம்மையாரைப் பின்பற்றி, முதல் ஆழ்வார்களும், திருமழிசை ஆழ்வாரும், நம்மாழ்வாரும் வெண்பா யாப்பில் பக்திப் பனுவல்களைப் பாடியுள்ளனர் என்பது இங்கே கருதத்தக்கது. அந்தாதியாப்பில் ஒரு முழு நூலைப் படைத்த பெருமையும் அம்மையாருக்கே உரியது. பிற்காலத்தில் வளர்ச்சி பெற்ற இரட்டை மணிமாலை என்னும் சிற்றிலக்கியத்திற்கு அம்மையாருடைய திருவிரட்டை மணிமாலை கால்கோள் செய்கிறது.

இவ்வாறே கட்டளைக் கலித்துறை யாப்பையும் அம்மையாரே தம் பாடல்களில் முதன்முதலில் பயன்படுத்துகிறார். பரிபாடலில் இசைத்தமிழ் பாக்கள் உண்டு என்பதை நாம் அறிவோம். பரிபாடல் இசைமரபு சமண பௌத்த சமய எழுச்சிக் காலத்தில் மறைந்து அறநெறிக்கால அறவியற் பண்பு மேலோங்கத் தமிழ் இசைமரபு மங்கியது. அவ்வாறு மங்கிய தமிழ் இசைமரபை மீண்டும் தூக்கி நிறுத்துகின்ற பெரும் பணிக்கு வித்தாக இவருடைய திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகங்கள் அமைகின்றன. இவ்வகையில் "கானத்தின் எழுபிறப்பு" எனக் கொண்டாடப் பெற்ற திருஞான சம்பந்த சுவாமிகளுக்கும், திருநாவுக்கரசருக்கும், சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கும் இசைத்தமிழில் பண்வகுத்துப் பாடுவதில் அம்மையாரின் திருப்பதிகங்கள் வழிகாட்டுகின்றன. மேலும், அம்மையாருடைய பாடல்கள் அவர் வாழ்ந்த இருண்ட காலத் தமிழ்ச் சமுதாயத்தின் போக்குகளை ஒரு மங்கலான ஓவியம்போலக் காட்டுகின்றன. இந்நூல்கள் தரும் குறிப்புகளிலிருந்து அக்காலத் தமிழ்ச் சமுதாயத்தின் நிலைகுறித்து ஒருவாறு ஊகித்து அறியலாம். திருவாலங்காட்டிலே சிவபெருமானின் திருவடியிலே என்றும் நீக்கமற வீற்றிருக்கின்ற அம்மையார் அத்தலத்தில் இறைவன் ஆடலைத் திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகங்களில் புனைந்துரைக்கின்றார். இப்பதிகங்களில் பேய்களைப் பற்றி விவரித்துக் கூறுகின்றார். அம்மையாருடைய நூல்களை மதிப்பீடு செய்வதும், அக்காலச் சமுதாயத்தை அறிந்துகொள்வதும், அம்மையார் காட்டும் பேய்களை வகைப்படுத்துதலும் இவ்வியலின் நோக்கமாகும்.

## 3.1 அற்புதத் திருவந்தாதி

அந்தாதி பற்றித் தொல்காப்பியர் யாதொன்றும் கூறினாரல்லர். ஆயினும், சங்க நூல்களில் அந்தாதி அமைப்புக் காணப்படுகிறது. ஐங்குறுநூற்றில் அம்மூவனார் இயற்றிய நெய்தல்

திணையில் தொன்டிப்பத்து முழுவதும் அடி, சீர் அந்தாதியாக வருகிறது. பதிற்றுப்பத்தில் காப்பியாற்றுக் காப்பியனாரின் நான்காம்பத்து முழுவதும் அடி, சீர் அந்தாதியாக உள்ளது ; ஆயினும், இவை மண்டலித்து முடியவில்லை. இவ்வமைப்பே பின்னர் அந்தாதி நூல்களாக வளர்ந்தது. பின்னர் வந்த அந்தாதி நூல்கள் வெண்பா அல்லது கட்டளைக் கலித்துறைப் பாக்களால் ஆகி மண்டலித்து முடியும். அவையே அந்தாதி இலக்கியம் எனப்பெயர் பெற்றன[1].

அற்புதத் திருவந்தாதி அந்தாதித் தொடை அமையப்பெற்று நூற்றியொரு வெண்பாக்களைக் கொண்டுள்ளது. சிவபெருமானின் பேராற்றலையும் அருளையும் இந்நூல் இயம்புகின்றது. அறுபத்துமூன்று நாயன்மார்களுள், பெண்பாலார் மூவர் ; இம்மூவருள் இயல், இசை என்ற இருவகைத் தமிழிலும் வல்லவர் காரைக்கால் அம்மையார் ஒருவரே ஆவர். இயற்றமிழுக்கு அற்புதத்திருவந்தாதி, திருவிரட்டை மணிமாலை என்னும் இரு நூல்களையும், இசைத்தமிழுக்கு திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகங்களையும் அம்மையார் கொடையாக நல்கியுள்ளார்.

திருஞானசம்பந்தர், "தோடுடைய செவியன்" என்னும் தேவாரப் பதிகத்தைப் பாடுவதற்கு முன்பே அம்மையார் "கொங்கைத் திரங்கி" என்ற திருப்பதிகத்தைத் தேவாரத் திருப்பதிகங்களுக்குத் தோற்றுவாய் போன்று பாடியருளினார். ஆதலால், அதற்கு "மூத்த திருப்பதிகம்" என்ற பெயர் உண்டாயிற்று.

காரைக்கால் அம்மையாரின் அற்புதத் திருவந்தாதியின் இறுதிப் பாடல் நூற்பயன் கூறும் பாடலாக அமைந்துள்ளது. வெண்பாவில் முதலில் அந்தாதி இலக்கியம் இயற்றிய பெருமையும் அம்மையாருக்குண்டு. இவ்வெண்பாக்களில் சில முற்றுகர ஈற்றில் முடிகின்றன[2].

## 3.2 திருவிரட்டை மணிமாலை

இரு வெவ்வேறுபட்ட யாப்பு வடிவங்களால் ஒரு பொருள்குறித்து இருபது பாடல்களால் பாடப்பெறும் நூல் இரட்டை மணிமாலையாகும். இருவேறு மணிகளால் தொடுக்கப்பட்ட மாலை போன்று இப்பாமாலையும் அழகு செய்வதால் இது இரட்டை மணிமாலை எனப்படுகின்றது.

திருவிரட்டை மணிமாலையில் உள்ள இருபது பாடல்களும் கட்டளைக் கலித்துறையும், வெண்பாவும் விரவி அந்தாதியாகவரப் பாடப்பட்டுள்ளன. வெண்பாவை வைரமாகவும், கட்டளைக் கலித்துறையை மாணிக்கமாகவும் உருவகம் செய்து இவ்விருபது பாடல்களுக்கும் இரட்டை மணிமாலை எனப் பெயர் சூட்டினர் எனலாம்.

"வெண்பா முதலாகக் கலித்துறை பின்வரும்

இந்த இருபதிரட்டை மணிமாலை"[3]

என்பது பன்னிரு பாட்டியல். இதில் ஒரு மாறுதலுடன் அம்மையாரின் பனுவல் உள்ளது. முதலில் வெண்பா வாராமல், கட்டளைக் கலித்துறையும், அடுத்து வெண்பாவும் அமைத்துப் பாடுவது வேறுபாடு. இதுவே, இந்நூலின் பழமையைக் காட்டும் சிறந்த சான்றாகும்.

### 3.2.1 கட்டளைக் கலித்துறை

காரைக்கால் அம்மையாரின் திருவிரட்டை மணிமாலையில் முதன்முதலில் கட்டளைக் கலித்துறை பயிலக் காண்கிறோம். சங்ககாலத்தில் கட்டளைக் கலித்துறைப்பாவில் பாடப்பெற்ற நூல் எதுவும் இல்லை. தொல்காப்பியர் கலிப்பாவின்

வகைகளைச் சொல்லும்போது இதனைக் சு
அம்மையாருக்குப் பின்னர்த் தேவார ஆசிரியருள் தி(
இவ்வியாப்பைக் கையாண்டிருப்பினும் அதனை அவ
அது 'திருவிருத்தம்' என அழைக்கப்பட்டது. ‹
அம்மையார், திருநாவுக்கரசர் ஆகியோருக்குப் பின்னர்‹
கலித்துறைப் பாவில் முழுநூலாக மாணிக்க
திருக்கோவையார் அமைகிறது.

## 3.3 பதிகங்கள்

பதிற்றுப்பத்து, ஐங்குறுநூறு, திருக்குறள்,
போன்ற நூல்கள் பப்பத்துப் பாடல்களைக்
விளங்குகின்றன. இவைபோல, பத்துப் பாடல்களைச்
தெய்வத்தைப் பொருளாகப் பாடியதனைப் பதிகம் என்

மூத்த முதல் திருப்பதிகம் எண்சீர் விருத்தத்
எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம். இதற்
நட்டபாடையாகும். இதனை இக்காலத்தில் நாட்டை இ
கூறலாம். ஒரு சிலர் நாட்டைக் குறிஞ்சி என்றும் கூறு

காரைக்கால் அம்மையாரின் இரண்டா
திருப்பதிகம் அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய
இப்பதிகப்பண் இந்தளம் ஆகும். இப்பதிகங்களில்
வருணனை மிகுதியாகப் பேசப்பட்டுள்ளது.

## 3.4 அம்மையாரின் பாடல்கள் - ஒரு மதிப்பீடு

இன்னிசையால் இறைவன் புகழ் பரப்புவதும்
ஒரு வகையாகும். சமய வழிபாடு அக வழிபாடு, புற வ
இரு வகைப்படும். நெஞ்சத்தால் இறைவனை நினை
ஒருவகை, தாம் செய்கின்ற அனைத்துச் செய

இறைவனைக் காண்பது மற்றொரு வகை. இவ்வகையிலேயே அடியார்கள் அடங்குகின்றனர். ஆனால், காரைக்கால் அம்மையார் அகவழிபாடு, புறவழிபாடு என்ற இருவகைப்பட்ட வழிபாட்டு நிலைகளிலும் இறைவனோடு இரண்டறக் கலந்தவர்.

ஞானசம்பந்தரைப் பிள்ளைமை அன்பிற்கும், நாவுக்கரசரை அடிமையின் அன்பிற்கும், சுந்தரரைத் தோழமை அன்பிற்கும் எடுத்துக் காட்டாகக் கூறுவர். இதுபோன்று அம்மையாருக்கும், சிவபெருமானுக்கும் உள்ள தொடர்பைத் தாய்மை அன்பாகக் குறிப்பிடலாம்.

நாயன்மார்கள் தங்கள் திருமுறைகளில் சிவபெருமானின் திருமேனியைச் சித்திரிக்கின்றனர். இத்திருவுருவச் சிறப்பு அம்மையார் பாடல்களில் எவ்வாறு அமைந்துள்ளது எனக் காண்போம்:

### 3.4.1 திருவடிகள்

சிவபெருமானுடைய பாதங்கள் சேவடி[4] என்று புகழப்படுகின்றன. மேலும், அழகிய திருவடி[5] என்றும், அந்தாமரை போல் அடி[6] என்றும் வருணிக்கப்படுகின்றன.

#### 3.4.1.1 கழல்கள்

அவன் திருவடியில் கழல்கள் அணிந்தவன் என்பதைப் பல பாடல்கள் காட்டுகின்றன. இக்கழல் பைம்பொற்கழல்[7], செம்பொற்கழல்[8], மொய்கழல்[9] என்றெல்லாம் சிறப்பிக்கப்படுகின்றன.

#### 3.4.1.2 சிலம்பு

கழல்கள் அணிந்த பாதத்தில் இறைவன் சிலம்பினையும் அணிந்திருக்கின்றான். இதைப்பற்றியும் மூன்று பாடல்கள் விளக்குகின்றன[10].

### 3.4.2 அரை

"புலித்தோலை அரைக்கசைத்து" என்று சிவபெருமான் புலித்தோல் உடுத்திய செய்தியை இலக்கியங்கள் காட்டுகின்றன. இச்செய்தி அம்மையார் பாடல்களில் அவர் இடையிலே பாம்பை கச்சையாக அணிந்துள்ளார் என்று கூறுகின்றது.

"ஆடும் அரவம் அரையில்

ஆர்த்த அடிகள் அருளாலே"[11]

என்பது அம்மையார் வாக்கு.

### 3.4.3 திருமேனி வண்ணம்

இறைவனின் மேனிவண்ணத்தைச் சித்திரிக்கும்போது சுடர் உரு, செம்மையான், மின்னுஞ்சுடர் உரு, பொன் மார்பு, பூக்கோல மேனி, அம்பவள மேனி, செம்மேனி, சுடவெண்பொடி நிறத்தாய், செக்கர்போல் ஆகத்தான், காலையே போன்றிலங்கும் மேனி என்றெல்லாம் அம்மையார் புகழ்கின்றார். மேலும், தழற்கொண்ட சோதிச்செம்மேனி, செந்தீ அணையான் என்றும், பவள வண்ணன், தழல் வண்ணன் என்றும் அவன் திருமேனி வண்ணம் வருணிக்கப்படுகிறது[12].

#### 3.4.3.1 ஆடை

இறைவன் திருமேனியில் புலித்தோல், மான்தோல், யானைத்தோல் ஆகியவற்றை அணிந்துள்ளான்[13].

### 3.4.3.2 யானை உரிவை

'கைம்மா உரி போர்த்த கண்ணுதலான்'

'கைம்மாவின் ஈருரிவை மூவுருவும் போர்த்துகந்த'

என்று யானை உரிவை உடுத்திய பாங்கு காட்டப்படுகிறது[14].

### 3.4.3.3 புலித்தோல் மான்தோல்

இறைவன் புலித்தோல், மான்தோல் ஆகிய இருதோல்களையும் உடுத்திய செய்தி ஒரேயொரு பாடலில் காட்டப்படுகிறது.

'புள்ளி உழைமான் தோலொன்று

உடுத்துப் புலித்தோல் பியற்கிட்டு'[15]

என்று பாடுகிறார்.

### 3.4.4 மாதொரு பாகன்

#### உமையைப் பாகமாக உடையவன்

இறைவன் உமையைத் தன் உடம்பில் ஒரு பாகமாக அமைத்தார் என்று புராணங்கள் கூறும். இவ்வடிப்படையில் சிவபெருமான் மாதொரு பாகன் என்றும் அர்த்த நாரீசுவரர் என்றும் அழைக்கப்படுகிறார். இறைவனின் அர்த்தநாரிக் கோலத்தை அம்மையார் தம் இலக்கியங்களில் பாடுகிறார்.

'பங்கின் குலப்பாவை நீலக்குழல்'

'கோல்வளையைப் பாகத்தெழிலாக வைத்தேக வேண்டா'

'பொன்னுருவில் பாகத்தாள்'

'அவளோர் குலமங்கை பாகத்தகலாள்'

'அங்கத் திருந்த கனிவாய் மலைமங்கை'

'உமையென்னும் மெல்லியல்ஓர் கூற்றானை'[16]

### 3.4.4.1 திருமாலைப் பாகமாக உடையவன்[17]

உமையை ஒரு பாகத்தில் கொண்ட இறைவன் திருமாலை மறுபாகத்தில் வைத்துள்ளான்.

'ஒருபால் உலகளந்த மாலவனாம் மற்றை

ஒருபால் உமையவளாம்'

வைணவ இலக்கியத்தில் முழுமுதற் பொருளாகக் காட்டப்படுகின்ற திருமால், தேவாரத்தில் சிவபெருமானின் தேவியாக்கப்பட்டு, சிவபெருமான் தன் உடலின் ஒரு பாகத்தைத் திருமாலுக்குக் கொடுத்தார் என்று காட்டப்படுகிறது. இச்செய்தி அம்மையார் பாடல்களில் இடம்பெற்றுள்ளது.

'பெண்புணரும் அவ்வுருவோ மாலுருவோ'

'செங்கண் திருமாலைப் பங்குடையான்'

'.....................................................நீருருவ

மேகத்தான் செய்தனைய மேனியான் நின்னுடைய

பாகத்தான் காணாமே பண்டு'

என்று வடித்துக் காட்டுகின்றார்.

### 3.4.5 எண்டோளீசன்

சிவன் எட்டுக்கரங்கள் கொண்டவன் என்பதை எண்தோளன் என்று குறிக்கிறார்[18].

#### 3.4.5.1 வில்

சிவன் தன் கரத்தில் வில் ஏந்தியவன் என்பதை,

'. . . . . . . . . . . . . . . . . கையிற் சிலையால்

முனிவார் திரிபுரம் மூன்றும் வெந்

தன்று செந்தீயில் மூழ்க'[19]

'தீநின்று வேவச் சிலைதொட்ட'[20]

என்று காட்டுகிறார்.

#### 3.4.5.2 மழு

இறைவன் திருக்கரத்தில் மழுப்படை உள்ளது.

'கொழுவெண் மழுவும் பிறையும் ததும்ப'[21]

#### 3.4.5.3 அனல்

சிவபெருமான் கைகளில் அனல் காட்டப்படுகின்றது.

'அந்தி நிருத்தம் அனல்கை

ஏந்தி அழகன் ஆடுமே'

'அனல்கை ஏந்தி ஆடும் அரவப்புயங்கள்'

'அனல்வகை ஏற்றான் அருள்'

'பொங்கொளி சேர் அங்கையான்'

'அனல் அரவுஞ்சூடும் இறைவன்'[22]

### 3.4.5.4 மாலை

இறைவன் எலும்பாலும், தலையோடுகளாலும் ஆன மாலைகளை அணிந்துள்ளான்.

'சுடர் உருவில் என்பறாக் கோலம்'

'பூக்கோல மேனி பொடிபூசி என்பணிந்த'

'பிறருடைய என்பே அணிந்திரவில் தீயாடும்'

'யாரென்பே யேனும் அணிந்துழல்வார்'

'என்பாக்கையால்'

'வெள்ளை என்பாயினவும் அணிந்தங்கோர்'

'தலையோடுகள் கோத்தவை ஆர்த்து'

'என்பணி வீரென்றும்'[23]

என்றெல்லாம் சிவபெருமானின் மாலைகளை அழகுபட எடுத்துரைக்கின்றார் காரைக்கால் அம்மையார்.

### 3.4.5.5 பன்றிக்கொம்பு

சிவபெருமான் தன் மார்பில் பன்றிக் கொம்பை அணிந்திருக்கிறான்.

'தாரேறு பாம்புடையான் மார்பில் தழைத்திலங்கு

கூரேறு காரேனக் கொம்பு'

'திருமார்பில் ஏனச் செழுமருப்பு'[24]

### 3.4.5.6 நீறு அணிந்தவன்

சிவபெருமான் முழுநீறு பூசிய மேனியன் என்பது பாடல்களில் இடம்பெறுகின்றது.

'வெண்ணீற்ற அம்மானுக் காளாயினேன்'

'பூக்கோல மேனிப் பொடி பூசி'

'அம்பவள மேனி யதுமுன்னம் – செம்பொன்'

'அணிவரையே போலும் பொடியணிந்தால் வெள்ளி

மணிவரை யே போலும் மறித்து'

'சுடுவெண் பொடி நிறத்தாய்'

'நீறணிவது எவ்வுருவோ நின்னுருவ மேல்'

'கடும்பகலின் வேளையே போன்றிலங்கும் வெண்ணீறு'

'தவளநீர் என்பணிவீர்'

'வாய்ந்திலங்கு நீற்றானை'

'அவ்வனலின் நீராடி'[25]

### 3.4.5.6. (ஆ) கண்டம்

சிவபெருமான் மிடறு கறுத்திருப்பதைப் பல பாடல்களில் அம்மையார் புனைகின்றார்.

'மைஞ்ஞான்ற கண்டம்'

'நீளாகம் செம்மையான் ஆகித் திருமிடறு மற்றொன்றும்'

'மெய்யொளிசேர் கண்டத்தான்'

'இருண்டனைய கண்டத்தீர்'

'கறை மிடற்ற'

'நீல மணி மிடற்றான்'

'மணி மிடற்றான்'

'மறுவுடைய கண்டத்தீர்'

'வொளிகொள் மிடற்று'

'காருருவக் கண்டம்'

'நஞ்சுண்டு கண்டங் கறுத்தது'

'கறைக் கண்டா'

'வீங்கிருளே போலும் மிடறு'

இறைவனின் கண்டம், கரிய நிறமுடையது, நீலமணி போன்றது, ஒளி பொருந்தியது என்றெல்லாம் அம்மையாரால் புகழப்படுகின்றது. மேலும்,

'இருளி னுருவென்கோ. . . . '

'ஒளி நஞ்சம் உண்டவாய். . . . '

'மைத்தமர்ந்த கண்டத்தான்'

'கண்டன்'

'ஆலாலம் உண்டிருண்ட கண்டத்தான்'[26]

என்றும் அவர் சிவபெருமான் கண்டத்தைச் சிறப்பித்துப் பாடுகின்றார்.

### 3.4.5.7 நெற்றிக்கண்

சிவபெருமான் நெற்றிக் கண்ணன், முக்கண்ணன் என்றெல்லாம் பலவாறாகப் புகழப்படுகின்றார். அம்மையார் தம் இலக்கியங்களில் அதனைப் பல பாடல்களில் குறிக்கின்றார்.

'கண்ணுதலான்'

'ஒண்ணுதலின் மேலோர் தனிக்கணங்கு வைத்தார்'

'நுதற் கண்ணான்'

'கண் புணரும் நெற்றி'

'முக்கணான்'

'மற்றொருகண் நெற்றிமேல் வைத்தான்'[27]

**3.4.5.8 சடை**

சிவபெருமானின் சடை இலக்கியங்கள் புகச் சிறப்புடையது. அச்சடையின் அழகைப் பல பாடல்களில் அம்மை பாராட்டுகின்றார்.

'பவர் சடைமேல் பாகாப்போழ் சூடும்'

'செஞ்சடையாய்'

'ஞான்ற குழற்சடைகள்'

'பெருகொளிய செஞ்சடை'

'வார்சடை'

'வளர் சடையினானை'

'தன்னோடே யொப்பான் சடை'

'செஞ்சடை'

'பொன் முடிதான்'

'நீள்முடி'

'செக்கரவ் வானமே யொக்குந் திருமுடிக்கே'

'மாலையின் தாங்குருவே போலுஞ் சடைக்கற்றை'

'படர் சடையான்'

'வீழ்சடை'

'மின் போலும் செஞ்சடையான்'

'குளிர்சடை'

'செஞ்சடையான்'

'தூச்சடையான்'

'மிண்டி மிளிர்ந்த சடைகள் தாழ'

'சடைச் செம்பொன் நீள்முடி'

'இனிவார் சடையினிற்'

'தாழ்ந்த சடையானை'

'செஞ்சடை'

'நனையாச் சடைமுடி'

'ஆறெல்லாம் பாயும் அவிர்சடையார்'[28]

இச்சடை முடியிலே கங்கை, பிறை, பாம்பு ஆகியவற்றைத் தாங்கி இருக்கும் இறைவன் தலை ஒரு பூக்காடாகவும் திகழ்கின்றது. இங்கு கொன்றை, எருக்கம்பூ, வன்னிமலர், தலைமாலை ஆகியவை காணப்படுகின்றன.

### 3.4.5.8.1 கங்கை

சிவபெருமான் தன் செஞ்சடையில் கங்கையைத் தாங்கியுள்ளார்.

'புனற்கங்கை ஏற்றானோர் பொன்வரையே போல்வான்'

'கங்கையான்'

'பிறையும் புனலும் அனல் அரவுஞ் சூடும்'

'சேணுலவி நீரார்ந்த பேரியாறு நீத்தமாய்'

'தாழ் அருவி தூங்குதலால்'

'இடப்பால வானத் தெழுமதியை நீயோர்

மடப்பாவை தன்னருகே வைத்தால்'

'வெள்ளநீர் ஏற்றான்'

'கலங்கு புனற் கங்கை ஊடாடலாலும்

தெழித்தோடும் கங்கைத் திரை'

'இவளோர் சலமங்கை'

'வளர்ந்துந்து கங்கையும்'

'இனிவார் சடையினிற் கங்கையென்பாளை'

'திரைக்கின்ற கங்கையும் தேன்நின்ற

கொன்றையும் செஞ்சடைமேல்'

'. . . . . . . . . . ஓர் ஆறுபுக்கு

நனையாச் சடைமுடி நம்பன்'

'முடித்தலத்தில் ஆறாடி'

'ஆறெல்லாம் பாயும் அவிர்சடையார்'[29]



**3.4.5.8.2 நாகம்**

சிவபெருமானுடைய செஞ்சடையிலும் தோளிலும் நாகம் அணிசெய்கின்றது.

'ஊர்ந்திடுமா நாகம்'

'நீள்நாகத் தானை நினைந்து'

'வந்திதனைக் கொள்வதே யொக்குமிவ் வாளரவின்'

'பிறையும் புனலும் அனல் அரவுஞ்சூடும் இறைவர்'

'அக்கயலே தோன்றும் அரவு'

'அரவமொன் றாகத்து நீநயந்து பூணேல்'

'கோள்நாகம் பொன்முடி மேற் சூடுவதும்'

'அரவசைத்தான்'

'வார்சடைமேல் நாகம் தெறுமென்று தேய்ந்துழலும்'

'ஈண்டொளி சேர்வானத் தெழுமதியை வாளரவம் தீண்ட'

'நேர்ந்தரவங் கொள்ளச் சிறுகீற்றோ நீயதனை'

'ஈர்ந்தளவே கொண்டிசைய வைத்தாயே'

'அராப் பூண்டுழலும் எம்மானை'

'அது மதியொன் றில்லா அரா'

'பணியுறுவார் செஞ்சடை'

'விட வரவம் மேலாட மிக்கு'

'திருமுடிக்கே புக்கரவங் காலையே போன்று'

'பாம்பும் மதியும் மடமானும் பாய்புலியும்'

'தாம்பயின்று தாழருவி தூங்குதலால்'

'நீள்முடி மேற் பாம்பியங்கலாலும்'

'சீறி விழித்தூரும் வாளரவும் வெண்மதியும்'

'அராநின் றிரைக்கும் சடைச்செம்பொன்

நீள்முடி அந்தணனே'

'பொன் கண்டாற் பூணாதே கோள் நாகம் பூண்டானே'

'சங்கரனைத் தாழ்ந்த சடையானை அச்சடைமேல்

பொங்கரவம் வைத்துகந்த புண்ணியனை'

'செவ்வான் தொடைமேல் இரைக்கின்ற பாம்பினை'

மேல தோர் ஆடரவம்'[30]

இறைவன் அரவினை ஆர்த்த அழகை இவ்வாறு பல பாடல்கள் தெரிவிக்கின்றன.

**3.4.5.8.3 பிறை**

சடையின் மேலிருக்கும் பிறை பல பாடல்களில் இடம்பெறுகின்றது.

'பவர் சடைமேல் பாகாப்போழ் சூடும்'

'திங்கள் கதிர்முடியான்'

'மூவா மதியானை'

'உம் சென்னி பிறை'

'பெருகொளிய செஞ்சடை மேற் பிள்ளைப் பிறையின்'

'அடுங்கண்டாய் வெண்மதியென் றஞ்சி'

'வளருமோ பிள்ளைமதி'

'மதியார் வளர்சடையி னானை'

'கொள்ளாத திங்கட் குறுங்கண்ணி கொண்டார்'

'இளங்குழவித் திங்களிது'

'திங்களிது சூடி'

'பெருமான் பிறைக் கொழுந்தை நோக்கும்'

'அராவி வளித்தனைய அங்குழவித் திங்கள்'

'விராவு கதிர்விரிய வோடி விராவுதலால்'

'முடிமேல் வலப்பாலக் கோல மதி வைத்தான்'

'பணியுறுவார் செஞ்சடைமேற் பான்மதியினுள்ளே. . . '

'நிலாத் தலையில் சூடுவாய் நீ'

'நின்முடிமேல் திங்கள் நிலா'

'நிலா வருந்த

செக்கரவ் வானமே யொக்குந் திருமுடிக்கே'

'முதிரா மதியான் முடி'

'முடிமேற் கொடுமதியான்'

'இடப்பால வானத் தெழுமதியை'

'விண் ஆளும் துண்டம் சேர் திங்களாய்'

'இலங்குமதி இயங்கலாலும்'

'செஞ்சடைமேல் நக்கிலங்கு வெண்மதியம்'

'கூறெமக்கீ. . . . . . திரை'

'

வெள்ளை

இளந்திங் களும் எருக் கும் இருக்

குஞ்சென்னி ஈசனுக்கே'

'கொடுவெண் மதியும் பிறையும்

ததும்பக் கொள்ளென் றிசைபபாட

'சூடுமதியம் சடைமேல்'[31]

### 3.4.5.9 சூடும் பூக்கள்

இறைவன் கொன்றை, எருக்கம், வன்னி என்னும் மலர்களைச் சூடுகின்றான்.

#### 3.4.5.9.1 கொன்றை

'சீரார்ந்த கொன்றை மலர் தழைப்ப'

'கொன்றை பொதும்பர்க் கிடந்து'

'தேன் நின்ற கொன்றையும் செஞ்சடைமேல்'[32]

#### 3.4.5.9.2 எருக்கம் பூ

'இளந்திங்களும் எருக்கும் இருக்

குஞ்சென்னி ஈசனுக்கே'[33]

#### 3.4.5.9.3 வன்னி மலர்

வன்னிமலர் சுடுகாட்டில் மலர்கின்ற மலர், இம்மலரைச் சுடுகாட்டில் ஆடுகின்ற சிவபெருமான் சூடியுள்ளார்.

'செஞ்சடை மேல்

விரைக்கின்ற வன்னியும் சென்னித்

தலைவைத்த வேதியனே'[34]

### 3.4.5.9.4 தலைமாலை

கண்ணி என்று அழைக்கப்பெறும் தலைமாலையைச் சிவபெருமான் சூடியுள்ளான்.

'பனிக்கணங்கு கண்ணியார்'

'சிரமாலை தோன்றுவதோர் சீர்'[35]

இவற்றிலிருந்து சிவபெருமான் திருவுருவ அழகும், அதில் அமைந்த அலங்காரமும் அம்மையார் பாடல்களில் அழகுறக் காட்டப்பட்டுள்ளன என்பது புலனாகும்.

### 3.4.6 புராணக் கதைகள்

சைவ வைணவ சமயங்கள் பொதுமக்களுக்குச் சமய அறிவு புகட்டும் வண்ணம் பல புராணக் கதைகளைப் புனைந்துரைத்தன. வேதங்களைத் தொகுத்தளித்த வியாச முனிவரே பதினெண் புராணங்களையும் இயற்றினார் என்பது மரபு. இப்புராணங்கள் பிரபஞ்சத்தின் தோற்றத்தையும், ஊழிகளையும், அரச மரபுகளையும், தெய்வத் தோற்றங்களையும் பற்றி அமைவன ஆகின்றன. காலப்போக்கில் ஒவ்வொரு தெய்வத்திற்கு, அத்தெய்வமே எல்லாரிலும் மிக்கது. பேராற்றல் படைத்தது என்பதை வலியுறுத்தும் வகையில் புராணக் கதைகள் தோன்றின. சிவபெருமானின் பெருமையை உயர்த்திக் கூறும் சைவ சமயச் சார்புடைய புராணங்களும், திருமாலின் பெருமையை உயர்த்திக் கூறும் வைணவச் சமயச் சார்புடைய புராணங்களும் இந்திய மொழிகள் பலவற்றிலும் தோன்றின. பக்தி இயக்கத்தைப் பரப்பிய நாயன்மார்களும், ஆழ்வார்களும் தத்தம் இயக்கத்திற்குச் சார்பான புராணக்கதைகளைத் தத்தம் இலக்கியங்களில் வலியுறுத்திப் பாடுகின்றனர். காரைக்கால் அம்மையார் இயற்றிய நான்கு

நூல்களிலும் இடம் பெற்றுள்ள புராணக் கதைகள் இங்குத் தொகுத்துரைக்கப்படுகின்றன.

### 3.4.6.1 இராவணன்

சிவபெருமானும் உமாதேவியாரும் வீற்றிருந்த கயிலைமலையினைப் பெயர்த்தெடுக்க இராவணன் முயன்றபோது, அவனுடைய ஆணவத்தை இறைவன் அடக்கினார் என்பது புராணக்கதை. இக்கதையை அம்மையார் எடுத்தாளுகின்றார்.

'செருக்கினால் வெற்பெடுத்த . . . . . கால்'

என்ற இவ்வொரு பாடலில் மலையைப் பெயர்க்க முனைந்த இராவணனைப் பற்றிய கதையும், திருமாலும் நான்முகனும் அடிமுடிதேடிய கதையும், மார்க்கண்டேயரின் உயிரைக் காக்க காலனை உதைத்த கதையும் அடங்கியுள்ளன.

'முரணழியத் தானவனைப் பாதத் தனிவிரலால்

செற்றானை'

'அடித்தலத்தின் அன்றரக்கன் ஐந்நான்கு தோளும்

முடித்தலமும் நீமுரித்த வாறென்'[36]

### 3.4.6.2 அடிமுடி தேடல்

திருமாலும் பிரமனும் சிவபெருமானின் முழுமுதல் தன்மையில் ஐயுற்று சிவபெருமானின் அடிமுடியைத் தேடிச் சென்றதாகப் புராணங்கள் கூறுகின்றன. இக்கதையைக் காரைக்கால் அம்மையார் பாடல்களில் காண்கின்றோம்.

'இன்று நமக்கெளிதே மாலுக்கும் நான்முகற்கும்

அன்றும் அளப்பரியன் ஆனானை'

'வல்லேன மாய்ப்புக்கு மாலவனும் மாட்டாது'[37]

### 3.4.6.3 மார்க்கண்டேயன்

மார்க்கண்டேயனைக் கொல்ல எமன் வந்தபோது, சிவபெருமான் எமனைக் காலால் உதைத்து மார்க்கண்டேயனைக் காத்தார் என்ற புராணக்கதை அம்மையாருடைய நூல்களில் இடம்பெற்றுள்ளது.

'கூற்றுருவங் காய்ந்தானை'[38]

### 3.4.6.4. சந்திரன்

சந்திரன் தக்கனிடம் தான்பெற்ற சாபத்தால், தேவர்களிடம் சென்று தன்னைக் காக்கும்படி வேண்ட, சிவபெருமான் அவனைத் தன் தலையில் தாங்க, கலைகள் குன்றிய சந்திரன் வளர்ந்தான் என்பது புராணம் இதனை, அம்மையார் தம் பாடலில் குறிக்கின்றார்.

' ' குறித்தொருவர்

கொள்ளாத திங்கட் குறுங்கண்ணி கொண்டார்மாட்டு

உள்ளாதார் கூட்டம் ஒருவு'[39]

### 3.4.6.5. அருச்சுனன்

சிவபெருமானிடம் பாசுபதக்கணையைப் பெறுவதற்கு அருச்சுனன் தவமியற்றினான். அருச்சுனனின் வலிமையைச் சோதிக்க எண்ணிய சிவபெருமான் வேடனாக வந்து அருச்சுனனிடம் போரிட்டார். இக்கதையும் அம்மையார் பாடல்களில் இடம்பெறுகின்றது.

'வில்வேட னாகி விசயனோ டேற்றநாள்

வல்வேட னான வடிவு'[40]

### 3.4.6.6 மன்மதன்

மன்மதனைச் சிவபெருமான் நெற்றிக்கண்ணால் எரித்த செய்தி புராணங்களில் இடம்பெறுகின்றது. இக்கதையை அம்மையார் தம் நூல்களில் எடுத்தாள்கிறார்.

'ஒளிவி லிவன்மதனை ஒண்பொடியா நோக்கி'[41]

### 3.4.6.7. சிவன் நஞ்சுண்டவன்

திருபாற்கடலை அசுரர்களும் தேவர்களும் கடைந்தபோது வெளியான ஆலகால விடத்தைச் சிவபெருமான் உண்டார். அதனால், அவருடைய கண்டம் கறுத்தது. இக்கதையை அம்மையார் தம்முடைய அருள் நூல்களில் எடுத்தாள்கின்றார்.

'படங் குலவு நாகமுமிழ் பண்டமரர் சூழ்ந்த

தடங்கடல் நஞ் சுண்டார் தமக்கு'

'நீள் ஆழி நஞ்சு உண்ட'

'பண்டமரர் அஞ்சப் படுகடலில் நஞ்சுண்டு'[42]

என்று கயிலை மலையைப் பெயர்க்க முனைந்த இராவணன், திருமால், பிரமன அடிமுடிதேடிய செய்தி, மார்க்கண்டேயன், சந்திரன், அர்ச்சுனன், மன்மதன் ஆகியவர்களோடு சிவனை இணைத்த புராணக் கதைகளைக் கோடிட்டுக் காட்டுகின்றார் அம்மையார்.

### 3.4.6.8. முப்புரம் எரித்தல்

முப்புரம் எரித்தலும் புராணக் கதையின் ஒரு பகுதியேயாகும். இச்செய்தியும் அம்மையார் பாடல்களில் பரந்து காணப்படுகின்றது[43]

### 3.5. காணக்கிடைக்கும் உயிர் இனங்கள்

#### விலங்குகள்

அம்மையார் இலக்கியங்களில் சில விலங்குகள் காணப்படுகின்றன.

#### இடபம்

'ஆனேற்றாய்'

'மஞ்சுபோல் மால் விடையாய்'

'நடக்கிற் படி நடுங்கும் நோக்கின் திசைவேம்

. . . . . . . . . . . . .

உருமேறொ வொன்றா வுரை'

'என்பா யினவும் அணிந்தங்கோர்

ஏறுகந்து ஏதுவதே'

'ஏறலால் ஏறமற்று இல்லையே'

'சுமக்கின்ற பிள்ளைவெள் ளேறொப்ப

தொன்று'[44]

### 3.5.2 ஐந்துதலை நாகம்

'ஐவாய நாகத்தாய் ஆடுன் நடம்'[45]

### 3.5.3 மான், புலி

'மடமானும் பாய்புலியும்'[46]

### 3.5.4 சிங்கம்

'அடுக்கல் பொருமேறோ'[47]

### 3.5.5 வண்டு

'இறைவண்டு கிண்டி பொராநின்ற'[48]

## 3.6 மரஞ்செடி கொடிகள்

எட்டி, இலவம், ஈகை, சூரை, காரை, கள்ளி.

'வேய்கள் ஓங்கி வெண்முத்து உதிர'

'முள்ளி தீந்து முளரி

கருகி மூளை சொரிந்துக்குக்

கள்ளி வற்றி வெள்ளில்

பிறங்கு கடுவெங் காட்டுள்ளே.'[49]

### 3.7 வழிபாட்டு முறை

இறை வழிபாடு செய்தற்கு பலமுறைகள் காணப்படுகின்றன. அம்முறைகள் அனைத்தும் அம்மையார் பாடல்களில் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் நமக்குப் புலப்படுகின்றன.[50]

#### தாய் அன்பு

இறைவனுக்கும் அம்மையாருக்கும் உள்ள உறவு முறையைத் தாய்க்கும் சேய்க்கும் உள்ள உறவுமுறையால் குறிப்பர். அம்மையார் தம்முடைய பாடல்களின் இறைவன் மேல் கொண்ட தாய் அன்பினைப் புலப்படுத்துகின்றார்.[51]

### 3.8 திருப்பெயர்கள்

காரைக்கால் அம்மையார் தம் இலக்கியங்களில் இறைவனுக்குப் பல திருப்பெயர்களைக் சூட்டுகின்றார். சங்கரன், வேதியன், கண்டன், ஆதிரையான், அமரர் பிரான், அரவப்புயங்கள், ஆலங்காட்டடிகள், குழகன், அழகன், பெருமான், பரமன், விமலன் அடிகள் என்று பலவாறாகச் சிவபெருமான் குறிக்கப்பெறுகின்றார்.

### 3.9 மந்திரம்

சிவபெருமானின் தியான மந்திரம் ஐந்தெழுத்தாலாகிய பஞ்சாட்சரம். அம்மையார், தம்முடைய திருவிரட்டை மணிமாலை என்னும் நூலில் இம்மந்திரத்தைப் பற்றிக் கூறுகின்றார்.[52]

### 3.10 ஊடல்

ஊடல் என்னும் அகப்பொருள் செய்தி அம்மையார் பாடல்களில் ஒரேயொரு பாடலில் காணப்படுகிறது. உமையின் ஊடலைத் தீர்த்தற் பொருட்டுச் சிவபெருமான் தன் சடைமுடியைச்

சிலம்பணிந்த பாதத்தை உடைய உமையின் தாள்களில் வைத்தார் என்ற பொருளில் அற்புதத் திருவந்தாதிப் பாடல் அமைந்துள்ளது.[53]

இதுவரை அம்மையார் பாடல்களில் இடம்பெற்றுள்ள பல்வேறு செய்திகள், தொகுத்துரைக்கப்பட்டன. இனி, அம்மையார் பாடல்கள் வழி அறியலாகும் சமுதாயம் பற்றிக் காண்போம்.

### 3.11 காரைக்கால் அம்மையார் காலச் சமுதாயம்

இலக்கியம், வாழ்க்கையில் மக்கள் பெற்ற ஆழ்ந்த அனுபவங்களையும் பேருண்மைகளையும், பொதிந்து வைத்துள்ள கருவூலமாகும். ஒவ்வொரு வாய்ப்பும், சூழ்நிலையும், நிகழ்ச்சியும் முன்னர் வாழ்ந்த மனிதர்களை எவ்வாறு பாதித்தன என்பதையும் அப்பாதிப்புகளின் போது அவர்கள் எவ்வாறு நடந்து கொண்டார்கள் என்பதையும் அறிவிக்கும் அனுபவ வெளியீடுகள் இலக்கியம் ஆகும்.

சமுதாயத்தில் வாழ்கின்ற மனிதனால் இலக்கியம் படைக்கப்படுகின்றது. அவ்விலக்கியத்தில் சமுதாயத்தின் கூறுகள் வெளிப்படுகின்றன. தற்காலத்திற்கு முற்பட்ட காலத்தை ஆய்வுக்கு எடுத்துக் கொண்டால், அதற்குத் துணை நிற்பன வரலாற்றுச் சான்றுகளும், இலக்கியக் குறிப்புகளுமேயாகும். இவ்வடிப்படையில் காரைக்கால் அம்மையார் காலச் சமுதாயத்தை அறிய அவரால் இயற்றப்பட்ட நூல்களான அற்புதத் திருவந்தாதி, திருவிரட்டை மணிமாலை, மூத்த திருப்பதிகங்கள் ஆகியவற்றை எடுத்துக் கொண்டால் அவற்றில் இறைக்காட்சியும், இறைவன்மேல் கொண்ட ஆன்ம அனுபவமுமே அதிகமாக வெளிப்படுகின்றன. அக்காலச் சமுதாயம் முழுமையாக வெளிப்படவில்லை. எனவே, காரைக்கால் அம்மையார் பாடல்களுடன் பெரிய புராணமும் சமுதாயம் பற்றிய சிந்தனைக்கு அடிப்படையாக இங்கே கொள்ளப்படுகின்றது.

### 3.1.1.1 திருமண முறை

1. பெண்ணுக்கு, அவளுடைய இல்இகவாப் பருவத்தில் மணம் பேசத் தொடங்குதல் அக்கால மரபு.

2. மகனுக்கு மணம் முடிக்க ஒருவருடைய பெண்ணைப் பேச, பெற்றோர்கள் செல்லாமல், பிற பெரியோர்களை அனுப்பும் வழக்கம் அக்காலத்தில் இருந்தது.

3. மணமக்கள் ஒருவரையொருவர் பார்க்கும் வழக்கம் இல்லை.

4. பெரியோர்கள் நிச்சயித்த திருமணங்களே பெரியபுராணத்தில் காணப்படுகின்றன. என்றாலும் திருமணத்தில் சீர்வரிசை தருதல் என்ற குறிப்பு எங்கும் காணப்படவில்லை. ஆனால், வணிகர்குலத்தில் இது மிகச் சிறப்பான இடத்தைப் பெறுகிறது.

5. திருமணத்திற்கு ஓலை எழுதுதல் என்பது உண்டு. இது மணமகன் வீட்டார் குறித்து மணமகள் வீட்டாரிடம் அனுப்புவது.

6. திருமணம் பெண் வீட்டிலேயே நடைபெற்றது. திருமணத்தின்போது இசைமுழக்கம் செய்வது வழக்கம். இக்காலத்தில் திருமணங்களில் சிறப்புப் பெற்ற நாதஸ்வரம் அக்காலத்தில் இல்லை. அது பிற்காலத்தில் நடைமுறைக்கு வந்தது எனலாம்.

7. மணமக்களுக்குத் தனிவீடு அமைத்துக் கொடுத்தனர். இது வணிகர்குல வழக்கம். கோவலன் – கண்ணகியர்க்குத் தனிவீடு அமைத்துக் கொடுத்ததைச் சிலப்பதிகாரம் புகலும்.[54] இது இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

### 3.11.2 பழக்க வழக்கங்கள்

1. வணிகம் செய்பவர்களுக்கு வேண்டிய வாக்கு நாணயம் வணிகர்களிடம் இருந்தது.

2. அறிமுகமானவர்கள் ஒருவரையொருவர் சந்திக்கச் செல்லும்போது பரிசுப் பொருள் கொடுத்துக் கொள்வர்.

3. திருவமுது சமைத்தபின் கறியமுது சமைத்தல் அக்கால வழக்கம். இதைக் காரைக்கால் அம்மையார் புராணத்தில் இருந்து உணரலாம்.

4. இல்லறத்தில் ஈடுபட்டோர் ஆற்றவேண்டிய கடமையான விருந்தோம்பல் இவர் காலத்தில் இருந்தது.

5. தமிழகத்து மக்கள் காலையில் நீராடும் வழக்கம் உடையவர். ஆனால், வாணிகம் செய்யும் வணிகர்கள் காலையில் கடைதிறக்க வேண்டியிருப்பதால் மதியம் உணவுக்கு வீட்டுக்கு வரும்பொழுதே நீராடுவர்.

6. வணிகர்கள் வணிகத்தின் பொருட்டுக் கடல் கடந்து சென்றனர். 'முந்நீர் வழக்கம் மகடூஉ வோடில்லை' என்ற தொல்காப்பியர் காலக் கொள்கை, அம்மையார் காலத்திலும் இருந்தது போலும். ஆகவேதான், அம்மையாரின் சுற்றத்தார்கள் அம்மையாரை உடன் அழைத்துச் செல்லாதது பற்றிப் பரமதத்தனிடம் ஒன்றும் கேட்கவில்லை.

7. மறுமண நிகழ்வுகள் அக்காலத்தில் இருந்தன.

8. தெய்வத்தின் பெயரைக் குழந்தைக்கு வைத்தல் மரபு. பரமதத்தன் தன் குழந்தைக்குப் புனிதவதி என்ற பெயரை வைத்தான்.

சிலப்பதிகாரத்தில், கோவலன் தன் குல தெய்வமான மணிமேகலையின் பெயரைத் தன் குழந்தைக்கு வைத்தமை இங்கு எண்ணத்தக்கது.

9. செல்வக்குடியில் பிறந்த பெண்கள் சிவிகையில் பயணமானார்கள்.

10. மனைவியாரைத் தெயவமென்று எண்ணித்துணிந்து கொண்ட கணவன், அத்துணிவு பற்றி நிலமுற வீழ்ந்து பலரும் காண வணங்குதலுமோர் இயல்பாகும்.[55]

11. ஆண்மகன் உயர்ந்தவன் என்ற கருத்து அக்காலத்தில் இருந்தது. எனவேதான், காரைக்கால் அம்மையார் காலில் விழுந்த பரமதத்தனை, அம்மையாரின் சுற்றத்தார்கள் நீ உன் மனைவியின் காலில் விழலாமா ? எனக் கேட்கின்றனர்.

12. ஒருவரைத் தேடி வந்தவர்கள் நேராக அவர்கள் வீட்டிற்கு வராமல், ஊர் எல்லையில் இருந்து கொண்டு ஆள் மூலமாகச் சொல்லி அனுப்புவர்.

13. உடல் அழகு கணவன் பொருட்டே நிலைக்க வேண்டும் என்பது பெண்கள் இயல்பு. அம்மையார் கணவன் எண்ணத்தை உணர்ந்ததும் பேயுருத் தாங்கினார். சிலம்பில் கடல்மேல் சென்றிருந்தவன் வரும்வரையில் அவன் மனைவி தன்னைக் கல்லாக்கிக் கொண்டதும். மற்றொருத்தி வெளியில் சென்றிருந்த கணவன் திரும்பி வரும்வரை தன் முகத்தைக் குரங்கு முகமாக்கிக் கொண்டதும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கவை.

## 3.11.3 நம்பிக்கைகள்

1. பெறற்கரிய பெண்மகவைப் பெறுதல் முன்னைத்தவத்தால் ஆவதொன்று என்பது நம்பிக்கை. இந்நம்பிக்கையால்தான் தனதத்தன் தான் முன் செய்த தவத்தால் திருமகளே வந்து

பிறந்தாள் என்று சொல்லத்தக்க அளவில் புனிதவதியார் வந்து பிறந்தார் என்பர் சேக்கிழார்.

2. 'மீண்டும் பிறப்பு உண்டேல்' என அம்மையார் இறைவனிடம் கேட்பதால் மறுபிறப்பில் அக்கால மக்களுக்கு நம்பிக்கை இருந்தது புலனாகிறது.

### 3.11.4 இறப்புச் சடங்கு

செத்தவர்களைச் சுடுகாட்டில் கொண்டுபோய் வைத்து, ஈமத்திற்கு அருகில் இட்டுச் செய்யவேண்டிய கிரியைகளைச் செய்து, கொள்ளி வைக்கும் உரிமை உடையவர் சிதைக்கு வைத்த செந்நிறத்தீயே விளக்காகக் கொண்டு, இறைவன் ஆடுகிறான்[56] என்றும், உயர்ந்தோராய் வாழ்பவரும் இறந்துவிட்டால் அவர்தம் சுற்றத்தார் காய்ந்த விறகுகளை அடுக்கி அவரை எரித்துவிடுவர்[57] என்றும், காரைக்கால் அம்மையார் பாடியிருப்பதிலிருந்து, அக்காலத்தில் இறந்தவர்களின் உடல் எரியூட்டி அழிக்கப்பட்டது என்பதை அறிய முடிகிறது.

அம்மையார் காலத்துத் திருமணமுறை, பழக்கவழக்கம், நம்பிக்கை, இறப்புச் சடங்கு ஆகியவற்றின் வாயிலாக அக்காலச் சமுதாயத்தை ஓரளவு அறிந்து கொள்ள முடிகின்றது. மேலும், அவர் பாடல்களில் புலனாகும் பேய்களைப் பற்றி இனிக்காணலாம்.

## 3.12 பேயம்மையார் காட்டும் பேய்கள்.

தாக்குகின்ற பூதம், அலைகின்ற பேய், அச்சுறுத்துகின்ற ஆவி, இவையெல்லாம் இருக்கின்றதோ, இல்லையோ, இவற்றைப் பற்றிய விவாதங்கள் நம் வாழ்வில் இருந்துகொண்டு இருக்கின்றன. இதற்கான சான்றுகள் இலக்கியங்களில் காணக்கிடைக்கின்றன. - மக்கள் பொதுவாக ஏற்றுக் கொள்கின்றவற்றை எதிர்க்கின்றவர்கள், பேய்கள் என்றே மக்களால் அழைக்கப்படுகிறார்கள்.[58]

மந்திர சக்தி புராதனச் சமூகங்களில் பெண்களின் தனியுரிமையாயிருந்தது.[59] பொதுவாக, மக்கள் பேயைப்பற்றி கேட்டாலோ, பார்த்தாலோ அச்சம் கொள்கின்றனர். பேய் பற்றி சிந்தனை தொல்காப்பியத்திலேயே காணக்கிடைக்கிறது. தொட்ட காஞ்சி, தொடாக் காஞ்சி என்ற இரண்டு துறைகளும் பேயுடன் தொடர்புடையவை. சங்க இலக்கிய நூல்களான புறநானூறு, மதுரைக் காஞ்சி, பதிற்றுப் பத்து, சிறுபாணாற்றுப் படை, பட்டினப் பாலை ஆகிய நூல்களில் பேய்கள் பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன.

## 3.12.1 பேயார் காட்டும் பேய்

இறைவனின் கொள்கையைப் புரிந்து கொண்டு ஆடுவது நல்ல பேய். காரைக்கால் அம்மையார் அப்பேய்களோடு சேர்ந்து ஆடும் பேறு பெற்றதைச் சிவபெருமானால் அளிக்கப்பட்ட பெருங்கொடையாகக் கருதுகிறார். பேயுருப் பெற்றது உலகில் அழகாக இருப்பதை வெறுத்ததால் அன்று; இறைவனோடு கூடிய பேய்களோடு சேர்ந்து இறைவனைச் சுற்றி, அவனைப்பாடி, ஆடி, பரவசப்படுவதற்கேயாகும். உடல், கணவனால் கைவிடப்பட்டபோது, உயிர் நாயகனான சிவபெருமானுடன் என்றும் பிரியாமல் இருக்க எண்ணியே, அம்மையார் சிவபெருமானை வேண்டிப் பேயுருக் கொண்டார்.

திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம் முழுவதிலும் பேய் பற்றிய செய்திகளே நிறைந்துள்ளன. பேயாடும் அரங்கில் சிவபெருமான் ஆடுவதால் அம்மையார் பேய்கள் மீது விருப்புக் கொண்டு பேய்களைப் பாடினார். பெரியபுராணத்தில் காரைக்கால் அம்மையார் பெற்ற பேய் வடிவத்திற்கு விளக்கம் கூறும் உரைகாரர்,

"பேய் வடிவு – வாயுவுடம்புடன் கூடித்திரிந்து மக்களை அலைத்து வரும் வடிவமன்று. அவை, ஐம்பூதச் சேர்க்கையாலாகிய

உடற்கூட்டில் ஏனைய பகுதிகள் மறைய, வாயு ஒன்றுமே மிகுத்துக் கண்ணுக்குத் தோன்றாவகைத் திரியும் பாசவுடம்புகள். இங்கு அம்மையார் வேண்டிப் பெற்றது மானிட உடம்பினுள் ஏனையவை ஒழித்து எலும்புக்கூடு ஒன்றுமே காணப்பெற்றதும், காற்றுப்போற் கடிது செல்லும் தன்மை வாய்ந்ததும், மண் என்ற ஒரு பூதச் செயல் மிகுந்த எலும்பு வடிவாயினும், களிம்பு நீங்கிப் பொன்னான செம்பு போலப் பாசநீக்கித் தூய்மையாக்கப்பட்ட சுத்தமாயா வுருவம் வாய்ந்ததும், ஆனால், மக்கள் கண்ணுக்குப் புலப்படுவதுமாகிய ஓர் ஒளிபெற்ற திருவுடம்பு என்க"[60] என்கிறார்.

சிவனருளால் காரைக்கால் அம்மையார் ஒளியுடம்பு பெற்றார். பண்டை இலக்கியங்கள் நமக்குக் காட்டுகின்ற பேய்மகள் சாதாரண மானிட உடம்பு பெற்றிருந்தவள்.

சங்க இலக்கியங்கள் காட்டும் பேய்மகளும் ஒருவிதத்திற் காரைக்காலம்மையாரைப் போல, மக்கள் கண்ணுக்குப் புலப்படும் உடம்பினையே பெற்றிருந்தாள்.

இனி அம்மையார் பாடல்களில் காணக்கிடைக்கும் பேய்களின் வகை, பேய்களின் தோற்றம், பேய்களின் செயல், சுடுகாட்டு வர்ணனை ஆகியவற்றைக் காண்போம்.

### 3.12.2 பேய்களின் வகை

பேய்களின் செயல்களை வைத்து அவற்றிற்குப் பெயர் சூட்டியுள்ளமை திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகங்களில் காணலாம். கண்களில் தீ எழ விழித்து நோக்கும் தன்மை கொண்ட பேய் கொள்ளிவாய்ப் பேய் ; நீண்ட நகத்தினைக் கொண்ட பேய் பாதுகாற் பேய் ; பிணத்தினைப் புரட்டும் கூகைப் பேயும் இவ்வியல்பினவே. பேய்களின் தலைவி காளி என்பதனைக்

கலிங்கத்துப் பரணி இயம்பும். பேய் தன் பிள்ளைக்குக் காளி என்று பெயரிட்டு அழைத்தமையினை மூத்த திருப்பதிகத்தினால் அறியலாம். பெரிய வயிற்றினையுடைய பேய்கள் மயானத்தில் எரியும் தீச்சுடரைப் போல் வாய் கொண்டதால் அது எயிற்றுப் பேய் எனப்பட்டது. கூளி என்ற ஒருவகைப் பேயும் காட்டப்படுகிறது.[61]

### 3.12.3 பேய்களின் தோற்றம்

திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம் 1–இல் வரும் பேய்கள் கொங்கைகள் தளர்ந்தும், நரம்புகள் மேல் எழுந்தும், தலைமயிர் சிவந்தும், இரண்டு பற்கள் நீண்டும் தோன்ற, ஆழ்ந்த கண்களும், வெள்ளைப் பற்களும், குழிந்த வயிறும், உயர்ந்த புறங் காலோடும் கூடிய நீண்ட கணைக்காலும் உடைய ஒரு பெண்பேயாம், தட்டையான பாதமும், நீண்ட நகமும் கொண்ட பருந்தின் காலையுடைய பேய் என்றும், சுழல்கின்ற நெருப்பினைப் போன்ற சிவந்த கண்களையுடைய கொள்ளிவாய்ப் பேய் என்றும், அவை வருணிக்கப்படுகின்றன. மூத்த திருப்பதிகம் 2–இல் வட்டமான பறையைப் போல் விழித்து நோக்கும் கண்களையுடைய பேய் என்றும், நீண்ட பற்களையும், குழி விழுந்த கண்களையும் உடைய பேய்கள் என்றும், வரண்ட தலைமயிரையும், கத்துகின்ற பிளந்த வாயினையுடைய பேய்கள் என்றும், மனிதர்களில் நெட்டையானவர்களும் குட்டையானவர்களும் இருப்பதுபோல் பேய்களிலும் நெட்டையான பேய்கள், குட்டையான பேய்கள் உண்டு என்றும், உருண்டையான வயிற்றையுடைய சிறிய மலைபோன்ற குள்ளப் பேய்களும், நெட்டைப் பேய்களும் சுடுகாட்டில் நெருப்பைப் போன்ற வாயினையும், பற்களையும் உடைய பேய்களைப் பிடித்துக் கொண்டு, அவற்றின் குட்டிகளைத் தடவிக் கொடுத்து அச்சுறுத்தும் என்றும், திருவிரட்டை மணிமாலையில் சுருங்குகின்ற பெரிய வாயினை உடைய பேய்கள் உண்டென்றும் பேசுகின்றார்.[62] மேலும்

சில பாடல்களில் பேய்களின் தோற்றம் காட்டப்படவில்லையாயினும், பேய்களைப்பற்றிப் பாடுகிறார் அம்மையார்[53]

## 3.12.4 பேய்களின் செயல்

கள்ளி மரக்கிளையில் காலை நீட்டிக் கொண்டு, அடிக்கொள்ளிக் கட்டையை எடுத்து, அரைத்துக் குழைத்து, அந்தக் கரியைப் புருவத்தில் விளங்கத் தீட்டி வெடுவெடு என்று சிரித்து, துள்ளி மிரண்டு குறுக்கே பார்த்துக் குதித்து, சுடுகாட்டில் எரியும் பிணத்தின் நெருப்புச் சுட்டதால் முகத்தை முழுவதும் சுளித்து, புழுதியை வாரிக் கொட்டி அந் நெருப்பை அணைக்கும் என்றும், குள்ள நரியொன்று ஆழமான ஓம குண்டத்தில் வைத்த சோற்றை எடுத்து உண்ண, அச்சோற்றினை முன்னே நாம் காணவில்லை என்று கோபங் கொண்டு, பேய்கள் கைகொட்டி ஓடுகின்ற சுடுகாடு என்றும் கூறுவர். தாய்ப்பேய் நெய்ப்பசையுடைய கொழுப்பினை உண்ணக் கொடுத்து, வெள்ளிய தலைமாலையை பிறமாலையோடு சேர அணிந்து, காளி என்றும் பெயரைச் சூட்டி, தன் குழந்தையைச் சீரோடு வளர்த்து, தூசியைத் துடைத்து, பாலூட்டி விட்டுச் சென்றபின் அத்தாய்ப் பேயை, வரக் காணாமையால் பிள்ளைப் பேய் அழுதுவிட்டுத் தூங்குகின்றது. கொள்ளிவாய்ப் பேய் சுற்றி வந்து துணங்கைக் கூத்து ஆடி, அங்கும் இங்கும் ஓடி விளையாடி, நெருப்பில் எரிகின்ற பிணத்தைப் பிடுங்கி, தானே அதன் மாமிசத்தை உண்டு, தெய்வம் ஏறியவர்போல் ஆடுகின்றது. இறந்தவரைப் புதைத்த கிழப்பிண மேடைக்குப் பக்கத்திலே, நெருங்கிய பேய்க் கூட்டம் சுற்றிச் சுற்றி வருகின்றது. பேய்கள் எல்லாம் சேர்ந்து ஒன்றோடொன்று அடித்துக் கொண்டு, ஆரவாரம் செய்து, பெருங்குரலிட்டு விகடப் பாடல்களைப் பாடிஆட, அப்பேய்க் கூட்டத்தின் அருகில் இருந்து, பிணத்தைத் தோண்டிய நரி விகடப் பாடல்களுக்கு ஏற்ப யாழ்போல் ஊளையிட்டது என்றெல்லாம்

காட்டப்படுகின்றது. நீண்ட பற்களையும் குழிவிழுந்த கண்களையும் உடைய பேய்கள் துணங்கைக் கூத்தாடிச் சுற்றுவதைப் பார்த்து, ஈமத்தீயை அவித்து எவ்விடத்தும் பேய்க் கூட்டங்கள் ஒன்று சேர்ந்து பிணங்களைத் தின்றுவிட்டுக் களிப்புற்ற மனத்துடனே கண்டாரை வருத்துகின்றது சுடுகாடு.

ஓர் உடம்பைச் செத்த பிணம் என்று அறியாமல் அதனை நெருங்கி விரலால் சுட்டிக்காட்டி, கூச்சலிட்டு 'உறும்' என்று ஒலித்து அதனை நெருப்பிலிருந்து எடுத்தெறிந்து, தூரத்தே பாய்ந்துசென்று ஒட்டிய தனது வயிற்றை, பதற்றத்துடன் அடித்துக் கொள்ள (அதனைக் கண்டு) பல பேய்கள் அஞ்சி ஓடுகின்றன. தேடி உண்ணும் புலால் உணவைப் பெறாமையால் பலவற்றையும் நினைத்திருந்து இருந்த இடத்திலேயே தூங்குகின்றது ஒரு சிறிய பேய் என்றும், பேய்களின் செயல்களை அம்மையார் வருணிக்கிறார்.[64]

### 3.12.5 சுடுகாட்டு வருணனை

சுடுகாட்டில் இருள் மிகுந்து பரவவும், நள்ளிரவில் வாகை மரத்தின் முற்றிய வெண்ணிறக் காய்கள் பரவி ஒலிக்கவும், கோட்டானோடு ஆண்தலை என்னும் பறவை கூவவும், ஆந்தையானது மரக்கிளையின்மேல் துள்ளி ஓடவும், கிண்டைக் கொடி தாவிப்படர்ந்து செல்லுகின்ற கள்ளிமரத்தின் நிழலில் விறகுகளை அடுக்கி வைத்திருப்பர். பாறுகால் பேய் குட்டிபோட, பருந்தோடு கோட்டானும், கௌதாரியும், ஆந்தையும், முட்டைகளை இட, கூச்சலிடும் பேய்கள் சென்று தெய்வம் ஏறியவர்போல் ஆடுகின்ற சுடுகாட்டில் குள்ளநரி புதைத்த பிணத்தினைத் தோண்டி எடுத்துப் பிய்த்தெறிந்து பாய்ந்தோடுகின்றது. எட்டி மரமும் இலவ மரமும் இண்டங்கொடியும், சூரைச் செடியும், காரைச் செடியும், பிணங்களைச் சுட்ட மயானத்தில் சூழ்ந்து வளர்ந்த கள்ளிச் செடியும், சரிந்த குடல் கழுகுகளால் கவ்வப்பட்டுக் கிடந்த பிணங்களும், பரவித்

தோன்றிய சுடுகாடு என்றும், தசையின் கொழுப்பு உருகி நிலத்தினை நனைக்கும் அளவிற்கு வெப்பம் மிகுந்த காடு என்றும் வருணிக்கப்படுகின்றது.

பறவைகள் கொத்திக் தின்ற புலால் நாறும் வெணணிறத்தலை ஓட்டினை வெளியில் இருக்கும் நரியானது கவ்விக் கொள்ளும் பொருட்டு, அட்கு என்று கூனி ஆந்தையை அழைக்க, அந்த ஆந்தை அவ்வெண்டலையை எடுத்தெறிய, பக்கத்தில் இருக்கும் சிறு கோட்டான் அஞ்சி நோக்க, கோட்டான் அச்சுறுத்த நரி எவ்விடத்தும் பெருங்குரலிட்டுக் கத்தும் பெருங்காடு என்றும், முள் மரங்கள் எரிந்து, முள் செடிகள் எரிந்து கரியாகி, இறந்தவர்களின் மூளைகள் சிதறி உதிர்ந்து, கள்ளிமரம் காய்ந்து விளாமரம் விளங்குகின்ற கொடிய வெப்பம் மிகுந்த காடு என்றும், அழகிய கோட்டான் மூளையோடு கூடிய தலையையும், பிணத்தையும் தின்றுவிட்டுக் கத்துகின்ற சுடுகாட்டில் பேய்க் கூட்டங்கள் ஊதும் குழலுக்கேற்ப இறைவன் திருநடம் புரிவான் என்றும், மூங்கில்கள் வளர்ந்து உயர்ந்து வெள்ளிய முத்துக்கள் சிந்தும்படி வெடிக்கின்ற சுடுகாட்டில் பேய்கள் ஒன்றாகச் சேர்ந்து பிணங்களைத் தின்றுவிட்டுக் கத்தும் என்றும் சுடுகாட்டின் அழகினை அம்மையார் வருணிக்கிறார்.[65]

முடிவுரை

முதன்முதலில் வெண்பா யாப்பில் அந்தாதி பாடியவரும், திருவிரட்டை மணிமாலையைக் கட்டளைக் கலித்துறையில் அமைத்தவரும் அம்மையாரேயாவார். மூத்த திருப்பதிகங்கள் இசைத்தமிழுக்கு எடுத்துக் காட்டாகும். அற்புதத் திருவந்தாதி, திருவிரட்டை மணிமாலை ஆகிய இவ்விரு நூல்களிலும் சிவபெருமானின் திருமேனியும், புராணங்களும் அவருடைய உடைமைப் பொருட்களுமே இடம்பெற்றுள்ளன. சிவபெருமான்

சடையில் வன்னி மலர் சூடியுள்ளான் என்ற செய்தியும், மார்பில் பன்றிக் கொம்பை அணிந்தவன் என்ற செய்தியும் புராணச் செய்திகளில் புதியன. உலகம் ஏழு உண்டு. ஐந்தலைப் பாம்பு உண்டு என்ற நம்பிக்கைகளும் அம்மையார் பாடல்கள் வாயிலாக உணரலாம். அம்மையாருடைய பாடல் வரிகள் கல்வெட்டுகளில் இடம் பெற்றுள்ளன. திருவாலங்காட்டுப் பதிகத்தில் அம்மையார் "அண்டமுற நிமிர்ந்தாடு மெங்கள் அப்பனிடம் திருவாலங்காடே" என்று அம்மையார் குறிப்பதை, "அண்டமுற நிமிர்ந்தாடு லிங்கநாயனார் கோயில்" என்று கல்வெட்டு குறிக்கின்றது. காரைக்கால் அம்மையார் பாடல்கள் வாயிலாக அக்காலச் சமுதாயத்தை ஓரளவு உணர்ந்து கொள்ள முடிகிறது. மேலும், பேய்களின் பலவகைகளையும், அவற்றின் தோற்றம், செயல், சுடுகாட்டு வர்ணனையையும் அம்மையார் பாடல்கள் வாயிலாக நம்மால் உணர்ந்துகொள்ள முடிகிறது.

**சான்றெண் விளக்கம்**

1. அழகப்பன் வெ. சு., பதினொராந் திருமுறைத் திறன் பக்கம் – 101.

2. அற்புதத் திருவந்தாதி – 12,19,26,40,62

3. பன்னிரு பாட்டியல், சூத்திரம் – 151.

4. அற்புதத் திருவந்தாதி – 1,91
   திருவிரட்டை மணிமாலை – 11

5. அற்புதத் திருவந்தாதி – 87

6. மேலது. – 76

7. மேலது. – 9

8. மேலது.. – 11

9. மேலது.. – 15

10. மேலது.. – 57
மூத்த திருப்பதிகம்–I – 7,10

11. மூத்த திருப்பதிகம்–II – 11

12. 'சுடர் உரு'
அற்புதத்திருவந்தாதி – 2

'செம்மையான்' மேலது – 4

'மின்னுஞ் சுடர் உரு'
மேலது – 24

'பொன்மார்பின்' மேலது – 26

'பூக்கோல மேனி' மேலது – 29

'அம்பவளமேனி' மேலது – 39

'செம்மேனி' மேலது – 44

'சுடுவெண்பொடி
நிறத்தாய்' அற்புதத்

| | | | |
|---|---|---|---|
| | திருவந்தாதி | — | 56 |
| | 'செக்கர் போல் ஆகத்தான்' மேலது | — | 58 |
| | 'காலையே போன்றிலங்கும்மேனி' மேலது | — | 65 |
| | 'தழற்கொண்ட சோதிக் செம்மேனி' மேலது | — | 11 |
| | 'பவள வண்ணன்' மேலது | — | 92 |
| | 'தழல் வண்ணன்' மேலது | — | 82 |
| | 'செந்தீ அணையான்' மேலது | — | 13 |
| 13. | மூத்த திருப்பதிகம் | — | 5 |
| 14. | அற்புதத் திருவந்தாதி | — | 7,60 |
| | திருவிரட்டை மணிமாலை | — | 16 |
| 15. | மூத்த திருப்பதிகம் | — | 5 |
| 16. | அற்புதத் திருவந்தாதி | — | 50,51,58,95 |
| | திருவிரட்டை மணிமாலை | — | 5,12 |

7. அற்புதத் திருவந்தாதி – 41,59,52,54

ட. திருவிரட்டை மணிமாலை – 9

. மேலது – 5

மேலது – 15

மூத்த திருப்பதிகம் – 9

மேலது – 7

மேலது – 8

அற்புதத் திருவந்தாதி – 8,11,23

மேலது – 2,29, 30,31,37,95

திருவிரட்டை மணிமாலை – 17,17

ற்புதத் திருவந்தாதி – 38,48

லது – 7,29,39,56,59,65,95

ருவிரட்டை மணிமாலை – 12,14

ற்புதத்திருவந்தாதி – 1,4,6,22,23,26,33,35,36,46, 54,55,59,65,88,99,93

விரட்டை மணிமாலை – 9,10

| | | | |
|---|---|---|---|
| 27. | அற்புதத் திருவந்தாதி | – | 7,67,12,32,59,69,84,71,86 |
| 28. | மேலது | – | 3,15,26,32,36,37,49,53, 63,75,64,65 |
| | செஞ்சடை, மேலது | – | 52,55,58,68,79,82,83,90, 91,92 |
| | மூத்ததிருப்பதிகம் | – | 10 |
| | திருவிரட்டை மணிமாலை | – | 3,5,6,7,13,18 |
| 29. | கங்கை, அற்புதத் திருவந்தாதி | – | 8,11,23,53,67,71,73,75,90,95 |
| | திருவிரட்டை மணிமாலை | – | 1,5,7,13,14,18 |
| 30. | நாகம்,அற்புதத் திருவந்தாதி | – | 13,14,22,23,26,27,28, 35,36,38,42,46,48,55,57, 64,67,75,90 |
| | இரட்டை மணிமாலை | – | 3,4,6,7,17. |
| 31. | பிறை, அற்புதத் திருவந்தாதி | – | 3,11,19,22,32,35,36,37,40,42, 43,48,49,50,55,56,63,64,68, 69,71,72,75,88,90 |
| | திருவிரட்டை மணிமாலை | – | 1 |
| | மூத்த திருப்பதிகம் - II | – | 9,10 |

32. கொன்றை, அற்புதத் திருவந்தாதி — 53

திருவிரட்டை மணிமாலை — 3,7

33. எருக்கம்பூ — இரட்டை மணிமாலை — 1

34. வன்னிமலர், மேலது — 7

35. தலைமாலை, அற்புதத் திருவந்தாதி — 12,52

36. இராவணன், மேலது — 18

இரட்டை மணிமாலை — 14

37. அடிமுடி தேடல், அற்புதத் திருவந்தாதி — 19

இரட்டை மணிமாலை — 8

38. மார்க்கண்டேயன், அற்புதத் திருவந்தாதி — 89

39. சந்திரன், மேலது — 40

40. அருச்சுனன், மேலது — 62

41. மன்மதன், மேலது — 89

42. நஞ்சுண்டவன், மேலது – 55

திருவிரட்டை மணிமாலை – 18,20

43. முப்புரம் எரித்தல்,

அற்புதத்திருவந்தாதி – 27,32,34,37,81,84,

திருவிரட்டை மணிமாலை – 5,9,15

44. அற்புதத் திருவந்தாதி – 59, 94,100

திருவிரட்டை மணிமாலை – 17,18,19

45. அற்புதத் திருவந்தாதி – 99

46. மேலது – 67

47. மேலது – 100

48. இரட்டை மணிமாலை – 3

49. மூத்த திருப்பதிகம் - II – 1, 8, 5

50. அற்புதத் திருவந்தாதி – 15,17,40,46,78,77,79, 85, 87

திருவிரட்டை மணிமாலை – 11

51. அற்புதத் திருவந்தாதி – 13,27,51,76

திருவிரட்டை மணிமாலை – 7,17

52. திருவிரட்டை மணிமாலை – 16

53. அற்புதத் திருவந்தாதி – 68

54. சிலம்பு : மனையறம்படுத்த காதை, வரி – 88

55. சுப்பிரமணிய முதலியார்.சி.கே. காரைக்கால் அம்மையார் புராண, – ப. 898

56. மூத்த திருப்பதிகம் - I – 10

57. திருவிரட்டை மணிமாலை – 20

58.

59. பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும், கைலாசபதி க. – ப. 78

60. மேலது – பக். 72–73

61. மூத்த திருப்பதிகம் - I – 7,6,5

மூத்த திருப்பதிகம் - II – 1

62. மூத்த திருப்பதிகம் - I – 1,6,7

மூத்த திருப்பதிகம் - II – 1,2,8,10

திருவிரட்டை மணிமாலை – 15

அற்புதத் திருவந்தாதி – 29

63. அற்புதத் திருவந்தாதி – 29,51,86,98,99

64. மூத்த திருப்பதிகம் - I – 2,4,5,7,8

மூத்த திருப்பதிகம் - II – 2,4,7

65. மூத்த திருப்பதிகம் - I – 3,6

மூத்த திருப்பதிகம் - II – 2,3,5,6,8

*"இறவாத இன்பஅன்பு வேண்டிப்பின் வேண்டுகின்றார்*
*பிறவாமை வேண்டும் மீண்டும் பிறப்பு உண்டேல் உன்னை என்றும்*
*மறவாமை வேண்டும் இன்னும்வேண்டும்நான் மகிழ்ந்து பாடி*
*அறவா நீ ஆடும் போதுஉன் அடியின்கீழ் இருக்க என்றார்"*

*– பெரியபுராணம்*

## 4. பக்தி இயக்க வரலாற்றில் அம்மையார்

### 4.0 முன்னுரை

சைவ பக்தி இலக்கியத்தின் முன்னோடியான காரைக்கால் அம்மையாரைப் பற்றி அவருக்குப் பின்வந்த ஆசிரியர்கள் கூறுவதைக் காண்பதும், இவருடைய பாடல்களின் தாக்கம் எந்த அளவிற்குப் பின்னால் வந்தவர்களிடம் காணப்படுகிறது என ஆராய முயல்வதும், அம்மையார் காட்டும் தத்துவம், உவமை, உருவகம், கற்பனை, அணி ஆகியவற்றைப் பகுத்துக் காண்பதும் இவ்வியலின் நோக்கமாகும்.

முதலில் அம்மையாரைப் பற்றிப் பிற்கால இலக்கியங்களில் காணக் கிடைக்கும் குறிப்புகளைச் சற்று நோக்குவோம்.

### 4.1 அம்மையாரைக் குறிக்கும் பாடல்கள்

காரைக்கால் அம்மையாரைப் பற்றி நம்பியாண்டார் நம்பியும், நம்பி ஆரூரரும், சேக்கிழாரும் கூறிய செய்திகளை முன் இயலிலேயே கண்டோம். ஆகவே, அவை தவிர்த்து எஞ்சியுள்ள செய்திகளில் சில இவ்வியலில் தொகுத்தளிக்கப் பெறுகின்றன. அம்மையாரின் வாழ்வில் மிகவும் இன்றியமையாத நிகழ்ச்சிகள் ஐந்து இடம் பெறுகின்றன. அவை வருமாறு :

1. அம்மையார் சிவனடியாருக்கு மாங்கனி படைத்தது.
2. அம்மையார் எலும்புருப் பெற்றது.

3. அம்மையார் தலையால் நடந்து சென்றமை

4. இறைவனால் "அம்மையே" என்றழைக்கப்பட்டமை.

5. இறைவன் திருவடியின்கீழ் நீக்கமற வீற்றிருத்தல்.

அம்மையாரைப் பற்றிப் பாடல் புனைபவர்கள் இந்நிகழ்ச்சிகளில் ஒன்றிரண்டினை நிச்சயமாகக் கூறிச் செல்வர்.

### 4.1.1 அம்மையார் எழும்புருப் பெற்றது.

பரமதத்தன் அம்மையாரைத் தெய்வம் என உணர்ந்து காலில் விழுந்தார். கணவன் கருத்தை அறிந்துகொண்ட அம்மையார், சிவபெருமானை வேண்டிப் பேயுரு பெற்றார். இதைப் பெரியபுராணத்தில் சேக்கிழார் பாடியுள்ளார். இந்நிகழ்ச்சியைப் பிற்காலத்தில் பாம்பன் குமர குருதாச சுவாமிகள் பாடியுள்ளார். பாடல் வருமாறு :

> 'கானார் திருவாலங் காட்டாரயினாதா
> வானார் செம்மலர்ப் பாதா – நானார்
> உனக்கயலானோ மற்றோராத பேயோ
> எனக்கயல் போல் நீ நிற்பதென்'.

### 4.1.2 அம்மையார் தலையால் நடந்து சென்றமை

பேயுரு பெற்ற அம்மையார் இறைவனைக் காண கயிலைக்குச் சென்றபோது, கயிலை இறைவன் வீற்றிருக்கும் புனிதத் தலமாதலின் அதைக் காலால் கடந்தால், பாவம் என்றெண்ணி, தலையால் நடந்து சென்றார். இந்நிகழ்ச்சியைத் திருவாரூர்ப் புராணம் கூறுகிறது.

'விருப்பதி கத்தி னோடும்

விண்ணவர் வணங்கும் வெள்ளிப்

பொருப்பதில் தலையால் ஏகி

புனிதனைப் போற்றி மீண்டு

கருப்பதி அகற்றும் ஆலங்

காடடைந் தவனை மூத்த

திருப்பதி கத்தால் ஏத்தும்

அம்மையைச் சிந்தை செய்வாம்'

வானோர்கள் வணங்கும் கயிலை மலையில் தலையால் நடந்து சென்று, சிவனைப் பாடி, மீண்டும் ஆலங்காட்டுக்கு வந்து மூத்த திருப்பதிகத்தால் இறைவனைப் போற்றினர் என்று புகழ்கிறது இப்பாடல்.

'நண்ணித் தலையால் நடக்கின்றோம் என்பதெங்கள்

மண்ணில் பழைய வழக்கம் காண் – பண்ணில் சொல்

அம்மையார் வாமத்தோய் ஆயினும் முன் காரைக்கால்

அம்மையார் போல் நடந்தார் ஆர்'

தலையால் நடந்து செல்லல் என்பது எங்கள் மண்ணின் பழைய வழக்கமாகும். பண் அமைத்துப் பாடல் இயற்றிய காரைக்கால்

அம்மையார் போலத் தலையால் நடந்து சென்றவர் இவ்வுலகில் யார் ? என்று கேட்கிறார் இராமலிங்க அடிகளார்.

### 4.1.3 இறைவனால் அம்மையே என்றழைக்கப்பட்டமை

கயிலையில் தலையினால் நடந்து சென்ற அம்மையாரைக் கண்ட உமையவள், "தலையினால் நடந்துவரும் இவ்வெற்புடம்பின் அன்பு என்னே! " என்று வியந்து நிற்க, சிவபெருமான் இவள் நம்மைப்பேணும் அம்மையாவாள் என்று கூறி, 'அம்மையே' என்று அம்மையாரை அழைத்தார். அதற்கு அம்மையார் 'அப்பா' என்று கூறி எழுந்து நின்றார். இந்நிகழ்ச்சியைத் திருவாலங்காட்டுப் புராணம் எடுத்தியம்புகிறது.

"ஓதாமற்பல கலையு முணர்ந் தொளிருஞ்

சிவஞான வுருவமாகிப்

போதாருங் கயிலை யரனம்மை வாவென

வப்பா புகுந்தே னென்று

தாதாரு மலர்க் கரத்துச்சதிக் கிசையப்

பாணி திருத்தாள மேந்தும்

வாதாடும் பிரானடிக்கீழ் காரைக்கா

லம்மைபதம் வணங்கி வாழ்வாம்"

கயிலையில் இருக்கின்ற சிவபெருமான் "அம்மையே" வாவென்றழைக்க, அம்மையும் அப்பா வந்தேன் என்றுகூறி வந்து, தம் மலர் போன்ற கைகளிலே தாளத்தை ஏந்தி அவன் ஆட்டத்திற்கு இசையத் தாளமிசைத்து இறைவன் அடியின்கீழ் இருக்கின்ற அம்மையார் எனப் புகழப்படுகின்றார். சிவப்பிரகாச சுவாமிகளும் இந்நிகழ்ச்சியை எடுத்தாள்கிறார்.

"எவர்க்கும் இவன் தந்தையே அன்றித் தனயனாகாதவன்

காண் அந்தமில்சீர்க்

காரைக்காலம்மைதனை முந்தொருநாள் தப்பா அருளால்

தனக்கம்மை என்றவன் காண் என"

எல்லோருக்கும் தந்தையாக விளங்குகின்றவன் சிவபெருமான். அவரைப்பற்றிக் கூறும்போது மாணிக்கவாசகர், "தாயுமிலி தந்தையிலி தான் தனியன்" என்கிறார். அப்பெருமானே அம்மையாரைத் தனக்கு "அம்மை" எனக் கூறுகிறார். இப்பொருளில் அமைந்தது இப்பாடல்.

### 4.1.4 கயிலைக்குச் சென்ற அம்மையார்

'கொம்மைசேர் வரிமுலைக்கூற னார்தமைச்

செம்மைசேர் கயிலையில் சென்று போற்றியே

இம்மையே சிவகதி எய்து காரைக்கால்

அம்மைதாள் மலர்முடிக் கணிகு வாமரோ"

அம்மையார் கயிலைக்குச் சென்று இறைவனைப் போற்றிப்

புகழ்ந்த செய்தியை, சிவபுண்ணியத் தெளிவு விளக்குகிறது. இவ்வாறு அம்மையார் வாழ்க்கையில் அமைந்த முக்கிய நிகழ்ச்சிகள் பலவும் அமைந்த பாடல்களில் சிலவற்றைக் கண்டோம்.

## 4.2 அம்மையார் பாடல்களின் தாக்கம்

நாம் முன் இயல்களில் குறித்தவாறு சைவ பக்திப் பனுவல்களுக்கும், அம்மையாருடைய அருட்பாக்கள் மூல இலக்கியங்களாக விளங்குகின்றன. இறைவனுடைய பொருள் சேர் புகழ் குறித்து, பப்பத்துப் பாடல்களாகப் பதிகங்களைப் பாடும் போக்கு அம்மையாருடைய வாக்கிலிருந்து பெற்ற வளர்ச்சி எனலாம். ஒவ்வொரு பதிகத்தின் ஈற்றிலும், பதிகம் பாடியோருடைய பெயர், அப்பதிகத்தைப் பயில்வோர் பெறும் பயன் ஆகியவற்றைச் சுட்டிக் காட்டும் முறையை அம்மையாரே அற்புதத் திருவந்தாதியிலும், மூத்த திருப்பதிகங்களிலும் அமைத்துள்ளார். சிவனடியார்களேயன்றித் திருமால் அடியார்களும் தம் பக்திப் பதிகங்களைப் பாடுவதிலும், பதிகங்களின் ஈற்றில் பாடியோர் பெயரையும், பாடலைக் கற்பதன் / கேட்பதன் பயனையும் கூறும் மரபை அம்மையாரைப் பின்பற்றியே அமைத்துள்ளனர் எனலாம். மேலும், பதிகங்களாக அல்லாமல் நூறு பாடல்களாக இறைவனைப் பற்றிப் பாடுவதும் அம்மையார் தொடங்கி வைத்த ஒரு மரபேயாகும். இரட்டை மணிமாலை போன்ற சிற்றிலக்கிய வகையையும் பக்தி இயக்கத்தில் அம்மையாரே தொடங்கி வைக்கிறார். இவ்வாறு அம்மையாருடைய பக்தி இலக்கியப் பனுவல்கள் எவ்வாறு பிற்காலப் பக்தி இலக்கிய நூல்களுக்கு வழிகாட்டின என்பது இங்குச் சுருக்கமாக எடுத்துரைக்கப்படுகிறது.

பதிகம்

### 4.2.1 திருஞான சம்பந்தர்

திருஞானசம்பந்தர் தேவாரத்தில் பொதுவாகப் பதிகந்தோறும் பதினொரு பாடல்கள் காணப்படும். இவ்வரையறைக்குப் புறம்பாக 12 பாடல்கள் அமைந்த பதிகங்கள் பதின்மூன்றும் பத்துப்பாடல்கள் அமைந்த பதிகங்கள் நாற்பத்து நான்கும் உள்ளன. இவர் அருளிய திருஎழு கூற்றிருக்கை ஒரே நெடும் பாடலாக அமைந்த பாடலாகும். மேலும், இவர் தேவாரத்தில் இரண்டும் பலவுமாகப் பாடல்கள் சிதைந்து மறைந்த பதிகங்கள் எட்டு உள்ளன.[1] இவருடைய பாடல்களில் 22 வகையான பண்கள் இடம் பெற்றுள்ளன.

ஒவ்வொரு திருப்பதிகத்தின் ஈற்றிலுமுள்ள பதினோராவது திருப்பாடல் திருக்கடைக் காப்பு எனப்படும். இவ்வாறு அமையும் பாடல்கள் திருப்பதிகங்களைப் பாடும் அன்பர்கள் எல்லா நலன்களும் பெற்றுத் திகழ வேண்டும் என்று ஆளுடைய பிள்ளையார் ஆணையிடுவது போன்று அமைகின்றன. அடியார்கட்குத் தம் திருப்பாடல்களில் உறுதியான நம்பிக்கை ஏற்படும் வண்ணம் திருஞான சம்பந்தப் பிள்ளையார் இவ்வாறு ஆணையிட்டு முடிக்கின்றார் என்பர்[2]. இதற்குச் சான்றாக ஒருபாடல் வருமாறு:

"ஞாலத் துயர்கழி ஞான சம்பந்தன்

சீலத் தார்கொள்கைச் சிற்றம் பலமேய

சூலப் படையானைச் சொன்ன தமிழ்மாலை

கோலத் தாற்பாட வல்லார் நல்லாரே"[3]

#### 4.2.2 திருநாவுக்கரசர்

திருநாவுக்கரசர் தேவாரத்தில் பொதுவாகப் பதிகந்தோறும் பத்துப் பாடல்களே காணப்பெறுகின்றன. எனினும், முப்பது பாடல்கள் கொண்ட பதிகம் ஒன்றும், 20 பாடல்கள் கொண்ட பதிகம் ஒன்றும், 12 பாடல்கள் கொண்ட பதிகங்கள் ஐந்தும், 11 பாடல்கள் கொண்ட பதிகங்கள் ஐம்பத்திஆறும் இவர் அருளிய திருமுறைகளில் காணப்படுகின்றன. மேலும், ஒன்றும் பலவுமாகப் பாடல்கள் சிதைந்துள்ள பதிகங்கள் 42 உள்ளன. பதினோராவது பாடலில் சிவபெருமானை வணங்குவோர்க்கு என்ன பலன் என்று சில பாடல்களில் மட்டுமே குறிக்கப்பட்டுள்ளது. திருநாவுக்கரசர் பதிகங்களில் பாடியோர் பெயர் இடம்பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

#### 4.2.3 சுந்தரர்

சுந்தரர் அருளிய தேவாரப் பதிகங்கள் பெரும்பாலும் பத்துப் பாடல்களை உடையனவாகவே உள்ளன. எனினும், அவற்றுள் பன்னிரண்டு பாடல்களை உடைய பதிகங்கள் மூன்றும், பதினொரு பாடல்களை உடைய பதிகங்கள் முப்பத்தொன்றும், ஒன்றும் பலவும் பாடல் சிதைந்துள்ள பதிகங்கள் மூன்றும் உள்ளன. 17 வகைப் பண்கள் அமையச் சுந்தரர் பாடியுள்ளார்.

இவருடைய பதிகங்களில் பதினோராவது பாடல் பாடியோர் பெயரைக் கூறுவதாயும், பதிகத்தைப் பாடியதால் பெறப்படும் பலனைக் கூறுவதாயும் அமைந்துள்ளது.

"அன்னஞ் சேர்வயல் சூழ்பைஞ் ஞீலியில்

ஆர ணீய விடங்கரை

மின்னும் நுண்ணிடை மங்கை மார்பலர்

வேண்டிக் காதல் மொழிந்த சொல்

மன்னு தொல்புகழ் நாவலூரன் வன்

றொண்டன் வாய்மொழி பாடல்பத்

துன்னி இன்னிசை பாடுவார் உமை

கேள்வன் சேவடி சேர்வாரே[4].

### 4.2.4 அந்தாதி

அம்மையாரின் அற்புதத் திருவந்தாதி 101 வெண்பாக்களால் ஆகியது. 101ஆவது பாடல் பாடியோர் பெயரையும், கற்பதன் பயனையும் கூறுவது. இதுபோல் 11ஆம் திருமுறையில் பல அந்தாதிகள் அமைந்துள்ளன.

### 4.2.4.1 கயிலைபாதி காளத்திபாதி அந்தாதி

இந்நூல் நக்கீர தேவநாயனாரால் இயற்றப்பட்டது. 100 வெண்பாக்களால் அந்தாதி அமைப்பில் பாடப்பட்டுள்ளது. இதில் பாடியோர் பெயரோ, கற்பதன் பயனோ இடம்பெறவில்லை.

### 4.2.4.2 சிவபெருமான் திருவந்தாதி

இந்நூல் கபில தேவ நாயனாரால் இயற்றப்பட்டது. 100 வெண்பாக்களால் அந்தாதி அமைப்பில் இயற்றப்பட்டுள்ளது. இந்நூலிலும் இறுதி வெண்பாவில் பாடியோர் பெயரோ, நூலின் பயனோ கூறப்படவில்லை.

#### 4.2.4.3 சிவபெருமான் திருவந்தாதி

இந்நூல் பரணதேவ நாயனாரால் பாடப்பட்டது. 101 வெண்பாக்களால் அந்தாதி அமைப்பில் அமைந்துள்ளது. இது101ஆவது பாடல், பாடியோர் பெயரையும், கற்பதன் பயனையும் கூறுகின்றது.

'ஒன்றைப் பரணர் உரைத்த அந்தாதிபல

ஒன்றைப் பகரில் ஒருகோடி – ஒன்றைத்

தவிரா துரைப்பார் தளரார் உலகில்

தவிரார் சிவலோகந் தான்'[5]

#### 4.2.4.4 திருத்தொண்டர் திருவந்தாதி

நம்பியாண்டார் நம்பியால் இந்நூல் பாடப்பட்டது. இந்நூல் அந்தாதி முறையில் 89 பாடல்கள் கொண்டது. 89ஆவது பாடல் நூற்பயனைக் கூறுவது.

'ஓடிடும் பஞ்சேந் திரியம்

ஒடுக்கி என் ஊழ்வினைகள்

வாடிடும் வண்ணம் நின் றெத்தவம்

செய்தனன் வானிலுள்ளோர்

சூடிடும் சீர்த்திருப் பாதத்தர்

தொண்டத் தொகையின் உள்ள

சேடர்தம் செல்வம் பெரும்புகழ்

அந்தாதி செப்பிடவே'[6]

## 4.3 காரைக்கால் அம்மையார் காட்டும் தத்துவம்

காரைக்கால் அம்மையார் சைவ சித்தாந்தக் கருத்துக்களை நன்கு எடுத்துக் கூறியுள்ளார். பெண்களுக்கு முத்தி இல்லை என்பர் சமணர். சைவத்தில், அம்மையார். இறைவனை வழிபட்டு இறைவனின் திருவடி நீழலில் என்றும் இருக்கும் பேறு பெற்றவர். அத்தகைய ஞானப் பெண்டிர் கூறிய தத்துவத்தைச் சிறிது காண்போம்.

### 4.3.1 தத்துவம்

இறைவனே அனைத்து உயிர்களையும் தோற்றுவிப்பவன் ஆவான்[7]. அவன் அருளே உலகத்தை ஆளுகின்றது[8]. இறைவன் அருள் வாய்த்தால் வினை உண்டாக்கும் பிறவிக்கடலை நீந்தலாம்[9]. மேலும், பழமையான உலகத்திற்கு முதல்வனாய் நின்றவன் சிவனே என்றும்[10], அரனென்கோ, நான்முகனென்கோ, அரிய பரனென்கோ பண்புணர மாட்டேன் என்றும்[11], அறிவாய் விளங்குகின்றவனும் இறைவனே என்றும்[12] கூறுகின்றார். மேலும், பிறரால் அறியமுடியாத பெருமை உடையவன் அவன், பிறரால் அறியக் கூடிய பெருமை மிக்க உணர்வும் அவனே என்றும்[13], இறைவனை எவ்வுருவத்தில், எக்கோலத்தில் நினைந்து அடியார்கள் தவங்கள் செய்கின்றனரோ, அவர்களுக்கு அக்கோலத்தில் வந்து இறைவன் காட்சி தருவான்[14], என்றும் கூறுகின்றார். சிவனுக்கு நிலையான ஓர் உருவம் இல்லை என்பதனை, எவ்வுருவோ நின்னுருவம்[15] என்கிறார் அம்மையார். காலைப் பொழுதைப் போல விளங்குகின்றது நின்மேனி[16] என்றும், தனியாக நின்றவனும், தன்னைத்தானும் அறியாத தன்மையைக் கொண்டவனும் இறைவனே யாவான்[17] என்றும் கூறுகின்றார். ஈசன் அனைத்திலும் கலந்திருக்கின்றான் என்பதை ஈசன் இல்லாத பொருள் எதுவும் இல்லை[18] என்று காட்டுகிறார். இறைவன் பிறவாமல் காக்கும் பிரான்[19] என்றும் வேதத்திற்கு முதல்வன்[20] என்றும் தத்துவக் கருத்தினை அம்மையார் கூறுகிறார்.

அத்வைத தத்துவத்தை ஆதிசங்கரரே முதன்முதலில் தோற்றுவித்தார் என்பர். ஆனால், இவருக்கு முற்பட்ட காரைக்கால் அம்மையார் பாடலில் அத்வைத தத்துவக் கருத்து வெளிப்படுகிறது. உலகில் உள்ள பொருள்கள் அனைத்தையும் பிரம சொரூபமாகக் கருதும் அத்வைத தத்துவத்தை ஆதி சங்கரர் உருவாக்கினார். நான் பிரமம் (அஹம் பிரமாஸ்மி) நீ அதுவாகிறாய் (தத் த்வம் அசி) என்னும் மகாவாக்கியங்களால் அத்வைத சித்தாந்தத்தை ஆதி சங்கரர் விரித்துரைத்தார். அவருடைய கருத்துப்படி இவ்வுலகில் வாழுகின்ற ஒவ்வொன்றும் பிரமத்தின் தோற்றமேயன்றி வேறு அன்று. அவனே எல்லாமாக எங்குமாக இருக்கின்றான். இந்நுட்பமான கருத்து அம்மையாருடைய அற்புதத் திருவந்தாதியில் இடம்பெற்றிருப்பது கருதத்தக்கது. அப்பாடல் வருமாறு :

'அறிவானுந் தானே அறிவிப்பான் தானே

அறிவாய் அறிகின்றான் தானே – அறிகின்ற

மெய்ப் பொருளுந் தானே விரிசுடர்பார் ஆகாயம்

அப்பொருளுந் தானே அவன்'[21]

### 4.4 கற்பனை

தத்துவக் கருத்துக்களை அற்புதமாகக் கையாண்டுள்ள அம்மையார் இலக்கியங்களில் அழகிய கற்பனைகள் பல இடம்பெற்றுள்ளன. இக்கற்பனையை உவமை, உருவகம், தன்மையணி, தற்குறிப் பேற்றம், வஞ்சப்புகழ்ச்சி, உயர்வு நவிற்சி, சிலேடை போன்ற அணிகளைப் பயன்படுத்தி வளம் பெறச் செய்கிறார்.

தலைவி தலைவனிடம் ஊடல் கொண்டிருக்கும் காலத்தில், தலைவன் தலைவியைப் பணிந்தேனும் அவளுடைய ஊடலைத் தணிக்க வேண்டும் என்பது தொல்காப்பியம்.

'மனைவி உயர்வுங் கிழவோன் பணிவும்

நினையுங் காலைப் புலவியுள் உரிய'[22]

சிவபெருமானுக்கும் இந்நிலை ஏற்பட்டதைக் காரைக்கால் அம்மையார் இனிமையுடன் கூறுகிறார்.

'சிலம்படியாள் ஊடலைத்தான் தவிர்ப்பான் வேண்டிச்

சிலம்படிமேற் செவ்வரத்தஞ் சேர்த்தி – நலம்பெற்

றெதிராய செக்கரினும் இக்கோலஞ் செய்தான்

முதிரா மதியான் முடி'[23]

இறைவன் செம்மை நிறத்தவன்; அச்செந்நிறம் அவனுடைய கைகளிலும் வெளிப்படுகிறது. அச்செம்மையைக் கண்ட அம்மையாருக்கு ஒரு கற்பனை தோன்றுகிறது.

'அழலாட அங்கை சிவந்ததோ அங்கை

அழகால் அழல்சிவந்த வாறோ – கழலாடப்

பேயாடு கானிற் பிறங்க அனலேந்தித்

தீயாடுவாய் இதனைச் செப்பு'[24]

"பேய்கள் ஆடுகின்ற காட்டில், கையில் அனல் ஏந்தி

கழல்கள் ஒலிப்ப ஆடும் இறைவா ! உன் கையில் உள்ள நெருப்பால் கை சிவந்ததோ ? கையின் செந்நிறத்தால் நெருப்பு சிவந்ததோ?" என்பது நல்ல கற்பனை.

## 4.5 உவமை

### 4.5.1 மேனி

சிவபெருமான் மேனிக்கு, பொன், பவளம், வெள்ளி, வானம், காலைப்பொழுது ஆகியவற்றை உவமையாக்கி மகிழ்கின்றார் அம்மையார்.

'பொன்வரையே போல்வான்'

'அம்பவள மேனி'

'பொடியணிந்தால் வெள்ளி மணிவரையே போலும்'

'நீருருவ மேகத்தாற் செய்தனைய மேனியான்'

'செக்கர்போல் ஆகத்தான்'

'காலையே போன்றிலங்கும் மேனி'

'பொன்உரு வடிவில்'

'அம்பளவண்ணன்'

'பொன்னொப்பாய்'[25]

### 4.5.2 மார்பு

மார்புக்கு பொன்னை உவமையாக்கிப் 'பொன்போன்ற மார்பு' என்று வருணிக்கிறார்.

'பொன் மார்பின்'[26]

என்பது அம்மையார் வாக்கு.

### 4.5.3 கண்டம்

கறைஇருள்,மணி,கார்மை ஆகியவற்றைசிவபெருமானின் கண்டத்திற்கு உவமையாக்குகின்றார் அம்மையார்.

'இருண்டமையை கண்டத்தீர்'

'கறைமிடற்றான்'

'நீலமணி மிடற்றான்'

'கோலமணி மிடறு'

'காருருவக் கண்டம்'

'வீங்கிருளே போலும் மிடறு'

'மிடற்றகத்து மைத்தாம் இருள்போலும் வண்ணம்'[27]

### 4.5.4 சடை

செம்மை, பொன், வெள்ளி, செவ்வானம், நெருப்பு ஆகியவற்றைச் சடைக்கு உவமையாக்கி மகிழ்கின்றார்.

'செஞ்சடையாய்'

'ஞான்ற குழற்சடைகள் பொன்வரைபோல் மின்னுவன' திங்கள் சேர்ந்திருக்கும் சடையானது,

'பொன்னோடு வெள்ளிப் புரிபுரிந்தாற் போலாவே' உள்ளதாகக் கூறுகிறார். மேலும்,

'செக்கரவ் வானமே யொக்கும் திருமுடிக்கே'

'தூங்குருவே போலுஞ் சடைக்கற்றை'

'எரிபாய்ந்தன்ன புரிசடையாய்'

'விரிசடையாம்'

'பொன்னைச் சுருளாகச் செய்தனைய தூர்ச்சடையான்'[28] என்றெல்லாம் மிக இனிமையாக வருணனை செய்கின்றார்.

### 4.5.5 சிவனும் திருமாலும்

சிவபெருமானும், திருமாலும் ஒன்றாகச் சேர்ந்திருக்கின்ற காட்சி பொற்குன்றும், நீலமணிக்குன்றும் ஒன்றாக இணைந்தது போல் இருப்பதாக அம்மையார் காட்டுகின்றார்.

'பொற்குன்றும் நீலமணிக்குன்றும் தாமுடனே

நிற்கின்ற போலும் நெடிது'[29]

என்கிறார்.

### 4.5.6 விடை

சிவபெருமானின் ஊர்தியான விடைக்கும் உவமை காட்டப்படுகிறது.

'மஞ்சுபோல் மால்விடையாய்'[30]

என்று அவருடைய ஆனேறு வெள்ளை நிறத்தது என்பதை மேகத்தோடு ஒப்பிடுகின்றார்.

## 4.6 உருவகம்

இறைவன் உருவத்தைச் சுடராகவும் சோதியாகவும் காரைக்கால் அம்மையார் புகழ்கின்றார். என் சிந்தனையில் சுடர் உருவாய் மின்னுகின்றாய் என்றும்[31], அடியார்களின் சிந்தையிலே சோதிவடிவாய்த் தோன்றுகின்றான் என்றும்[32], கூறுகிறார். கண்டத்தழகை வருணிக்கும்போது அதை நீலமணி என்பேனோ, இருளின் உருவென்று கூறுவேனோ, பெரிய (கரிய) மேகம் என்பேனோ என்றும் எப்படி உருவகிப்பது என்று மயங்குகின்றார்.[33] பாம்பே சிவபெருமானின் உடலில் எங்கும் தவழுகின்ற காட்சியை, "அணிகலனாக ஒரு பாம்பை அணிந்திருக்கிறாய், மற்றதை அரைஞாணாக அணிந்திருக்கின்றாய்" என்று பாம்பை அணிகலனாக உருவகிக்கின்றார்[34].

## 4.7 தன்மை அணி

### பொருள் தன்மை

பொருளிடத்துள்ள பலவிதமான இயல்புகளை உள்ளதை உள்ளவாறே அலங்கரித்துக் கூறுவது தன்மை அணியாகும்.

'பாம்பும் மதியும் மடமானும் பாய்புலியும்

தாம்பயின்று தாழருவி தூங்குதலால் – ஆம்பொன்

உருவடிவில் ஓங்கொலிசேர் கண்ணுதலான் கோலத்

திருவடியின் மேய சிலம்பு'[35]

பாம்பையும், மதியையும், மானையும், புலியையும், கங்கையையு தன் உடலிலும், தலையிலும் தாங்கிய இறைவன் தன் பாதத்தி சிலம்பு அணிந்திருக்கிறான் என்னும் பொருள் தன்மை அணியா இப்பாடல் அமைகின்றது.

## 4.8 தற்குறிப்பேற்றம்

பொருளிடத்து இயல்பாக நிகழ்கின்ற நிகழ்ச்சியில் புலவன் தன் கருத்தை ஏற்றிக் கூறுவது தற்குறிப்பேற்ற அணியாகும் இவ்வணி அம்மையார் பாடல்களில் பயின்றுவரக் காணலாம்.

சிவபெருமானின் செம்மேனியில் திகழும் பூணூல், இறைவன் தலையில் சூடிய பிறையின் ஒரு கதிர் ஒழுகியதுபோல் காணப்படுகிறது என்கிறார். இறைவன் தலையில் மிளிர்கின்ற மதி, அதனருகில் இருக்கும் பாம்பை நினைந்து, அதுதன்னை விழுங்கிவிடுமோ என அஞ்சும்போது, அதனால் வளரமுடியுமோ?[36] இறைவன் கழுத்தினைச் சுற்றியுள்ள பாம்பிற்கு விடம் வந்தது எவ்வாறு? என்று அம்மையார் சிந்திக்கிறார்.

"மிடற்றில் விடமுடையீர் உம்மிடற்றை நக்கி

மிடற்றில் விடங் கொண்டவாறோ"[37]

என்ற பாடல்களில் தன் குறிப்பை ஏற்றிக் கூறியுள்ளார்.

## 4.9 வஞ்சப் புகழ்ச்சி

புகழ்வதுபோல் பழித்தலும், பழிப்பதுபோல் புகழ்தலுமாகிய இவ்விரண்டும் வஞ்சப்புகழ்ச்சி அணியாகும். உன்னைவந்து யாரும் அடையாதவாறு பாம்பினை அணிந்து கொண்டு, தலையோடுகளாலும், வெள்ளை எலும்பாலும் ஆன மாலைகளை

அணிந்துகொண்டு, காளை வாகனத்தில் ஏறுகின்ற உன்னை அன்பால் எவ்வாறு அடையமுடியும்?[38] என்கிறார் அன்பால் இறைவனைச் சேர்ந்த அம்மையார்.

### 4.10 உயர்வு நவிற்சி

ஒன்றனை மிகவும் உயர்த்திப் பாடுவது உயர்வு நவிற்சி ஆகும். அவ்வகையில் அம்மையார் இறைவனை உயர்த்திப் பாடுகின்றார்.

தேவர்கள் அஞ்சும்படிப் பாற்கடலில் தோன்றிய விடத்தை உண்டதனால், இறைவன் கழுத்துக் கருமை நிறம் கொண்ட தோடல்லாமல் பாம்பு பொருந்திய அவனது நீண்ட சிவந்த சடையின் மேல் உள்ள வெண்ணிலவின் நடுவிலும், அழகிய மச்சம் போல் விளங்கும் தழும்பு உளதாயிற்று.[39] இதிலிருந்து நஞ்சின் கொடுமையும், இறைவன் பெருமையும் விளங்கும்.

'. . . . . . . . . . . . . அடுக்கல்

பொருமேறோ ஆனேறோ பொன்னொப்பாய் நின்னே(று)

உருமேறோ வொன்றா உரை'[40]

என்ற பாடலில், உன்னுடைய ஏறு, மலையில் விலங்குகளோடு போரிடும் சிங்கமோ, இடபந்தானோ, பேரிடியோ அதனை உரைப்பாயாக என்பது உயர்வு நவிற்சியணியாகும்.

### 4.11 பின்வரு நிலையணி

வந்த சொல்லும், பொருளும் தொடர்ந்துவரத்தொடுப்பது பின்வரு நிலையணி ஆகும். அம்மையார் பாடலில் பயின்றுவரும் இவ்வணியை ஈண்டுக் காணலாம்.

### 4.11.1 சொற்பின்வரு நிலையணி

"தலையாய ஐந்தனையுஞ் சாதித்துத் தாழ்ந்து

தலையாயின உணர்ந்தோர் காண்பர் – தலையாய"[41]

என்ற இப்பாடலில் தலையாய என்ற சொல் பின்வரு நிலையணியாக, பல இடங்களில் காணக் கிடைக்கிறது.

"அடித்தலத்தின் அன்றரக்கன் ஐந்நான்கு தோளும்

முடித்தலமும் நீமுரித்த வாறென் – முடித்தலத்தில்..."[42]

இராவணன் கயிலைமலையைப் பெயர்க்க முனைந்தபோது அவன் ஆணவத்தைச் சிவபெருமான் அடக்கிய செய்தியைக் கூறும் இப்பாடலில் 'முடித்தலம்' என்ற சொல் பின்வருநிலை அணியாய் அமைந்துள்ளது. சொற்பின்வரு நிலையணியாக இருபாடல்கள் அமைந்தது போல் பல பாடல்கள் சொற்பொருள் பின்வரு நிலையணியாகவும் அமைந்துள்ளன.[43]

### 4.12 மயக்க வணி

'திருமார்பில் ஏனச் செழுமருப்பைப் பார்க்கும்

பெருமான் பிறைக் கொழுந்தை நோக்கும் – ஒருநாள்

இதுமதியென் றொன்றா இன்றளவுந் தேரா(து)

அதுமதி யொன் றில்லா அரா'[44]

இறைவன் சூடியுள்ள பாம்பு, சிவபெருமான் மேனியில் உள்ள பன்றிக் கொம்பையும், தலையில் உள்ள பிறையையும், எது பிறை என

அறியாமல், மாற்றி மாற்றிப் பார்க்கும் என்று குறிப்பிடுவதில் மயக்க வணியை அமைத்துள்ளார்.

## 4.13 முடிவுரை

சைவ பக்தி இலக்கியத்தின் முன்னோடியான காரைக்கால் அம்மையாரைப் பற்றி அவருக்குப் பின் வந்தவர்கள் தம் பாடல்களில் குறிப்பிட்டுள்ளனர். அம்மையாரைக் குறிக்க அவர்களுக்கு ஐந்து நிகழ்ச்சிகள் அடிப்படையாக அமைந்தன. அம்மையார் இயற்றிய அந்தாதி, பதிகம் ஆகியவற்றின் அமைப்பைப் பிற்காலத்தில் தோன்றிய பக்தி இலக்கியங்களைப் படைத்தவர்கள் எவ்வாறு கையாண்டுள்ளனர் என ஓரளவு விளக்கிக் கூறப்பட்டது. சைவ சித்தாந்த தத்துவம் அம்மையார் பாடல்களில் சிதறிக் காணப்படுகின்றன. அத்தத்துவத்தையும், அம்மையார் பாடல்களில் அமைந்த கற்பனை மற்றும் அணிகளையும் இவ்வியல் ஓரளவு பகுத்துக் காட்டுகிறது.

## சான்றெண் விளக்கம்

1. தேவாரம், "Institut Francais D'Indologie" Pondicherry.
2. பாண்டுரங்கன். அ., என்றுமுள தென்றமிழ் பக்கம் 145.
3. தேவாரம், முதல் திருமுறை பாடல் 11
4. தேவாரம், ஏழாம் திருமுறை, திருப்பைஞ்ஞீலிபதிகம் பாடல் 11
5. பரணதேவ நாயனார், 11ஆம் திருமுறை, சிவபெருமான் திருவந்தாதி பாடல் 101
6. நம்பியாண்டார் நம்பி, 11ஆம் திருமுறை, திருத்தொண்டர் திருவந்தாதி பாடல் 89

7. அற்புதத் திருவந்தாதி பா. 5

8. மேலது பா. 9

9. மேலது பா. 16

10. மேலது பா. 17

11. மேலது பா. 18

12. மேலது பா. 20

13. மேலது பா. 30

14. மேலது பா. 33

15. மேலது பா. 61

16. மேலது பா. 65

17. மேலது பா. 92

18. திருவிரட்டை மணிமாலை பா. 7,16

19. மேலது பா. 2

20. மேலது பா. 8

21. அற்புதத் திருவந்தாதி பா. 20

22. தொல், பொருளியல் பா. 31

23. அற்புதத் திருவந்தாதி பா. 68

24. மேலது பா. 98

25. மேலது பா. 8,39,54,58,65,66

26. மேலது பா. 26

27. மேலது பா. 22,26,33,35,54,65,66

28. செஞ்சடை, மேலது பா. 15,58,83,26,49,58,65,70,75,92

29. மேலது பா. 83

30. மேலது பா. 94

31. மேலது பா. 24

32. மேலது பா. 17

33. மேலது பா. 88

34. மேலது பா. 28

35. மேலது பா. 67

36. மேலது பா. 36

37. மேலது பா. 66

38. திருவிரட்டை மணிமாலை பா. 17

39. அற்புதத் திருவந்தாதி பா. 55

40. மேலது பா. 100

41. திருவிரட்டை மணிமாலை பா. 10

42. மேலது பா. 14

43. அற்புதத் திருவந்தாதி பா. 11,12,45,62,66

44. மேலது பா. 48

*உன்னி இன்னிசை பாடுவார்*
*உமைகேள்வின் சேவடி சேர்வாரே*

# 5. சிவபெருமானின் பல்வகைத் தாண்டவங்கள்

## 5.0 முன்னுரை

காரைக்கால் அம்மையாருடைய வாழ்க்கைச் சிறப்புகளுள் மிக உயர்ந்த கூறு இறைவன் அடிக்கீழ் அமர்ந்து அவனுடைய ஆடலை என்றும் கண்டுகொண்டிருப்பதே ஆகும். கயிலாயத்தில் இறைவனிடம் வேண்டிப் பெற்ற வரங்களுள் ஒன்றாக இஃது அமைகின்றது. இறைவன் அவரைத் திருவாலங்காடு சென்று, தான் ஆடும் ஆடலைக் கண்டு, தன் திருவடி நிழலில் அமர்ந்துறையுமாறு அம்மையாரைப் பணித்ததாகப் பெரியபுராணம் பேசுகின்றது.[1] எனவே, அம்மையாருடைய திருப்பதிகங்களில் சிவபெருமானுடைய ஆடல்கள் குறித்த பல செய்திகள் இருக்கும் என்று நாம் எதிர்பார்க்கலாம். இவ்வியலில் சிவபெருமான் ஆடல் குறித்த பொதுவான செய்திகளும், அம்மையார் பாடல்களில் இடம்பெற்றுள்ள சிவபெருமான் ஆடல்குறித்த சிறப்புச் செய்திகளும் இடம் பெறுகின்றன.

## 5.1 தாண்டவம் என்னும் சொல்லின் பொருள்

'ஆடல்' என்னும் தமிழ்ச் சொல்லுக்கு இணையாகத் 'தாண்டவம்' என்னும் வடசொல்லும் பெருவழக்காகப் பயின்று வருகின்றது. சமய நூல்கள் பலவற்றுள்ளும் சிவபெருமான் ஆடலைத் 'தாண்டவம்' என்று முன்னோர்கள் மொழிந்துள்ளதால் இவ்வியலிலும் பிற இயல்களிலும் 'தாண்டவம்' என்னும் கலைச்சொல் பயன்படுத்தப்படுகின்றது. 'தட்' என்று நிலத்தில் தட்டி ஆடுவதால், இது தாண்டவமானதாகவும், சிவபெருமானின் சீடரான தண்டு சொல்லிக் கொடுத்ததால் தாண்டவமானதாகவும் இரண்டு மாறுபட்ட கருத்துகள் நிலவுகின்றன. தாள் தவம் என்பது

தாண்டவமாகியிருக்கலாம் என்று திருச்சி வானொலி நிலையத்தில் பணியாற்றும் திரு. தே. சந்திரன் கருதுகிறார் என்று கரணக் குழப்பங்கள் தெரிவிக்கின்றது.[2] ஆடிப்பாடி இறைவனை வழிபடுதல் இறை வழிபாட்டில் ஒரு கூறாகும். தாளால் இயற்றுகின்ற தவமே பின்னர்த் தாண்டவம் ஆயிற்று எனலாம். இக்கருத்துப் பொருந்துவதாகவும் தோன்றுகின்றது.

## 5.2 இலக்கியங்கள் காட்டும் சிவபெருமான் ஆடல்

### 5.2.1 சங்க இலக்கியம்

சிவபெருமான் ஆடிய நடனம் பற்றிப் பண்டைத் தமிழ் இலக்கியங்களில் பரவலாகக் காணப்படுகிறது. சங்க இலக்கிய நூலான கலித்தொகையில் சிவபெருமான் கூத்தியற்றுவதும், உமையம்மை தாளம் போடுவதும் வருணிக்கப்படுகின்றன.

### 5.2.2 கலித்தொகை

கலித்தொகையில் உள்ள கடவுள் வாழ்த்துப்பாடல் மூவகைக் கூத்துப் பற்றிப் பேசுவதாகும். "பலவாகிய வாத்தியங்கள் ஒலிக்கக் கட்புலனாம் பல வடிவங்களையும் நின்னிடத்தே ஒடுக்கிக் கொண்டு கொடிய கொட்டிக் கூத்தினை ஆடும்போது உமை தாள இறுதியைத் தன்னிடம் கொண்ட சீரைத் தருவாளோ ?

"திரிபுரத்தை அழித்து வெந்த நீற்றைப் பூசிக்கொண்டு பாண்டரங்கம் என்ற கூத்தை நீ ஆடும்பொழுது உமையவள் தூக்கைத் தருவாளோ?"

"புலித்தோலை உடுத்துக் கொன்றை மாலை புரள மண்டை ஒட்டை ஏந்திக் காபாலம் என்னும் கூத்தை நீ ஆடும்பொழுது உமை தாளத்தின் முதல் எடுக்கும் காலத்தினைத் தருவாளோ?[3]

ஒவ்வொரு தாளத்திற்கும் பாணி, தூக்கு, சீர் என மூன்றும் இருப்பினும் ஒவ்வொரு கூத்துக்கு ஒன்று முக்கியமாகலின் அதனைக் கூறினார் என்பது நச்சினார்க்கினியர் கருத்து.

கலித்தொகைக் கடவுள் வாழ்த்துப் பாடல் தமிழகத்தில் சிவ வழிபாட்டில் அச்சிவபெருமானுக்குரியனவாகப் புதிய செய்திகள் இரண்டைக் கூறுதல் சிந்திக்கற்பாலது. முதலாவது, அவன் சங்கார காலத்தில் ஆடுபவன்; இரண்டாவது, உயிர்கள் மாட்டுக்கொண்ட கருணையால் கட்புலனாம் வடிவுகொண்டு அருள் செய்ய ஆடுதல்.

### 5.2.3 காப்பியத்தில் நாட்டியம்

கண்ணன் காளிங்கன் மீது நடனம் செய்தமையும், திருமால் குடக்கூத்து ஆடினமையும் நாம் அறிந்த செய்திகள். சிலப்பதிகாரத்தில், மாதவி ஆடிய பதினோருவகை ஆடல்களில், சிவபெருமான் ஆடிய கொடுகொட்டியும், பாண்டரங்கக் கூத்தும் இடம்பெறுகின்றன. மேலும், நடுகற் காதையில் கூத்தச் சாக்கையன் ஆடிய ஆடலும் பேசப்படுகிறது. இவ்வாடல் உமையை இடப்பாகத்தில் தாங்கியிருக்கும் சிவபெருமான் வலப்புறம் மட்டுமே அசைய, ஆடிய கொடுகொட்டியைக் கூத்தச் சாக்கையன் ஆடியதாகக் கூறப்படுகிறது.

"இமையவன் ஆடிய கொட்டிச் சேதம்
பாத்தரு நால்வகை மறையோர் பறையூர்க்
கூத்தச் சாக்கைய னாடலின் மகிழ்ந்தவன்"[4]

### 5.2.4 தேவாரப் பதிகங்களில் நாட்டியம்

"சீராலே பாடல் ஆடல் சிதைவில்லதோர்
ஏரார்பூங் கச்சி"

"வலம்வந்த மடவார்கள் நடமாட

முழவதிர மழையென் றஞ்சி

சிலமந்தி அலமந்து மரமேறி

முகில் பார்க்கும் திருவையாறே"

என்று நடனக்கலை பற்றிய செய்திகளைத் திருப்பதிகங்களின் வாயிலாக அறியமுடிகிறது.[5]

### 5.2.5 சோழர் காலத்தில் நாட்டியம்

தஞ்சைப் பெரிய கோவிலின் கருவறையின் புறச் சுவரில் தீட்டப்பட்ட ஓவியங்கள் சோழர்கால நாட்டியப் பெருமைக்குச் சான்றாகும்.

இராசராசன் தான் தஞ்சையில் அமைத்த பெரியகோவிலில் இசை, நடனம் ஆகிய இரண்டையும் வளர்க்கப் பதியிலார் நானூற்றுவரைப் பல கோவில்களிலிருந்து வரவழைத்து, ஒவ்வொருவருக்கும் ஒரு வீடும், ஒரு வேலி நிலமும் அளித்தான் என்று அப்பெரிய கோவில் கல்வெட்டுப் பேசுகிறது.[6] சாக்கைக் கூத்தில் வல்லவன் முதலாம் இராசேந்திரன் காலத்தில் இருந்தான். அவன் 'சாக்கை மாராயன்' என்ற பட்டம் பெற்றதாகக் கல்வெட்டுக் குறிக்கின்றது.[7]

### 5.3 சிவபெருமானின் தாண்டவங்கள்

சிவபெருமான் ஆடியவை 108 தாண்டவங்கள் என்றும், 64 தாண்டவங்கள் என்றும், அவைகளுள் 9 தாண்டவங்களே முக்கியமானவை என்றும் கூறப்படுகின்றன. அதுவும் குறுகி, ஏழுதாண்டவங்களே புகழ்பெற்று "ஸப்த தாண்டவம்" என்று குறிக்கப்பட்டுள்ளன. "செயற்கரிய திருநடம்" என்று அப்பர் கூறுகின்ற படியால், இத்தாண்டவம் 'செய்வது கடினமாகும் என்று தெரிகிறது.

### 5.3.1 சபைகளும் தாண்டவங்களும்

சிவபெருமான் தாண்டவம் ஆடிய இடங்கள் சபைகள் எனப்படுகின்றன. இறைவன் ஐந்து சபைகளில் தாண்டவம் ஆடியதாகக் கூறுவது மரபு. அவற்றைக் கீழே காணலாம்.

#### 5.3.1.1 இரத்தின சபை

தாண்டவத்துடன் தொடர்புகொண்ட முதன்மையான இடம் இரத்தின சபை. இங்கு ஆடும் இறைவன் இரத்தின சபாபதி எனப்படுகிறார். அரங்கம் சிவப்புக் கற்களால் அலங்கரிக்கப்பட்டுள்ளது. இச்சபை திருவாலங்காட்டில் அமைந்துள்ளது.

#### 5.3.1.2 இரசத சபை

மதுரையில் அமைந்த வெள்ளியம்பலமே இரசதசபை எனப்படுகிறது. மதுரை எவ்விதத்திலும் சிதம்பரத்தினும் குறைந்ததன்று என்று வலியுறுத்த இறைவனால் ஏற்படுத்தப்பட்டது வெள்ளியம்பலம். இந்திர விமானம் என்று அழைக்கப்படும் கர்ப்பக்கிரகத்தின் எதிரில் இரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்ட வெள்ளியம்பலம் காட்சி தருகிறது.

#### 5.3.1.3. கனக சபை

தில்லை மரங்களாலான காடான சிதம்பரத்தில், தங்கத்தாலான சபை கனகசபை எனப்படும். சிதம்பரம் வியாக்கிரபாதர் உடன் தொடர்புபடுத்தப்படுவதால் இது வியாக்கிரபுரம் அல்லது புலியூர் எனப்படும். வீராட்புருஷனின் இதயத் தாமரையுடன் தொடர்பு படுத்தப்படுவதால் புண்டரீகபுரம் என்று மற்றொரு பெயரும் இதற்கு உண்டு.

#### 5.3.1.4 தாமிர சபை

திருநெல்வேலியில் உள்ள சபை தாமிர சபை. வேணுவனம் என்பது இப்பகுதியோடு தொடர்புபடுத்தப்படுகிற ஒரு காடாகும். இங்குச் செம்பாலான சபை காட்சி தருகிறது. இது தாமிர சபை எனப்படும்.

#### 5.3.1.5 சித்திர சபை

மற்றொரு சிறப்புமிக்க சபை, குற்றாலத்தில் உள்ள சித்திரசபை ஆகும். சிவபெருமானும், திருமாலும் ஒன்றாக இத்தலத்தில் ஆடியதாக ஓர் ஐதீகம் இத்தலத்துடன் தொடர்புபடுத்தப்படுகிறது. இக்கோயில் திருமாலுக்கு உரிமையுள்ளது என்றும், பின்னர் அகத்தியரால் இது சிவத்தலமாக மாற்றப்பட்டது என்று குற்றலாத் தலபுராணம் கூறுகின்றது. இத்தலத்தின் நாயகனான சிவபெருமானுக்குச் சிற்ப உருவம் இல்லை. ஆனால், சித்திரத்தில் உருவம் தீட்டப்பட்டு உள்ளது. ஆகவேதான், இது சித்திரசபை எனப்படுகிறது. இது மிகப் பெரியதும், சித்திரங்களால் நிரம்பியதுமான கூடமாகும்.

### 5.4 தாண்டவக் குறிப்புகள்

#### 5.4.1 காளிகா தாண்டவம்

இது படைத்தல் செயலைக் குறிக்கும். இதற்கு முனி தாண்டவம் என்ற மற்றொரு பெயரும் உண்டு. இத்தாண்டவத்தில் தாண்டவப் பெருமானின் பாதங்கள் முயலகனை ஊன்றி மிதித்து அழுத்தவில்லை

சிவனுடைய வலக் கையில் உள்ள துடி, அவருடைய செவிக்கு அருகில் ஒலிக்கிறது. நாதத்தை உண்டாக்கும் துடியும், ஓங்காரத்தைக் குறிக்கும் செவியும், இந்தப்படைப்புத் தாண்ட வத்தில் ஒன்றுக்கொன்று அண்மையில் சேர்ந்துள்ளன.

### 5.4.2 சந்தியா தாண்டவம்

இது காத்தல் செயலைக் குறிக்கும். இத்தாண்டவத்திற்குக் கௌரி தாண்டவம், இலக்குமி தாண்டவம், சந்தியா தாண்டவம், ரக்ஷா தாண்டவம், புஜங்கலளிதம், புஜங்க திராசம் என்னும் பல பெயர்கள் உள்ளன. கௌரியம்மையின் பொருட்டு ஆடினமையால் கௌரி தாண்டவம் என்றும், மாலை நேரத்தில் ஆடினமையால் சந்தியா தாண்டவம் என்றும், காக்கும் பொருட்டு ஆடியமையால் ரக்ஷா தாண்டவம் என்றும் பெயர்களைப் பெற்றது.

வாசுகி, கார்க்கோடகன் என்னும் பாம்பரசர்கள் தவங்கிடந்து பெற்ற வரத்தின் பயனாக நிகழ்ந்த இத்தாண்டவத்தில் பாம்பே முதலிடம் பெறுகிறது. காத்தல் செயல் இருவகைப்படும்; அவை, இன்பக் காத்தல், துன்பக் காத்தல் எனப்படும். இன்பக் காத்தல் புஜங்கலளிதம் என்றும், துன்பக் காத்தல் புஜங்கத் திராசம் என்றும் கூறப்படுகின்றன. சந்தியா தாண்டவத்தில் சிவபெருமானுக்கு எட்டு அல்லது பத்துக்கைகள் உண்டு; எனினும், நான்கு கைகளே அமைப்பது வழக்கம். இத்தாண்டவத்தில் தீச்சுடர் இடம்பெறுவதில்லை. முயலகனைப் பாம்பின் உருவமாகக் கையில் ஏந்தியிருப்பதாகக் கூறப்படுகிறது. எனவே, இத்தாண்டவ மூர்த்தம் சிலவற்றில் முயலகன் இருப்பது இல்லை.

### 5.4.3 சங்கார தாண்டவம்

உயிருக்குக் கொடுக்கப்பட்ட உடம்பு முதலியவற்றைக் அழித்தல் என்ற செயலைக் குறிக்கும் தாண்டவம் சங்கார தாண்டவம் என்று கூறப்படுகிறது. பொதுவாக, தாண்டவ மூர்த்தியின் வலக் கையில் துடியும், இடக் கையில் தீச்சுடரும் இருப்பது வழக்கம். ஆனால், இத்தாண்டவத்தில் தீச்சுடர் வலக் கையிலும், துடி இடக் கையிலும் இடம்பெற்று தீச்சுடர் முதன்மை பெற்றிருத்தலால் இது சங்கார தாண்டவம் எனப்படுகிறது.

"நித்தசங் காரம் உறக்கத்து நீள்மூடம்"

என்று திருமந்திரம் கூறுகிறது.[8] "சாற்றிடும் அங்கியிலே சங்காரம்"[9] என்று உண்மை விளக்கம் கூறுகிறது. எனவே, தீச்சுடர் வலக் கையில் இடம்பெறுவதே இத்தாண்டவம் சங்கார தாண்டவம் என்பதை உறுதிப்படுத்துகிறது.

### 5.4.4 திரபுர தாண்டவம்

ஆன்மாவிற்கு வீடுபேறு அளிப்பதற்காகவே ஐந்தொழிலில் நான்காவது செயலாகிய திரோபவம் (மறைத்தல்) என்னும் திரபுர தாண்டவத்தைச் செய்து, மும்மலமாகிய முப்புரத்தை அழித்து ஆன்மாவுக்கு வீடுபேறு அளிக்கிறார். ஆக்கல் (குடி), காத்தல் (அபய முத்திரை), அழித்தல் (தீச்சுடர்) ஆகிய முத்தொழிலும் இதில் அமைந்துள்ளன. இடத் திருவடி தூக்கப்படாமல், இரண்டு திருவடிகளும் முயலகன்மேல் இருப்பதனால், மறைத்தல் என்னும் திரோபவச் செயலை இத்தாண்டவம் குறிக்கிறது.

### 5.4.5 ஆனந்தத் தாண்டவம்

ஐஞ்செயலையும் ஒருங்கே காட்டுகின்ற தாண்டவம் ஆனந்தத் தாண்டவம். ஒருதலையாகச் சிவபெருமான் நடனம் சிவயநம என்ற பஞ்சாட்சரம் அல்லது ஐந்தெழுத்துடன் இணைக்கப்படுகிறது.[10]

இந்தத் தாண்டவம் தாருகாவனத்தில் நடந்ததாகக் கோயில் புராணம் கூறுகிறது. ஆனந்தத் தாண்டவத்தில் இறைவனுக்குக் கொடுக்கப்படும் வடிவத்தில், தலையிலே பெண்ணுருவில் அமைந்த கங்கையையும், பாம்பையும், கபால ஓட்டையும் தாங்கியுள்ளார். அதற்குமேல் பிறையும், கொன்றை மலரும், வலக்காதில் கடுக்கனும், இடக்காதில் தோடும் காட்சி தருகின்றன.

வலக் கையில் துடியும், இடக் கையில் தீச்சுடரும் தாங்கியிருக்கிறார். மற்றொரு வலக்கை அபய முத்திரையைக் காட்டுகிறது. மற்றொரு இடக்கை நாகத்தைப் பிடித்திருக்கும் முயலகனைச் சுட்டிக் காட்டுவதாய் அமைந்துள்ளது.

### 5.4.6 ஊர்த்துவ தாண்டவம்

ஊர்த்துவ தாண்டவம் அம்மையார் கண்டுகளித்த தாண்டவமாதலின் இது சற்று விளக்கமாக இங்கு ஆராயப்படுகின்றது. அருளல் என்னும் செயலின் பொருட்டு ஆடப்படுவது இத்தாண்டவம். இதற்குக் காளி தாண்டவம் என்று மற்றொரு பெயரும் உண்டு. இது காளிகா தாண்டவத்தில் இருந்து வேறுபட்டது ; இதைச் சண்ட தாண்டவம் என்றும் கூறுவர்.

காளியுடன் ஆடினமையால் காளி தாண்டவம் என்றும், மிக வேகமாகச் சுழன்று ஆடுவதாகையால் சண்ட தாண்டவம் என்றும், ஒருகாலைத் தலைவரையில் மேலே தூக்கி ஆடுவதால் ஊர்த்துவ தாண்டவம் என்றும், வீடுபேற்றினைத் தருவதாகிய அனுக்கிரகத்தின் பொருட்டுச் செய்வதால் அருள்நட்டம், அனுக்கிரக தாண்டவம் என்றும் இதற்கு வேறு பெயர்கள் உள்ளன.

ஊர்த்துவ தாண்டவ மூர்த்தியின் உருவங்கள் பல காணக்கிடைக்கின்றன. அவற்றில் திருவாலங்காட்டில் உள்ள பஞ்சலோகத்தில் அமைந்த ஊர்த்துவ தாண்டவ மூர்த்தத்தில் சித்தாந்த சாத்திரக் கருத்துக்கள் பல விளக்கப்பட்டுள்ளன. இத்தாண்டவ மூர்த்தத்தில் சிவபெருமானின் காலின்கீழ் முயலகன் இருப்பதும் உண்டு; இல்லாமல் இருப்பதும் உண்டு. வலக்கைகளில் துடியும், அபய முத்திரையும் காணப்படும். இடக்கை ஒன்றில் தீச்சுடரும், மற்றொரு கை தலைக்குமேல் உயரத்தூக்கி, அங்கை கவிழ்த்து தூக்கிய திருவடிக்கு மேல் அமைந்து இருக்கும்.

இந்தக் காலைத்தான் தூக்கவேண்டும் என்பதில்லை; எந்தக்காலை ஊன்றினாலும், எந்தக் காலை உயர்த்தினாலும் மூலக் கருத்துக்கு மாறுபாடில்லை. தூக்கிய திருவடியில் அருளல் செயலும், ஊன்றிய திருவடியில் மறைத்தல் செயலும் நிகழ்கின்றன என்பது சாத்திரக் கூற்று. இடக் காலைத்தூக்கி ஆடியதாகத் திருவாலங்காட்டுப் புராணம் கூறுகிறது.[11]

திருவாலங்காட்டில் அமைந்துள்ள தாண்டவமூர்த்திக்கு எட்டுத் திருக்கரங்கள் உள்ளன. இடக்காலைத் தலைவரையில் உயரத்தூக்கித் தாண்டவம் செய்கிறார்; தாண்டவம் மிக வேகமாக நடைபெறுகிறது என்பதை அவிழ்ந்து பறக்கும் சடைகள் புலப்படுத்துகின்றன. திருவடியின்கீழ் உயிர்ப்பின்றிக் கிடக்கும் முயலகன் அருகில் பாம்பு ஒன்று காணப்படுகிறது. அவிழ்ந்து பறக்கின்ற சடைகள் ஞானத்தின் அடையாளம் என்று சாத்திரம் கூறுகிறது.

"நுண்சிகை ஞானமாம்"[12]

துடி ஏந்திய கரமும், தீச்சுடரைத் தாங்கிய கரமும், அபய முத்திரை காட்டும் கரமும் இத்தாண்வத்தின்போது விலகி இருக்கின்றன. மேலும், ஊன்றிய திருவடி உயிரற்று வெறும் பிணமாகக் கிடக்கின்ற முயலகன்மேல் இருப்பதால் படைத்தல், காத்தல், மறைத்தல், அழித்தல் என்னும் நான்கு செயல்களும் முடிந்தமை புலனாகிறது. எனவே, இது அருளல் செயலாகிய ஐந்தாவது தாண்டவம் என்பது தெளிவாகின்றது.

ஏனைய கரங்களில், ஒருகையில் ஆன்மாவைப் பாசம் தொடாதபடி துண்டித்து விட்டதாகக் குறிப்பிட்டுச் சிற்பி, கிளிக் கத்தியைக் கையில் காட்டியிருக்கிறார். மற்றொரு கையில் திரிசூலம் காணப்படுகிறது. இடக்கை ஒன்று உயர்த்தித் தூக்கி, தூக்கிய திருவடிக்குக் காட்டாக

உள்ளது. அதை, ஞானத்தைக் குறிக்கிற சடையுடன் பொருத்தியிருக்கிறார். வீடுபேறு பெற்ற ஆன்மாவுக்கு ஆசி வழங்குவதுபோல் இவர் தமது கையை உயர்த்தி ஆதரவு கொடுக்கிறார். மற்றொரு இடக்கை வீசிய கையாக (கஜஹஸ்தம்) அமைந்து ஊன்றிய திருப்பாதத்தைக் காட்டுகிறது. இன்னொரு கையில் ஆன்மாவைக் குறிக்கும் பாம்பைப் பிடித்திருக்கிறார். இச்சிற்பம் கலை அழகிற்கும் ஓர் எடுத்துக்காட்டு ஆகும். ஊர்த்துவ தாண்டவச் சிற்பம் பல இருப்பினும், திருவாலங்காட்டில் இருக்கும் இத்தாண்டவ மூர்த்தம்தான் சித்தாந்த சாத்திரக் கருத்துக்களை விளக்கும் கலைப்பெட்டகமாகத் திகழ்கிறது.

## 5.5 காரைக்கால் அம்மையார் காட்டும் நடனம்

அம்மையார் தாம் பாடிய 143 பாடல்களில் மூத்த திருப்பதிகங்களில் இருபது பாடல்களிலும், திருவிரட்டை மணிமாலையில் பதினைந்தாவது பாடலிலும், அற்புதத் திருவந்தாதியில் 25, 30, 51, 70, 77, 78, 98, 99 ஆகிய பாடல்களிலுமாக மொத்தம் இருபத்தொன்பது பாடல்களில் இறைவனின் தாண்டவம் பற்றிப் பேசுகின்றார்.[13]

காரைக்கால் அம்மையார் சிவபெருமான் ஆடும் தாண்டவத்தை 'அந்தி நிருத்தம்' என்று குறிக்கிறார்.

'அந்தி நிருத்தம் அனல்கை

ஏந்தி அழகன் ஆடுமே'[14] என்றும்,

'அந்தியில் மாநடம் ஆடும் எங்கள்

அப்பன் இடம்திரு வாலங்காடே'[15] என்றும்

அம்மையார் குறிப்பிடுகிறார். அந்தி நிருத்தம
ஆடுகின்ற தாண்டவம். மாலையில் ஆடுகின்ற த
தாண்டவம் என்றும், அத்தாண்டவத்தில் தீச்சுடர் இ
என்றும் குறிப்பர்.[16] 'அந்தி நிருத்தம் அனல்ஸ
அம்மையார் குறிப்பிடுவதில் அனலுக்கு
கொடுக்கப்படுகிறது. அனலுக்கு முக்கியத்துவ
தாண்டவம் சங்கார தாண்டவம். எனவே, "அந்தி
அம்மையார் குறிப்பது சங்கார தாண்டவமே
இடமிருக்கிறது.

சங்கார தாண்டவம் பற்றி இரண்டு இடா
அம்மையார் ஊர்த்துவ தாண்டவம் பற்றிப்
பாடுகின்றார். அம்மையார் கயிலையிலே சி
கண்டபோது, "அறவா ! நீ ஆடும்போது உன் அடிட
என்று சிவனிடத்து அம்மையார் வரம் கேட்கிறா
அவ்வரத்தை அளித்துத் திருவாலங்காட்டுச்
பணிக்கின்றார். திருவாலங்காட்டில் சிவபெருமானு
காணும்பேறு பெற்றமையால் அம்மையார் கண்ட
ஊர்த்துவ தாண்டவமாகக் கருதலாம். அம்மையார்
ஊர்த்துவ தாண்டவத்தையே குறிக்கின்றார் என்
மரபு.

"தாழ்சடை எட்டுத் திசையும் வீசி

அங்கங் குளிர்ந்தனல் ஆடும்"[17]

"அடிபேரின் பாதாளம் பேரும் ; அடிகள்

முடிபேரின் வான்முகடு பேரும்"[18]

என்னும் இப்பாடல்களில் வரும் வருணனைகள் அனைத்தும் சண்ட தாண்டவம் பற்றியவை ; ஆனந்தத் தாண்டவம் பற்றியவை அல்ல என்று கருதலாம்.

> ". . . . . . . . . . வீசி எடுத்த பாதம்
>
> அண்டமுற நிமிர்ந்தாடும் எங்கள்
>
> அப்பனிடம் திருவாலங்காடே"[19]

என்றும்,

> "கழலொலி யோசைச் சிலம்பொலிப்ப"[20]

என்றும், தூக்கிய திருவடியைப் பாடும் அம்மையாரின் அருள்வாக்கு ஊர்த்துவ தாண்டவத்தினைப்பற்றி எண்ணிப்பார்க்க இடம் கொடுக்கிறது.[21]

"ஊர்த்துவ தாண்டவத்தில் அடிபெயரும்போதே பாதாளம் பேர்ந்து போகும். திருமுடி அசைந்ததும் வானத்து உச்சியும் பேர்ந்து போகும். ஒருகை மறித்து ஆடும்போதே திக்கந்தங்களும் பிளந்து போகும். இவ்வாறு ஆடும் கூத்தை இந்த அரங்கம் தாங்காது ; அறிந்து ஆடுக" என்று காரைக்கால் பேயார் அஞ்சுவது போல் அருளிச் செய்திருக்கும் பாடல் இந்த ஊர்த்துவ தாண்டவத்தைவிளக்குகின்றது.[22]

"எலும்பு மாலையை அணிந்து இரவிலே நெருப்பிலே ஆடுவாய்" "இரவிலே சுடுகாட்டில் பேய்களோடு உன் கழல்கள் ஒலிப்ப நீ ஆடும்போது உமையை அழைத்துச் செல்லாதே", "பேய்கள் ஆடுகின்ற காட்டில் வீரக் கழல் ஆடும்படி தீயினைக் கையிலேந்தி, நெருப்பினிடையே ஆடுகின்றவரே ! நெருப்பால் உன் கை

சிவந்ததோ ? உன் கையின் செந்நிறத்தால் நெருப்பு சிவந்ததோ ?", "நீங்கள் ஆடுகின்ற நடனம் பேய்க் கணங்கள் காணவோ ? உமையம்மை காணவோ" என்று அற்புதத் திருவந்தாதியிலும், "பேய் பாடவும், பூதம் தொழவும் பெயர்ந்து பெருங்காடு அரங்காக நட்டம் செய்யும் மொய் கழலையுடைய புண்ணியரே ! அரக்கர்களுடைய மூன்று புரங்களும் உடனே வேகும்படி நின்று வில்லும் அம்பும் தொடு[illegible]வாறு என்னே?" என்று திருவிரட்டை மணிமாலை[illegible]லும் அம்மையார் பாடுகின்றார். அம்மையார் பாடல்களில் இறைவன் அனலைக் கையிலே ஏந்தி நடம் புரிகின்ற திறம் பரவலாகப் பேசப்படுகிறது.

மூத்த திருப்பதிகம் முழுவதும் சிவபெருமானைப் பேய்க் கணங்கள் நாற்புறமும் சூழ, இறைவன் திருவாலங்காட்டிலே நடனம் ஆடுவதாக அமைந்துள்ளது. தொங்கும் சடைகளை எட்டுத் திசைகளிலும் அலையும்படி வீசி, திருமேனி குளிர்ந்து, நெருப்பினிடையே ஆடுகின்றான் " என்றும் " தூக்கிய திருவடி வானில் பொருந்த உயர்த்தி ஆடுகின்றவன்" என்றும், "வீரக்கழலும், தழைத்த புகழ் அமைந்த சிலம்பும் ஒலிக்கத் தூக்கும் திருவடியால் தாளமிட்டு நடனம் ஆடுகின்றான் இறைவன் என்றும், கடலும், காடும், மலையும், நிலமும், வானும் சுற்ற நெருப்பைக் கையில் ஏந்தி ஆடுகின்றான் என்றும், எழுவகை இசையும், இசைக் கருவிகளின் ஒலிகளோடு பொருந்த இறைவன் ஆடுகின்றான் என்றும் நெருப்பினைக் கையிலே ஏந்தி அழியா அழகுடையவனாகிய இறைவன் திருநடம் புரிகின்றான் என்றும் இணைய புள்ளிமானின் தோல் ஒன்றினை உடையாகப் பூண்டு, புலித்தோலை முதுகில் அணிந்து ஆடுகின்ற இடமும் அதுவேயாக இறைவன் திருநடம் புரிவான் என்றும், பேய்கள் ஒன்றாகச் சேர்ந்து பிணங்களைத் தின்றுவிட்டுக் கத்தும் சுடுகாட்டில் அழகனாகிய இறைவன் ஆட, மலையரசன் மகளாகிய உமையம்மையும் வியந்து

நோக்குவாள் என்றும், அம்மையார் சிவபெருமானின் திருநடம் பற்றி மூத்த திருப்பதிகத்தில் குறிப்பிட்டுள்ளார்.[23]

இறைவன் ஆடும் இடங்கள் எனப் பிற்காலத்தில் குறிக்கப்பெறும் தில்லை, மதுரை, குற்றாலம் முதலிய இடங்கள் அம்மையாரால் குறிக்கப்படவில்லை. எனவே, அம்மையார் வாழ்ந்த காலத்தில் அதிகம் சிறப்புப் பெறாத தில்லை, ஏழாம் நூற்றாண்டில் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், காலத்தில் சிறப்பெய்திவிட்டதை அறிய முடிகிறது. சிதம்பரம் புகழ்பெறுவதற்கு முன்பே திருவாலங்காடு சிறந்து விளங்கியது. திருவெண்காடு பூர்வ சிதம்பரம் என்று குறிப்பிடப்படுவது இங்கு நினைவுகூரத்தக்கது. இறைவன் பெயர் வெண்காட்டடிகள் என்று குறிப்பிடுவது கவனிக்கத் தக்கது.[24]

## 5.0 நடனத்திற்கு அமைந்த பின்னணி

சிவபெருமான் சுடுகாட்டில் ஆடும்போது பேய்க்கணங்கள் அவனைச் சுற்றி ஆடுகின்றன. வாகை மரத்தின் முற்றிய வெண்ணிறக் காய்கள் பரவி ஒலிக்கவும், கோட்டானோடு ஆண்தலை என்னும் பறவை கூவவும், ஆந்தையானது மரக்கிளையின்மேல் துள்ளி ஓடவும், இண்டைக்கொடி தாவிப் படர்ந்து செல்லுகின்ற கள்ளி மரத்தின் நிழலில் பிணங்களைக்சுட விறகுகளை அடுக்கி வைக்கும் சுடுகாட்டில், பேய்கள் கைகொட்டி ஓட உள்ளாளம் என்னும் ஒருவகைப் பாட்டைப் பாடி மாறிநின்று வீசித் தூக்கிய திருவடி வானில் பொருந்த உயர்த்தி இறைவன் ஆடுகின்றான்.

பேய் குட்டிபோட, பருந்தோடு கோட்டானும், கௌதாரியும், ஆந்தையும் முட்டையிட, கூச்சலிடும் பேய்கள் சென்று தெய்வம் ஏறியவர்போல் ஆடுகின்ற சுடுகாட்டில் குள்ளநரி அச்சுடுகாட்டில் புதைத்த பிணத்தினைத் தோண்டி எடுத்துப் புரட்டிப் பிய்த்தெறியும். சுழல்கின்ற நெருப்பினைப் போன்ற சிவந்த கண்களையுடைய

கொள்ளிவாய்ப் பேய் சுற்றி வந்து துணங்கைக் கூத்து ஆடி, அங்கும் இங்கும் ஓடி விளையாடி நெருப்பில் எரிகின்ற பிணத்தைப் பிடுங்கி, தானே அதன் மாமிசத்தை உண்டு, தெய்வம் ஏறியவர்போல் ஆடுகின்ற சுடுகாட்டில் பிணம்சுடும் நெருப்பினைச் சிந்திக் கிழநரி ஆடி நடக்கும்.

பேய்கள் எல்லாம் சேர்ந்து ஒன்றோடு ஒன்று அடித்துக்கொண்டு ஆரவாரம் செய்து பெருங்குரலிட்டு விகடப்பாடல்களைப் பாடி, ஆட, நரி விகடப் பாடல்களுக்கு ஏற்ப யாழ்போல் ஊளையிடும். பேய்கள் துணங்கைக் கூத்தாடிச் சுற்றுவதைப் பார்த்து, ஈமத்தீயை அவிழ்த்து எவ்விடத்தும் பேய்க் கூட்டங்கள் ஒன்று சேர்ந்து பிணங்களைத் தின்றுவிட்டு களிப்புற்ற மனத்துடனே கண்டாரை வருத்தும்.

புலால் நாறும் தலை ஓட்டினை நரி கவ்விக் கொண்டு செல்ல அட்கு என்று கூவி, ஆந்தையை அழைக்க, அந்த ஆந்தை அவ்வெண்டலையை எடுத்தெறிய, பக்கத்தில் இருக்கும் சிறு கோட்டான் அஞ்சி நோக்க, கோட்டான் அச்சுறுத்த நரி எவ்விடத்தும் பெருங்குரலிட்டுக் கத்தும். சாம்பல் புகை மிகுந்த சுடுகாட்டில் வீரக்கழலும் — தழைத்த புகழ் அமைந்த சிலம்பும் ஒலிக்கத் தூக்கும் திருவடியால் தாளம் இட்டு நடனம் ஆடுகின்றான் சிவபெருமான்.

இறைவன் ஆடலுக்கு இவை பின்னணியாக அம்மையார் பாடல்களில் அமைந்துள்ளன.[25]

## 5.7 பயன்படும் இசைக்கருவிகள்

இறைவன் தாண்டவத்தில் இசை முதலிடம் பெறுகிறது.

'கொள்ளென்றிசை பாட விமலன் ஆடுமே' என்று அம்மையார் குறிப்பிடுவது வாய்ப்பாட்டை என்று கொள்ளலாம்.[26] படுவெண் துடியும், பறையுங் கறங்கப் பரமன் ஆடுகின்றான். பேய்க் கணங்கள் குழலூதவும், பாடவும் பித்தவேடங்கொண்டு பெருமான் ஆடுகின்றான். பண்கள் செறிந்த பாடல்களுடன் பலவிதத் தோற்கருவிகளும், துளைக் கருவிகளும், நரம்புக் கருவிகளும், கஞ்சக் கருவிகளும் ஒலிக்கின்றன. எல்லா ஒலிகளும் விரவிய அவ்விசைக் கதம்பத்துடன் இறைவன் ஆடுகிறான்.

தக்கை, தகுணிதம், துந்துபி, மத்தளம், கரடிகை, உடுக்கை, குடமுழா, மொந்தை, பறை, முழவு, துடி போன்ற தோல் கருவிகளையும், குழல் போன்ற துளைக் கருவிகளையும், வீணை, யாழ், பத்தல் போன்ற நரம்புக் கருவிகளையும், தாளம் முதலிய கஞ்சக் கருவிகளையும் அம்மையார் தம் பாடல்களில் குறிப்பிட்டுள்ளார்.

அம்மையாரின் திருப்பதிகம் ஒன்று அவருடைய இசை அறிவையும், இசையன்பையும் எடுத்துக் காட்டுகின்றது. துத்தம், கைக்கிளை, விளரி, தாரம், உழை, இளி, குரல், என்னும் ஏழு சுரங்களும் பண்ணோடு பொருந்தப் பாடி, சச்சரி, கொக்கரை, தக்கை என்னும் இசைக் கருவிகளோடு தகுணிதம், துந்துபி, தாளம், வீணை, மத்தளம், கரடிகை, முதலிய இசைக் கருவிகளையும், மிருகத்தின் மெல்லிய தோலால் அமைந்த உடுக்கையையும், குடமுழா, மொந்தை என்னும் இசைக் கருவிகளையும் வாசித்து அத்தனை இசைக் கருவிகளில் ஒலிகளோடு பொருந்த ஆடுகின்ற இறைவன் என அம்மையார் பாடுகின்றார்.

தேவர்கள் அடிக்கும் மத்தளத்தின் ஓசை எட்டுத் திசைகளிலும் நிறைய, சிலம்புகள் கலீர் கலீர் என்று ஒலிக்க, கடை

ஊழியில் பெருநடம் புரிகின்றான் இறைவன். வட்டமான பறை
போல் விழித்து நோக்கும் கண்களையுடைய பேய் மத்தளம் வா
கூளி என்னும் ஒருவகைப் பேய் பாட, இறைவன் திரு
புரிகின்றான். நெருப்புப் போன்ற வாயினையும், கண்களையுமு
பேய், பேய்க் கூட்டங்கள் ஊதும் குழலுக்கு ஏற்றபடி ஒ
கொள்ளென்ற ஒலியுடன் இசைக் கருவிகள் முழங்க, ஒலிக்
வெள்ளிய உடுக்கையும், பறையும் ஒலிக்க, தேவர்கள் ஆடி
மத்தள ஒலியின் தாளம் தவறாமல் மாலைக் காலக் கூத்துக்கு
நெருப்பினைக் கையில் தாங்கி அழகனாகிய இறைவன் திரு
புரிவான்[27] என்று இறைவனுடைய நடனத்திற்குப் பயன்
இசைக்கருவிகளை அம்மையார் காட்டுகின்றார்.

## 5.8 முடிவுரை

சிவபெருமானின் நூற்றியெட்டுத் தாண்டவங்க
ஏழுதாண்டவங்களே பிற்காலத்தில் புகழ்பெற்றன. தாளால் செய்
தவமே தாண்டவம் ஆயிற்று. இத்தாண்டவங்களில் ஒவ்வொன்
ஆடுவதற்கென குறிப்பிட்ட ஒவ்வொரு இடம் உண்டு எ
புராணங்கள் கூறும். இவ்வெழுவகைத் தாண்டவங்களும்
சபைகளில் நடைபெறுகின்றன. இத்தகு நடனங்கள் இலக்கியங்க
பேசப்படுகின்றன. கலித்தொகை, சிலப்பதிகாரம் போ
இலக்கியங்கள் சிவபெருமானின் திருநடனத்தைக் குறிப்பிடுகின்
கலித்தொகையில் கொடுகொட்டி, பாண்டரங்கம், காபாலம் அ
மூன்று கூத்துகள் பேசப்படுகின்றன. சிலப்பதிகாரத்தில் கூ
சாக்கையன் ஆடிய கொடுகொட்டியும், மாதவி ஆடிய பதினே
வகைக் கூத்தில் சிவபெருமான் ஆடிய கொடுகொட்டி
பாண்டரங்கமும் காணலாம். தேவாரப் பதிகங்களும் நாட்டியம் ப
பேசுகின்றன. ஆனால், காரைக்கால் அம்மையார் பாடல்க
'அந்தி நிருத்தம்' பற்றி இரு இடங்களில் பாடிய அம்மையார் 'ஊர்

தாண்டவம்' பற்றியே பரவலாகப் பாடுகின்றார். இந்நடனத்தைச் சிவபெருமான் சுடுகாட்டிலேயே ஆடுவதாக அம்மையார் கூறுகின்றார். ஆனந்தத் தாண்டவம் பெருஞ் சிறப்புப் பெறுவதற்கு முன்னமே, காரைக்கால் அம்மையார் இறைவனின் தாண்டவம் குறித்துப் பாடியிருப்பது அவருடைய காலத்தின் தொன்மையைக் குறிக்கின்றது. மேலும், பேய்க்கணங்கள் சூழ ஆடிய கூத்து, தேவர்கள் காண ஆடும் கூத்தாக வளர்ச்சி பெறுவதும் ஆராயத்தக்கது.

**சான்றெண் விளக்கம்**


1. காரைக்கால் அம்மையார் புராணம் — பா. 61
2. செந்தமிழ்ச் செல்வி, கரணக்குழப்பங்கள் — பக்.32–33
3. கலித்தொகை, கடவுள் வாழ்த்துப் பாடல்.
4. சிலம்பு : நடுகற் காதை, — வரி 75–77
5. தேவாரம்: 2ம் திருமுறை, திருக்கச்சியேகம்பம் — பா.3

   மேலது : 1ம் திருமுறை, திருவையாறு — பா.1
6. இராமமாணிக்கம், மா., தமிழகக் கலைகள் — ப. 86
7. மேலது — ப. 86
8. திருமந்திரம், இரண்டாம் தந்திரம், அழிப்பு — பா. 5
9. உண்மை விளக்கம் — பா. 35
10. கமலையா, க.சி., ஆனந்த மாநடம் — ப.185

11. திருவாலங்காட்டுபுராணம், சுநந்தர் உபதேசச் சருக்கம் ப.36

12. திருமந்திரம், பொதுப்பாயிரம் பா. 80

13. ஞான சம்பந்தன், அ.ச., பெரியபுராணம் ஓர் ஆய்வு ப.116

14. மூத்த திருப்பதிகம்-II பா.7

15. மேலது-I பா. 10

16. வேங்கடசாமி மயிலை சீனி., இறைவன் ஆடிய எழுவகைத் தாண்டவம் (சந்தியா தாண்டவத்தில் தீச்சுடர் இடம் பெறுவது இல்லை என்று குறிக்கப்படுகிறது). ப.52

17. மூத்த திருப்பதிகம்-I பா.1

18. அற்புதத் திருவந்தாதி பா.77

19. மூத்த திருப்பதிகம்-I பா.4

20. மேலது-I பா. 7

21. நோக்கு ப. 147

22. பி.ஸ்ரீ. தில்லைத் திருநடனம் ப.58

23. அற்புதத் திருவந்தாதி பா. 30,51,98,99
திருவிரட்டை மணிமாலை பா. 15

மூத்த திருப்பதிகம்-I பா.1,4,7,8,9

மூத்த திருப்பதிகம்-II பா.7,4,5,2,8

24. நோக்கு ப. 149

23. மூத்த திருப்பதிகம்-I பா.3,6,7,11

மூத்த திருப்பதிகம்-II பா.3

26. மூத்த திருப்பதிகம்-II பா.10

27. மூத்த திருப்பதிகம்-II பா.9,6,1,6,7

மூத்த திருப்பதிகம்-I பா.9,10

*தனக்கே அடியனாய்த் தன்னடைந்து வாழும்*
*எனக்கே அருளாவா றென்கொல்*

— *அம்மையார்*

# 6. காரைக்கால் அம்மையார் கோயில்கள்

## 6.0 முன்னுரை

நாயன்மார்கள் பிறந்த ஊர்களிலோ அல்லது சிறப்புப் பெற்ற இடங்களிலோ சிவபெருமான் கோயிலையொட்டி அல்லது அக்கோயிலின் ஒரு சந்நிதியாகவோ அவர்களுக்குக் கோயில் எழுப்புவது வழக்கம். இவ்வடிப்படையில் திருஞான சம்பந்தர் பிறந்த இடமான சீர்காழியில் அவருக்கு ஒரு கோயில் எழுப்பப்பட்டுள்ளது. திருவதிகையில் திருநாவுக்கரசருக்குக் கோயில் எழுப்பப்பட்டுள்ளது. சுந்தரருக்கு, அவர் பிறந்த ஊரான திருநாவலூரிலும் சிறப்புப் பெற்ற இடமான திருவாரூரிலும் கோயில்கள் அமைக்கப்பட்டுள்ளன. இவ்வடிப்படையில் காரைக்கால் அம்மையார் பிறந்த இடமான காரைக்காலிலும், அவர் ஐக்கியமான திருவாலங்காட்டிலும் அம்மையாருக்குக் கோயில்கள் எழுப்பப்பட்டிருத்தல் வேண்டுமென நாம் எதிர்பார்க்கலாம். அம்மையாருடைய நினைவைப் போற்றும் வகையில் தோன்றிய இவ்விரு கோயில்கள் மட்டும் இவ்வியலில் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படுகின்றன. காலச் சுருக்கத்தின் காரணமாகத் திருவாலங்காட்டில் கொண்டாடப்படும் அம்மையார் தொடர்பான விழாக்கள் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படவில்லை. காரைக்காலில் நடைபெறும் மாங்கனித் திருவிழாமட்டும் ஆசிரியரால் களப்பணியாக மேற்கொள்ளப்பட்டது. நூல்கள் வாயிலாகவும், களப்பணிவாயிலாகவும், நேர்காணல் வாயிலாகவும் தொகுக்கப்பட்ட செய்திகளின் அடிப்படையில் இவ்வியல் அமைகின்றது.

## 6.1 கோயிலை உருவாக்கல்

காரைக்காலில், அம்மையாருக்குப் பழமையான கோயில் இருந்ததற்காக வரலாற்றுச் சான்று எதுவும் இன்று கிடைக்கவில்லை. இக்கோயில், கு. மலைப்பெருமாள் பிள்ளை அவர்களால் சென்ற நூற்றாண்டில் கட்டப்பட்டு 17–6–29 அன்று குடமுழுக்கும், அதைத் தொடர்ந்து 20–6–29, 21–6–29 ஆகிய நாட்களில் மாங்கனித் திருவிழாவும் வேதமுறைப்படி கொண்டாடப்பட்டன. எனினும், அப்பெரியார் திடீரென்று ஒரு வெற்றிடத்தில் இக்கோயிலை எழுப்பியிருத்தல் இயலாது.

கோயிலைக் கட்ட அவர் அவ்விடத்தைத் தேர்ந்தெடுத்தது ஏன் ? என எண்ணிப் பார்த்தால், அவ்விடத்தில் அம்மையாருக்கான ஒரு நினைவுச் சின்னம் இருந்திருக்க வேண்டும் என ஊகிக்கலாம். இவ்விடத்தில்தான் அம்மையாரின் வீடு அமைந்திருந்ததாகக் கூறுவர்.[1] இக்கோயிலை மலைப்பெருமாள் பிள்ளை அவர்கள் கட்டவேண்டிய காரணத்தை ஆராய்வோமானால், அவர் அக்காலத்தில் சிறந்த அறவோராக, சமயப்பெரியாராக, அறக்கொடையாளராக விளங்கியதே காரணமாகும்.

இவர் அம்மையார் கோயிலைக் கட்டுவித்தது போன்று பிற பணிகளும் செய்துள்ளார். காரைக்காலில் மகப்பேறு மருத்துவமனை ஒன்று அக்காலத்தில் இல்லாததால் 1933–இல் அதைக் கட்டுவதற்காக ரூபாய் 1,20,000 கொடுத்தார். இம்மருத்துவமனையில் முதன் முதலில் பிறந்த குழந்தைக்கு ஒரு பவுனில் நகை செய்து பரிசளித்தார். காரைக்காலுக்கு அருகில் உள்ள திருக்கொட்டாரத்தில் ஒரு பள்ளிக்கூடம் கட்டுவித்தார். மேலும், மலேசியாவில் மனநோயாளிகளுக்காக மருத்துவமனை ஒன்றையும் கட்டுவித்தார்.[2]

## 6.2 கோயில் அமைப்பு

காரைக்கால் அம்மையார் கோயில், சோமநாதர் கோயிலின் வெளிப்புறத்துத் தென்கிழக்கு மூலையில் விநாயகர் சந்நிதியை ஒட்டி அமைந்துள்ளது. கோயிலின் வாயில் கிழக்கு நோக்கி உள்ளது. கருவறை, அர்த்த மண்டபம், மகா மண்டபம், முக மண்டபம் என நான்கு பிரிவுகளாகக் கோயில் அமைந்துள்ளது.

கர்ப்பக் கிரகத்தின் மீது தற்கால அமைப்புப்படி கிரீவம், ஜகதி, பத்மம் அமைப்புடன் அதிஷ்டானமும் அதற்குமேல் சுவர்ப்பகுதியும் அதற்குமேல் கொடுங்கையும் காணப்படுகின்றன. கொடுங்கையில் பக்கத்துக்கு நான்கு கூடுகள் கருவறையில் காட்சி தருகின்றன. கொடுங்கைவரை கருங்கல் திருப்பணி செய்யப்பட்டுள்ளது. விமானத்தின் நான்கு புறங்களிலும், நான்கு கால்களைக் கொண்ட சிறு மண்டபக் கோயில்கள் காட்சி தருகின்றன. வடகிழக்கு மூலையில் அமைந்த மண்டபக் கோயிலில் வடக்குத் திசையை நோக்கிக் காரைக்கால் அம்மையார் பேய் உருவில் தரையில் கையை ஊன்றித் தலைகீழாக நடந்து வரும் காட்சியிலும் வடமேற்கு மண்டபத்தில் வடக்கு நோக்கியுள்ள சிற்பம், அம்மையார் பேய் உருவில் தலைமேல் கை குவித்து இறைவனைத் தொழுத நிலையிலும், மேற்கு நோக்கிய சிற்பம் ஒரு பெண் அருள்பாலிப்பது போன்றும் உள்ளன. தென்மேற்கு மண்டபத்தில், மேற்கு நோக்கியுள்ள பெண் பூக்கடை ஒன்றை இடையில் வைத்துக்கொண்டு நிற்பதையும், தெற்கு நோக்கியுள்ள பெண் இடுப்பில் குடம் வைத்திருப்பதையும் காணலாம். தென்கிழக்கு மண்டபத்தில், தென்பகுதியை நோக்கிய பெண் கைகூப்பி, கழுத்தில் மாலையணிந்து அபய சுகத்தில் நிற்பதைக் காணலாம்.

கோபுரத்தின் மீதுள்ள வடக்குத் கோட்டத்தில் காரைக்கால் அம்மையார் பேய் உருவாக இறைவனைத் தொழுத நிலையில் அமர்ந்த கோலத்தில் உள்ளார். இருபுறமும் இரு தோழிகள் காவலாக வணங்கி நிற்கின்றனர்.

மேற்குப்புற விமானக் கோட்டத்தில் காரைக்கால் அம்மையார் இளமைக் கோலத்தில் அமர்ந்த நிலையில் இறைவனை வணங்குகிறார். இருபுறமும் இரு பெண்கள் சாமரம் வீசுவதுபோல் காட்சி தருகிறார்கள்.

தென்புறத்தில் உள்ள விமான கோட்டத்தில் காரைக்கால் அம்மையார் செவ்வகப்பீடத்தில் அமர்ந்த கோலத்தில் இளமையாகக் காட்சி தருகிறார். அவருடைய சடைமுடி உச்சியில் வளைத்துக் கட்டப்பட்டுள்ளது ; இளமைக் கோலத்தில் காட்சி அளிக்கிறார். இவருக்கு வலப்புறத்தில் தாமரைப்பீடத்தில் சிவலிங்கம் மாலையுடன் காட்சி தருகிறது. இவர் செவ்வகப் பீடத்தில் இடக் காலைத் தொங்கவிட்டு, வலக்காலை மடக்கி அமர்ந்திருக்க, இவருக்கு இருபுறத்திலும் இரண்டு பெண்கள் உள்ளனர். வலப்புறத்தில் உள்ள பெண் தட்டுடனும் காணப்படுகின்றாள்.

கர்ப்பக் கிரகத்தின் கொடுங்கையில் பக்கத்துக்கு நான்கு தூண்கள் காட்சி தருகின்றன. விமானத்தின் ஒவ்வொரு மூலையிலும் இரண்டு இரண்டு காளைகளாக மொத்தம் ஆறு காளைகள் இருக்கின்றன. அர்த்த மண்டபத்தில் பக்கத்துக்கு நான்கு தூண்கள் காட்சி தருகின்றன. அர்த்த மண்டபத்தின் மீது எந்தக் கோபுரமும் இல்லாமல் சமதளமாக அமைந்துள்ளது. அம்மையார் கோயில் சுவர்களைச்சுற்றி, அவருடைய வாழ்க்கை வரலாறு வண்ணங்களால் வரையப்பட்டுள்ளன.

### 6.3 மாங்கனித் திருவிழா

அம்மையாருடைய வாழ்க்கையில் சிவனடியாருக்கு அவர் மாங்கனி வழங்கியது திருப்புமையமாக அமைந்தது. அந்நிகழ்ச்சியின் விளைவாக அம்மையார் இறைவனைக் கயிலையில் காணும்பேறு பெறுகிறார்; திருவாலங்காட்டில் அரனடிக்கீழ் என்றும் அமர்ந்திருக்கும் சிறப்புப் பெறுகிறார். சுருக்கமாகச் சொல்வதாயின், பக்தி இலக்கியத்தையே தொடங்கி வைக்கும் வாய்ப்பு இந்நிகழ்ச்சியின் மூலமாகவே அவருக்கு வாய்த்தது. எனவே, அம்மையார் குறித்து எடுக்கப்படும் விழாக்களில் இதுவே, முக்கியமான விழாவாகும். இவ்விழா ஆண்டுதோறும் அம்மையார் பிறந்த ஊரான காரைக்காலில் ஆனிமாதம் சுக்கில பட்ச துவாதசியில் தொடங்கிப் பௌர்ணமி அன்று நிறைவு பெறுகிறது. துவாதசி அன்று விநாயகருக்கு வழிபாடு செய்வதுடன் விழாத் தொடங்கி, மாப்பிள்ளை அழைப்பு, திருமணம், பிச்சாடனர் வருகை, அமுது படைத்தல், என்புருவாதல், கயிலைக்காட்சி என இவ்விழா அம்மையார் வாழ்க்கை நிகழ்ச்சிகளை நிகழ்த்திக் காட்டுகிறது. ஆசிரியர் இவ்வாண்டு 1993 ஆம் ஆண்டு மாங்கனித் திருவிழாவை உடன்இருந்து கண்டு தகவல்கள் திரட்டி, விழா நிகழ்ச்சிகள் எந்த அளவுக்குப் பெரியபுராண நிகழ்ச்சியுடன் ஒன்றுபடுகின்றன, வேறுபடுகின்றன என்று காண நேர்ந்துள்ளார்.

இவ்விழா நான்கு நாட்களுக்குத் தொடர்ந்து நடைபெறும். முதல் நாள் விக்னேசுவரர் பூசையும், இரண்டாம் நாள் திருமணமும் நடைபெறுகின்றன. திருமணம் திருக்கல்யாணம் என்றழைக்கப்படுகிறது. மூன்றாம் நாள் அமுது படையல் நிகழ்ச்சி நடைபெறுகின்றது. இது ஆனிமாதம் முழுநிலா நாள் அன்று நடைபெறும். நான்காம் நாள் சிவபெருமான் காரைக்கால் அம்மையாருக்குக் கயிலைக் காட்சி நல்குதல் நடைபெறும்.

எந்த ஒரு விழாவின் தொடக்கத்திலும் விழா தடையின்றி நடைபெறும்பொருட்டு விநாயகருக்கு முதல் பூசை செய்வது மரபு. அதுபோல், மாங்கனித் திருவிழாவிலும், விழாவில் எந்தவித குறைபாடும் நேராமல் விழாவை நன்றாக நடத்திக் கொடுக்க வேண்டி, அனுக்கிரக விக்கினேசுவரர் பூசை முதல் நாள் மாலையில் நடைபெறுகின்றது. அதன் பின்னர் இரவு ஏழு மணிக்கு மாப்பிள்ளை அழைப்பு நிகழ்கிறது. நாகையிலிருந்து காரைக்காலுக்குப் பரமதத்தன் வருகிறார், என்ற பொருள்பட, சித்தி விநாயகர் கோயிலிலிருந்து (ஆற்றங்கரைத் தெரு) பரமதத்தனின் திருமேனி தேரில் ஊர்வலமாகக் கொண்டு செல்லப்படுகிறது.

இரண்டாம் நாள் திருக்கல்யாணம் நிகழ்கின்றது. இது நல்ல ஓரையைப் பொறுத்து காலை 8 மணிக்குமேல் நடைபெறுகிறது. இத்திருக்கல்யாணம் பகல் 12 மணிக்குள் முடிவடைந்துவிடுகிறது. திருமணத்திற்கு முன் பெண்ணிற்குக் கொண்டுவரப்படும் சீர்வரிசை, கைலாசநாதர் ஆலயத்தில் இருந்து கொண்டு வரப்படுகிறது.

இதனை அடுத்து அம்மையார் தீர்த்தம் கொடுத்தல் என்னும் நிகழ்ச்சி நடைபெறுகிறது. சந்திர புஷ்கரணியம் என்ற பெயரைக் கொண்ட அக்கோயில் குளத்தில், மணப்பெண் குளிப்பதாகப் பொருள்பட, புனிதவதியாரின் திருவுருவம் குளத்திற்கு எதிரில் நிற்க, கோயில் குருக்கள் குளத்தில் மூழ்கி எழுந்து இறைவனுக்குக் கற்பூர தீப ஆராதனை செய்கிறார். பின்னரே திருக்கல்யாணம் நடைபெறும். கோயிலின் மூத்த அர்ச்சகர் அம்மையாரின் கழுத்தில் தாலி அணிவிப்பார்.

அன்றிரவு ஒன்பது மணி அளவில் மணமக்கள் மின்விளக்குகளால் அலங்கரிக்கப்பட்ட முத்துப்பல்லக்கில் ஊர்வலம் வருகின்றனர். இவ்வூர்வலம் காரைக்காலின் இராச வீதிகளின்

வழியாக நடைபெற்று, இன்னிசை வாத்தியங்களோடு இரவு 1 மணிக்குக் கோயிலுக்கு வந்து சேரும்.

அன்றிரவே பிச்சாடனர் வெள்ளை சாத்திப் புறப்படுதல் நிகழ்கின்றது. பிச்சாடனர் கைலாச நாதர் ஆலயத்தின் உள் பிரகாரத்தில் உள்ள இடத்திலிருந்து எழுந்தருளுகிறார். தூய வெண்ணிற ஆடையும், வெண்ணிறப் பூக்களுமே கொண்டு அலங்கரிக்கின்றனர்.

மூன்றாம் நாள் நிகழ்ச்சியாக அமுதுபடையல் நடைபெறுகின்றது. விடியல்காலை நான்கு மணியிலிருந்து ஆறரை மணிக்குள் பிச்சாடனருக்கு மகா அபிஷேகம் செய்விக்கப்படுகிறது. இளநீர், சந்தனம், திருநீறு, வாசனைத் திரவியங்கள், பால், பஞ்சாமிர்தம் முதலியவைகளால் நடைபெறுகின்ற அபிஷேகத்தில் சந்தனம், விபூதி, பஞ்சாமிர்தம் ஆகிய மூன்றும் பக்தர்களுக்கு வழங்கப்படுகின்றன. பகல் பத்தரை மணியளவில் பிச்சாடனர் சிறப்பு அலங்காரத்துடன் கைலாச நாதர் கோயிலில் இருந்து பவளக்கால் சப்பரத்தில் இராச வீதியில் ஊர்வலம் வருவார். இதில் இரண்டு சப்பரங்கள் ஒன்றாக இணைக்கப்பட்டு, வெளிப்புறத்தில் அமைந்த பவளக்கால்சப்பரத்தையும் உட்புறத்தில் சுவாமிக்கென்று தனியே அமைந்த மற்றொரு சப்பரத்தையும் தனித்தனியே 70,80 பேர் சேர்ந்து தூக்கி வருகின்றனர். வேண்டுதல் உள்ளவர்கள், இராசவீதி அல்லாத வீதியில் உள்ளவர்கள் என்றால், அவர்கள் இவ்வீதியில் உள்ள வீடுகளுக்கு மாம்பழங்களுடன் வந்திருந்து, வேண்டுதலை முடித்துக் கொள்வர். இதைப் புனிதமாகக் கருதி மக்கள் எடுத்து உண்பார்கள். ஊர்வலம் முடிந்து பிச்சாடனர் காரைக்கால் அம்மையார் கோயிலுக்கு வந்து சேர்வார்.

இவ்வூர்வலத்தின்போது இறைவனுக்குக் கற்பூர தீப ஆராதனை நடைபெறுவதில்லை என்பது குறிப்பிடத்தக்கது. பக்தர்கள் கொடுக்கும் மாம்பழங்கள் இறைவனுக்குப் படைத்துவிட்டு அவர்களிடம் திரும்பக் கொடுக்கின்றனர். இறைவனுக்கு தேங்காய் உடைக்கப்படுவதில்லை. இதற்கு இரண்டு காரணங்கள் கூறப்படுகின்றன. ஒன்று அவர் மிகுந்த பசியோடு வருகிறார். அம்மையார் வீட்டில்தா[illegible] அவர் சாப்பிட வேண்டும். அதற்கு முன்பாகத் தேங்காய் உடைத்தால் அவர் பசியாறியதாகப் பொருள்படும். எனவே, தேங்காய் உடைப்பது இல்லை. மற்றொன்று, இவ்விழா முழுநிலா நாளன்று நடைபெறுவதால் தேங்காயைப் பூரணகும்பமாகக் கருதி அதை உடைப்பதில்லை. இக்கருத்து ஏற்றுக் கொள்ளக் கூடியதன்று. தமிழகத்தில் ஏனைய கோயில்களில் பௌர்ணமி பூசை என்று சிறப்பான பூசை நடைபெறும் போது கூட, தேங்காய் உடைக்கப்படுகிறது. எனவே, இங்கு முதல் கருத்தே ஏற்றுக் கொள்ளத் தக்கது.

பரமதத்தன் காலை ஒன்பது மணிக்குத் கடைத்தெரு பொய்யாத மூர்த்தி விநாயகர் ஆலயத்திற்குச் சென்றுவிடுகிறார். இதற்குச் காசுக்கடைக்கு வணிகம் செய்ய அவர் சென்று விட்டதாகப் பொருள். அங்கிருந்து பதினொரு மணியளவில் இரண்டு மாம்பழங்களை வீட்டிற்கு (அம்மையார் கோயிலுக்கு) அவர் அனுப்புகிறார். மாலை 4,5 மணிக்குப் பிச்சாடனருக்கு அமுது படையல் நடைபெறுகின்றது. இதில் சர்க்கரைச் சாதம் குறைவாகவும், தயிர்ச்சாதம் மிகுதியாகவும், மாம்பழமும் வைத்துப் படைக்கப்படும். இவ்வமுது படையலே விழாவின் முக்கிய நிகழ்ச்சியாகும். பக்தர்கள் பிச்சாடனர் உண்டபிறகே உணவு உண்பார்கள்; மற்றவர் பிச்சாடனர் தங்கள் வீட்டைத் தாண்டியபின் உண்பர்.

மாலை ஆறுமணிக்குப் பரமதத்தன் உணவருந்துவதற்காக தன் வீட்டிற்கு வருகிறார். ஏழு மணிக்குக் கப்பலில் பாண்டியநாடு செல்கிறார். அந்நிகழ்ச்சிக்கென்று சக்கரம் வைத்த கப்பலே உண்டு. சித்தி விநாயகர் கோயிலில் பத்துமணிக்குப் பரமதத்தனுக்கு இரண்டாவது திருமணம் நடைபெறுகின்றது. அம்மையார் திருமணம் போலவே இதுவும் வேதமுறைப்படிச் சிறப்பாகச் செய்விக்கப்படுகிறது. அம்மையார் பதினோரு மணிக்குச் சுற்றம் சூழ இவ்விடத்திற்குப் பூப்பல்லக்கில் வருகிறார். சுற்றத்தினராக உருவகிக்கப்பட்ட பொம்மைகள் இதற்காகச் செய்யப்பட்டு அவையும் பல்லக்கிற்குப் பின்னால் ஒரு வண்டியில் ஏற்றப்பட்டு ஊர்வலமாக அழைத்துச் செல்லப்படுகின்றன.

இவ்வூர்வலம் கோயிலுக்கு வந்ததும் பரமதத்தன் தன் இரண்டாவது மனைவியுடனும், குழந்தையுடனும் அம்மையார் காலில் விழுவதாகப் பொருள்பட அனைவருக்கும் கற்பூர தீப ஆராதனை செய்விக்கப்படுகின்றது.

அடுத்த நாள் காலை ஐந்து மணிக்கு ஊன் உதிர்த்த அம்மையாரை வெட்டிவேரால் அமைப்பர். இவ்வுருவம் பல்லக்கில் ஊர்வலமாகக் கொண்டு செல்லப்படும். இவ்வூர்வலம் சவவூர்வலம்போல் அமைதியாகச் செல்கிறது. இந்நிகழ்ச்சியில் எக்காளம் என்னும் ஒருவகைக் கருவியால் மட்டும் ஒலி எழுப்புகின்றனர். இவ்வூர்வலத்தில் அம்மையார் திருப்பதிகங்கள் ஓதிக்கொண்டு விரைந்து செல்கின்றனர். இவ்வூர்வலம் பெருமாள் கோயில் அருகில் வந்ததும் அம்மையாருக்கு, விநாயகர், சுப்ரமணியர், சண்டிகேசுவரர், கைலாச நாதர், அம்பிகை ஆகிய பஞ்சமூர்த்திகள் காட்சி அளிக்கின்றனர். இந்நிகழ்ச்சி அம்மையார் இறைவனைக் கயிலையில் கண்ட காட்சியாக நடத்திக் காட்டப்படுகின்றது. அம்மையாருக்கும் பஞ்சமூர்த்திகளுக்கும் ஒரே நேரத்தில் கற்பூர தீபாராதனை காட்டப்படுகிறது. இத்துடன் விழா முடிவடைகிறது.

## 6.3.1. பெரியபுராணத்தில் இருந்து மாறுபாடு

காரைக்காலில் நடைபெறும் மாங்கனித் திருவிழா பெரும்பாலும் பெரியபுராண நிகழ்ச்சிகளை அடியொற்றியே அமைந்துள்ளன. பெரியபுராண நிகழ்ச்சிகளுக்கு உயிர் ஊட்டும் சடங்காக இத்திருவிழா நடைபெறுகின்றது எனலாம். எனினும், பெரிய புராணத்தில் இருந்து இரண்டொரு வகையில் இது மாறுபடுகிறது. சிவனடியாரே உணவு வேண்டி வருகிறார் எனப் பெரியபுராணம் கூற, இத்திருவிழாவில் சிவபெருமானே (பிச்சாடனர்) சிவனடியார் வடிவத்தில் வருவதாகக் காட்டப்படுகிறது. சிவனடியார் வரும்போது அவர் கையில் எதுவும் இருப்பதாகச் சேக்கிழார் கூறவில்லை. திருவிழாவில் இடம்பெறும் பிச்சாடனர் கையில் மாம்பழம் உள்ளது. சிவனடியார் தாமே அம்மையார் இல்லம் வந்து சேர்கிறார் என்பது புராணக்கதை. விழாவில் அம்மையாரே அவரை (பிச்சாடனர்) எதிர் நோக்கிச் சென்று அழைத்து வருகிறார். அம்மையாரைவிட்டுப் பிரிந்த பரமதத்தன் கப்பலில் ஏறி வெளிநாடு சென்றதாகச் சேக்கிழார் கூறியிருப்ப, விழாவில் அவர் பாண்டியநாடு சென்றதாகச் சித்திரிக்கப்படுகிறது. அம்மையார் இறுதியில் திருவாலங்காட்டில் பெற்ற பேறு இத்திருவிழாவில் இடம்பெறாமை குறிப்பிடத்தக்கது. அம்மையார் கயிலைக் காட்சியைக் கண்ட பின்னரே திருவாலங்காடு செல்கிறார். அவர் பங்குனி உத்தரத்தை அடுத்த சுவாதியில் ஆலங்காடு அடைந்ததாகக் கூறுவது சைவ மரபு. மாங்கனித் திருவிழா ஆனியில் நடைபெறுதால் இந்தத் திருவாலங்காட்டு நிகழ்ச்சி இத்திருவிழாவில் நிகழ்த்திக் காட்டப்படவில்லை எனலாம். கடந்த சில ஆண்டுகளாக அம்மையார் திருவாலங்காட்டில் இறைவனோடு கலந்த ஐக்கிய விழா காரைக்காலிலும் பங்குனி சுவாதியில் கொண்டாடப்படுவது இங்கு குறிப்பிடத்தக்கது.

## 6.4 திருவாலங்காடு

காடு என்று வழங்கும் ஒன்பது தலங்களுள் திருவாலங்காடும் ஒன்று. தஞ்சை மாவட்டத்தில் தலையாலங்காடு என்று ஒரு தலம் உள்ளது. எனவே, திருவாலங்காடு வடவனமாயிற்று.[3] சைவ சமயக் குரவர்களான அப்பர், சம்பந்தர், சுந்தரர் அருளிய தேவாரப் பாடல்கள் பெற்ற சிவத்தலங்கள் 276. இவர்கள் சிவபெருமான் நடனமாடும் ஐந்து சபைகளாயும் பாடியுள்ளனர். இச்சபைகளில் முதன்மையானது காளியோடாடிய திருவாலங்காடேயாகும். இது மணி மன்று என்றும் இரத்தின சபை என்றும் வழங்கப்பெறுகின்றது.

### 6.4.1. கோயில் அமைப்பு

சந்நிதி வீதியின் மேற்கே, வீதிகளுக்கு மையமாய் அழகமைந்த நீண்ட திருமதில்களுடன் கிழக்கு மேற்காகத் தென்மதில் 599 அடி நீளமும், வடமதில் கிழக்கு மேற்காக 704 அடி நீளமும் மேலைத் திருமதில் பின்பக்கம் 407 அடியும், கீழைத் திருமதில் முகப்புவாசல் 406 அடியுமாக . . . . . [4] சந்நிதி கிழக்கு நோக்கியதாய் மூன்று பிராகாரங்களை உடையதாய் உள்ளது. இரண்டாம் பிராகாரத்தில் 36 அடி உயரத்தோடு இராசகோபுரமும் அதன் பின்னர் பழமையான மொட்டைக் கோபுரமும் மிளிர்கின்றன.

இவ்வாலயத்திற்கு மேற்கே, கீழக்கரை 975 அடிநீளமும், மேலக்கரை 803 அடி நீளமும், தென் கரை 501 அடியும், வடகரை 332 அடியுடனும் 8–53 ஏக்கர் நிலப்பரப்பில் படித்துறைகளோடு எக்காலத்தும் வற்றாத தூய்மையான நீரையுடைய சென்றாடு தீர்த்தம் என்ற புனிதத் திருக்குளம் உள்ளது. இக்குளக்கரையின் எட்டுத் திக்குகளிலும் எட்டு நாற்கால் மண்டபங்களும், ஒவ்வொரு மண்டபத்தின் முன்பும் ஒவ்வொரு நந்திச் சிலையும், நடுவில் நீராழி

மண்டபமும், மேற்குக் கரை மையத்தில் முத்தீசுவரர் ஆலயமும், திருக்குளத்தின் வடகிழக்கு மூலையில் ஆடல் வல்லானோடு ஆடிய பத்திரகாளியாம்பிகை ஆலயமும், தென்கிழக்கு மூலையில் திரௌபதியம்பிகை பஞ்சபாண்டவர் ஆலயமும் உள்ளன. திருக்குளம் எட்டு மண்டபங்களோடும், தூபியோடு இருந்து இப்போது ஐந்து மண்டபங்கள்தான் உள்ளன. இத்தல மூர்த்திக்கு எவ்வளவு விசேடமோ [illegible]தப் போன்ற விசேடமே திருக்குளத்திற்கும் உண்டு என்பர்.

தெற்கு வீதியின் வடபாகத்தில் திருக்கல்யாண மண்டபமும், காரைக்கால் அம்மையார் மடம் என ஒரு சிறு கோயிலும் உள்ளன. இக்கோயில் இப்போது அழிந்துவிட்டது. தென்பாகத்தில் ஸ்ரீ முஞ்சிகேச முனிவரின் ஆலயம் உள்ளது. வடகிழக்கே வடக்கு வீதிக் கோடியில் பழுதடைந்த இராமலிங்கேசுவர ஆலயமும், இதன் நேர் வடக்கே அரிகர புத்திரன் ஆலயம் கர்ப்பக் கிருகம், அர்த்த மண்டபம், மகா மண்டபத்தோடு பழுதடைந்து உள்ளது. சந்நிதி வீதியின் கிழ்க்கோடியில் ஓர் ஆலயமும் அதை அடுத்து திருத்தேரும் திருமதிலைப் போன்ற தேர் நிலையும் உள்ளன. இத்தேர் 36 அடி உயரத்துடன் எட்டிதழ்த் தாமரைக் கமலம் போன்று அமைந்துள்ளது. இதற்குத் தெற்கே ¼ கி.மீ. தூரத்தில் சாட்சி பூதேசுவரர் ஆலயமும், எதிரே தீப்பாய்ந்த குட்டையும், குட்டைக் கரையில் நீலியின் பொருட்டு மேற்கொண்ட வழக்கின் காரணமாக உயிர் துறந்த 70 வேளாளப் பெருமக்களின் உருவங்களைச் செதுக்கிய பழைய பாறையும், மணிமண்டபமும் உள்ளன. அங்கிருந்து கிழக்கே ¾ கி.மீ. தூரத்தில் பழையனூரும் உள்ளன. ஊரின் முன்னே தழுவக் குழைந்த ஈசர், ஆனந்தவல்லியம்பிகையோடு உள்ள ஆலயமும் உள்ளது.

தழுவக்குழைந்த மூர்த்தி மேற்கு நோக்கியுள்ளது. காரணம், காரைக்கால் அம்மையாருக்குத் திருவாலங்காட்டைக் காட்ட

முன்னமே எதிர்நோக்கி வந்து அம்மையாருக்குக் காட்டவேய
பழையனூர்க்கு வடக்கே கயிலாய நாதர் ஆலயம் உள்ள
திருவாலங்காட்டிற்கும், பழையனூருக்கும் இடையே
கோயில்களும் ஆங்காங்கே ஒவ்வொரு குளமும் இருந்தன. இப்போ
5,6 கோயில்களே காணப்படுகின்றன. அவற்றிலும் வேறு தெய்வங்
இடம்பெற்று விட்டன. குளங்கள் மட்டும் பல உள்ளன. அவற்றி
பல தூர்க்கப்பட்டு நிலங்களாக்கப்படுகின்றன.

## 6.4.2 பெயரும் உருவமும்

இத்தலத்தைத் தேவேந்திரன், ஆதிசேடன், கா
முதலியோர் பூசித்துள்ளனர். உருத்திரசாமி, சோமசுவாமி, கிரா
ஆகியோர்க்கெல்லாம் சிவபெருமான் இங்கே மோட்சம் அளித்தத
கூறப்படுகிறது.[6] இத்தலத்தில் முத்தி தீர்த்தம், குக தீர்த்தம்
இரண்டு தீர்த்தங்கள் உள்ளன.[7] ஆலமரமும், பலாமரமும்
விருட்சங்களாகும். இறைவன் பெயர் சிங்கப் பெருமான், ஊர்த்
தாண்டேசுவரர் என்னும் பெயரையும் உடையவர். "தேவர் சிங்
என்ற பெயரைச் சுந்தரர் தம் பதிகத்தில் கையாண்டுள்ளார்.

"சித்தா சித்திக் திறங்காட்டுஞ்
சிவனே தேவர் சிங்கமே"[8]

தேவி, வண்டார் குழலி அம்மை என்று அழைக்கப்படுகிறாள்.

இத்தலத்தில் காணக்கிடைக்கின்ற கல்வெட்டுகளிலிரு
இறைவன் பெயர் "திருவாலங்காடு உடைய நாயனார்" என்
இறைவி, "வண்டார் குழலி நாச்சியார்" எனவும் வழங்கப்பட்ட
அறியலாம்.

திருவாலங்காட்டு இரத்தின சபையின் விமா
தாமிரத்தால் வேயப்பட்டுள்ளது. இங்குதான் எண்தோள் வீசி நட

அண்டமுற நிமிர்ந்தாடுகிறார். இத்திருமேனியின் எட்டுக் கரங்களும் நாலாதிசைகளிலும் பறப்பது போன்ற காட்சியைத் தருகின்றன. ஊர்த்துவ தாண்டவ நிலையில் இடக்கால் அண்டத்தைத் தொடுவதுபோல் மேலே உயர்ந்துகொண்டே போகிறது. இவ்வுருவ அமைப்பில் யாவும் விரைவாக அசைவதுபோல் தோன்றும்.

திருவாலங்காட்டு நடராசர் சந்நிதியில் நடராசர் திருவுருவத்தின் அருகில் அம்மையார் அமர்ந்த நிலையில் காட்சி அளிக்கிறார். அவர் பத்மாசனத்தில் அமர்ந்து இரண்டு கைகளிலும் தாளத்தை ஏந்திபாடும் வகையில் இத்தெய்வத் திருமேனி வடிக்கப்பட்டுள்ளது. உடம்பு என்புரு என்பது சிற்பத்தில் காட்டப்படுகிறது. ஒட்டி உலர்ந்த வயிறும், தளர்ந்து தொங்கிய மார்பகங்களும், குச்சி போன்ற கைகளும் கால்களும் உடையவராக சப்பணமிட்டு அமர்ந்திருக்கிறார். காதுகள் வடிந்து தொங்குகின்றன. சடைகள் தலையின் இரண்டு பக்கங்களிலும் நீண்டு தொங்குகின்றன. சிவபெருமான் அருகில் உமையம்மையார் ஊர்த்துவ தாண்டவத்தை வியப்புடன் நோக்குவதுபோலப் படிமம் வடிக்கப்பட்டுள்ளது. இடக்கை தொங்கிய நிலையிலும், வலக்கை முகத்தை ஒட்டிச் சேர்த்த வியப்புக்குறி காட்டுவதாயும் அமைந்துள்ளன. காளியுடன் மாறுபட்டுச் சிவபெருமான் ஊர்த்துவ தாண்டவம் ஆடியது குறித்து உமாதேவியார் வியந்துபார்க்கும் வகையில் இத்திருமேனி வடிக்கப்பட்டுள்ளதாய்த் தெரிகிறது. நடராசத் திருமேனி வைக்கப்பட்டிருக்கும் அறை நீள்சதுர அமைப்பில் பெரிதாக அமைக்கப்பட்டுள்ளது. அதனை ஒருவர் பிரதட்சணமாகச் சுற்றிவரக்கூடும். எனினும், நடராசத் திருவுருவத்தை அடுத்து அதன் பின்புறம் அறையின் குறுக்கே ஒரு நெடுஞ்சுவர் எழுப்பப்பட்டு அறை இரண்டாகப் பிரிக்கப்பட்டுள்ளது. வெற்றிடமாக உள்ள பின் அறையில் அம்மையார் இன்றும் உறைகின்றார் என்று அவ்வூர் மக்கள்

நம்புகின்றனர். இதற்கு அரணாக அவர்கள் பெரியபுராணத்தில் வரும் காரைக்கால் அம்மையார் புராணத்தைக் காட்டுகின்றனர்.[9]

ஏனைய அடியார்கள்போல் காரைக்கால் அம்மையார் இறைவனோடு ஐக்கியமானார் என்று சேக்கிழார் பெருமான் குறிப்பிடாமை இந்நம்பிக்கைக்குக் காரணமாகலாம்.

### 6.4.3. விழாக்கள்

திருவாலங்காட்டில் பங்குனி உத்தரவிழாவும், மார்கழித் திருவாதிரை விழாவும், ஆனித் திருமஞ்சன விழாவும் சிறப்புடையன. பங்குனி மாதத்தில் இங்குப் பிரமோற்சவம் நடைபெறும். இந்த உற்சவம் முடிந்தவுடன் காரைக்கால் அம்மையாருக்குத் தனியாக இரண்டு நாள் விழா நடக்கும். இவ்விழா பங்குனி மாதத்தில் சுவாதி நட்சத்திரத்தில் பெருஞ்சிறப்புடன் நடைபெறுகிறது. மார்கழி மாதம் திருவாதிரை உற்சவம் சிதம்பரத்தில் போல ஆருத்ரா தரிசனமாக இங்குச் சிறப்பாக நடைபெறுகிறது. பங்குனி உத்திர விழாவில் ஏழாம் நாள் பவளக்கால் கடைந்த தேரில் இறைவன் உலாவருவது மிகவும் சிறப்புமிக்க நிகழ்ச்சியாகும்.

பங்குனி உத்தர விழாவிலும், மார்கழித் திருவாதிரை விழாவிலும் தாண்டவ மூர்த்தி பழையனூர் சென்றுவருவது மரபு.

### 6.5 புராணம்

சிவபெருமான் திருவாலங்காட்டில் ஆடுகின்ற தாண்டவம் ஊர்த்துவ தாண்டவம். இத்தாண்டவம் பற்றிய சுவையான கதையொன்று உண்டு. திருவாலங்காட்டில் நிம்பன், சும்பன் என்ற இரண்டு அரக்கர்கள் பல கொடுமைகளை இழைத்துக் கொண்டிருப்பதை அறிந்த பார்வதி, அவர்களை அழித்தாள். இவர்கள் உடன்பிறந்தாளான விகுருதியின் மகன் இரத்தபீஜன், அம்பிகையை

எதிர்த்தான். இரத்தபிஜனின் ஒருதுளி இரத்தம் பூமியில் விழுந்தால், அவனைப் போன்ற ஓர் உருவம் தோன்றும் என்பது அவன் பெற்ற வரம். இவ்வரத்தை முறியடிக்கும் ஆற்றல் காளிக்குத்தான் உண்டு என்பதால், அம்பிகை காளியைத் தோற்றுவித்து, அவனை எதிர்க்கச் செய்தாள். காளி போர் செய்தபோது விழுந்த இரத்தம் அனைத்தையும் ஒரு கபாலத்தில் ஏந்திக் குடித்தாள்; இரத்தபீஜன் மாண்டான். ஆனால், இரத்தத்தைச் குடித்த காளிக்கு அசுரபலம் ஏற்பட்டு, இரத்த வெறியில் அல்லல் படுத்தி வந்தாள். அவள் கோபத்தை அடக்க எண்ணிச் சிவபெருமான் எழுந்தருளினார். இருவருக்கும் நடனத்தில் போட்டி ஏற்பட்டது. தோற்றவர் காட்டைவிட்டுச் சென்றுவிட வேண்டும் என்று முடிவாயிற்று.

போட்டி வெகுநேரம் மிகவும் சிறப்பாக நடந்துகொண்டிருந்தது. காளி தோற்பதாகத் தெரியவில்லை. எனவே, நடனத்தின் இடையில் இடக்காதில் இருந்த குண்டலத்தைக் கீழே விழச்செய்து, நடனத்தோடு நடனமாக அக்குண்டலத்தை இடக்கால் விரல்களால் எடுத்து மேலே கொண்டுபோய் காதில் மாட்டினார் நடராசர். இவ்வூர்த்துவ தாண்டவ நிலையைக் கடைபிடிக்க முடியாத காளி நாணித் தலைகுனிந்தாள். ஆனால், இறைவன் கருணையோடு, "உனக்கு திருவாலங்காட்டில் முதல் பூசையும் விழாவும் உரியதாகும். பக்தர்கள் முதலில் உன்னை வணங்கிய பின்தான் மற்றைய தெய்வங்களை வணங்குவார்கள்" என்று வரம் ஈந்தார். திருவாலங்காட்டில் காளிக்கு முதல் பூசை நடப்பதற்கு இப்புராண வரலாறு காரணமாகும்.

முடிவுரை

இவ்வியலில் காரைக்கால் அம்மையாருக்கென்று தனிக்கோயில்கள் எடுக்கப்பட்டுள்ள காரைக்கால், திருவாலங்காடு என்னும் இரு ஊர்களைப் பற்றியும் அவ்வூர்களில் நடைபெறும்

அம்மையார் திருவிழாக்கள் பற்றியும் ஆராய்ந்து கூறப்பட்டது. திருவாலங்காட்டில் நடைபெறும் அம்மையாரின் ஐக்கியத் திருவிழாவான சுவாதித் திருநாள் நேரில் சென்று ஆராயப்படவில்லை. காரைக்காலில் நடைபெற்ற மாங்கனித் திருவிழா மட்டுமே விரிவாக ஆராயப்பட்டது. இவ்விழா பெரிதும் பெரியபுராணத்தை ஒட்டியே அமைந்துள்ளது. காணப்படும் வேறுபாடுகள் காலச்சூழ்நிலைக்கேற்ப மாற்றி அமைக்கப்பட்டன எனலாம். அம்மையார், நடராசர் ஆகியோருடைய செப்புத் திருமேனிகளின் வடிவ அமைப்புகள் இங்கு எடுத்துரைக்கப்பட்டன. அவை பெரியபுராணம் காட்டுகின்ற இயல்புகளைச் செம்பில் வடித்துக் காட்டும் நல்லிலக்கியங்களாக உள்ளன.

<u>சான்றெண் விளக்கம்</u>

1. கந்தசாமி சிவாச்சாரியார், காரைக்கால் அம்மையார் கோயில் குருக்கள் அளித்த பேட்டியில் தெரியவருவது.
2. மலைப்பெருமாள் பிள்ளை, கு., அவர்களின் பேரான மலைப்பெருமாள் பிள்ளை, ஜி, கூறிய செய்தி
3. சபாபதி தேசிகர். தி.மு., திருவாலங்காட்டு தல வரலாறு. ப.6
4. மேலது ப.11
5. மேலது ப.13
6. ராதாகிருஷ்ணப்பிள்ளை, எம்., தென்னாட்டுக் கோயில்கள். ப.29
7. பாலூர் கண்ணப்ப முதலியார், 'தொண்டை நாட்டுப்பாடல்பெற்ற சிவதலங்கள்' ப.118
8. ஏழாந்திருமுறை, பதிகம் 52:1
9. காரைக்கால் அம்மையார் புராணம் பா.65

*எந்தாய் தழும்பேறிய பாவம் பொல்லாவாம்*
*அந்தாமரைபோல் அடி*

*— அம்மையார்*

# 7. காரைக்கால் அம்மையாரின் உருவத் திருமேனிகள்

## 7.0 முன்னுரை

சைவ பக்தி இலக்கியத்தின் முன்னோடியான காரைக்கால் அம்மையார் உருவம் பேய் வடிவிலும், தாளம் ஏந்திய நிலையிலும், அமர்ந்த நிலையிலும், நின்ற நிலையிலும், சிற்பங்களாகவும், செப்புத் திருமேனிகளாகவும் வடிக்கப்பெற்று வழிபாட்டில் இருந்தது. நடராசப் பெருமானுடைய திருவுருவத்தோடு இவை முன்பு இணைத்துக் காட்டப்பட்டன. அம்மையாருடைய உருவத்திருமேனிகள் குறித்தும், அத்திருமேனிகள் கடல்கடந்த நாடுகளில் பரவியது குறித்தும் இவ்வியல் ஆராய முற்படுகிறது. இங்குச் சொல்லப்பட்டவை பல நூல்களிலிருந்து திரட்டப்பட்டவை. இச்செய்திகளில் சிலவற்றை ஆசிரியர் நேரில் சென்று கவனித்துள்ளமையும் இங்கே குறிப்பிடத்தக்கது. பிரஞ்சு இந்தியப் பண்பாட்டுத் கழகமும், பிற ஆய்வு நூல்களும் அளித்துள்ள தகவல்கள் அடிப்படையில் இவ்வியல் அமைகிறது.

## 7.1 கல்லுருவத் திருமேனிகள்

### காரைக்கால்

காரைக்கால் அம்மையார் கோயிலில் காணப்படும், அம்மையாரின் சிற்பம் இளமைக் கோலத்தில் காட்சி தருகிறது. இச்சிற்பத்தில் கழுத்தில் மூன்று அணிகலன்கள் காணப்படுகின்றன. இடப்புறமாகக் கொண்டை வளைத்துக் கட்டப்பட்டுள்ளது. ஆடை இடைமுதல் கணுக்கால்வரை காணப்படுகிறது. காலணிகளான பாத

சிலம்பும், காப்பும் கால்களில் காணப்படுகின்றன. கையில் பட்டையான ஒரு காப்பு காணப்படுகிறது. இரண்டு கைகளிலும் தோள்வளை உள்ளது. காதுகளில் உருத்திர குண்டலம் அழகு செய்கிறது. வலக்கையில் அன்னக் கரண்டியும், இடக்கையில் அட்சய பாத்திரமும் ஏந்தியவண்ணம் காட்சி தருகிறார். பத்தர பீடத்தில் சமபங்க நிலையில் நின்ற கோலத்தில் செதுக்கப்பட்டுள்ளது.

### 7.1.2 கைலாசநாதர் ஆலயம்

இங்கு முதலாம் திருச்சுற்று மாளிகையில் தென்புறத்தில் அறுபத்து மூன்று நாயன்மார்களில் இருபத்து நான்காவமவராக அமர்ந்த கோலத்தில் காட்சி தருகிறார். செவ்வகப் பீடத்தின் மீதுள்ள அர்த்த பத்ம பீடத்தில் இரண்டு கால்களையும் தொங்கவிட்டு அமர்ந்த கோலத்தில் காட்சி தருகிறார். காதுகளில் உருத்திர குண்டலங்களும், நெற்றியில் பட்டையான பூரிமமும் காட்சி தருகின்றன. விரிசடை இரண்டு பக்கமும் பக்கத்திற்கு ஒன்பதாக நீட்டப்பட்டுள்ளது. மார்பில் பட்டையான ஒற்றைப் புரிநூல் காட்சி தருகிறது. கழுத்தில் இரண்டு அணிகலன்கள் உள்ளன. இடைமுதல் கணுக்கால் வரையில் ஆடை அணிந்துள்ளார். இடக்கையில் அட்சய பாத்திரமும், வலக்கையில் கரண்டி போன்ற ஒரு பொருளும் காட்சி தருகின்றன. இதன் மூக்கு வாய்ப்பகுதி, மார்பணி, பூரிமம் இவை 15ஆம் நூற்றாண்டு சிற்பக்கலைக்குச் சிறந்த சான்றாகும்.

### 7.1.3 பழனி

இங்குக் காணப்படும் அம்மையாரின் புடைப்புச் சிற்பம் நின்ற கோலத்தில் சற்று கூன் விழுந்த அமைப்பில் உள்ளது. வலக்கையில் தண்டுன்றியும் இடக்கை மேல்நோக்கிச் சுட்டுவதாயும் உள்ளது. மேல் நோக்கிச் சுட்டுவது, கயிலாயத்தைச் சுட்டுகிறார் எனக் கொள்ளலாம். வலக்கையில் பிடித்திருக்கும் தண்டை

கீழிருந்து மற்றொருவர் பிடித்திருப்பதுபோல் சுாணப்படுகிறது. இச்சிற்பத்தில் அம்மையார் மிகவும் வயோதிகராகச் சித்திரிக்கப்பட்டுள்ளார். தலையில் உரோமம் எதுவும் இன்றி மொட்டையாகவும், வடிக்காதுகளுடன் காட்சி தருகிறார். இடை முதல் பாதம் வரை ஆடை உடுத்தியுள்ளார்.

### 7.1.4 திருச்சிராப்பள்ளி

இங்கு அம்மையார் அமர்ந்த கோலத்தில் காட்சி தருகிறார். வலக்காலை மடக்கி, இடக்காலைத் தொங்கவிட்டு அமர்ந்திருக்கிறார். வடிகாதுகள் காணப்படுகின்றன. தலையில் அக்கமாலையும், கைகளில் தாளம் ஏந்தியபடியும் அமைக்கப்பட்டுள்ளது. தலைமுடி பின்னோக்கித் தாழ்ந்து தொங்குகிறது.

### 7.1.5 திருமலைராயன் பட்டினம்

இச்சிற்பத்தில் அம்மையார் இளமைக் கோலத்தில் காட்சி தருகிறார். இதில் அமர்ந்த கோலத்தில் இரண்டு கால்களையும் தொங்கவிட்டபடி அமர்ந்திருக்கிறார். இரண்டு கைகளிலும் தனித்தனியே எதையோ ஏந்தியபடி உள்ளார். வலக்கையில் அட்சய பாத்திரமும், இடக்கையில் மாங்கனியும் ஏந்தியிருப்பதாகக் கொள்ளலாம். தோள்களிலும், கழுத்திலும், நெற்றியிலும், அக்கமாலை அணிந்திருக்கிறார். தலையில் இடப்புறமாகக் கூந்தல் வளைத்துக் கட்டப்பட்டுள்ளது. அமைதி தவழும் முகத்துடன் காட்சி தருகிறார்.

### 7.1.6 தாராசுரம்

தஞ்சாவூர் மாவட்டத்தில் தாராசுரத்தில் உள்ள ஐராவதேசுவரர் கோயிலில் உள்ள கற்சிற்பத்தில் காரைக்கால் அம்மையார் கையின் உதவியுடன் கால் மேலாகக் கைலாயத்திற்குச் செல்கிறார். இப்படிப்பட்ட ஒரு கற்சிற்பம் மேலக் கடம்பூர்

சிவபெருமான் கோயிலிலும் இருக்கிறது. காரைக்கால் அம்மையாரைப் பேய் வடிவில் சித்திரிக்கின்ற சிற்பங்களில், மற்ற தெய்வங்களுக்குரிய உருவம், முக அமைப்பு, உடுக்கை போன்றவற்றில் உள்ள வரையறை அம்மையாருக்குக் கைக்கொள்வதில்லை. இச்சிற்பத்திற்குரிய காலம் கி.பி. 12ஆம் நூற்றாண்டு ஆகும்.

### 7.1.7 திருக்கடையூர்

இக்கோயில் ஆதித்தசோழன் காலத்திலிருந்து புகழ்பெற்று விளங்குகிறது. இக்கோயிலில் உள்ள சிற்பங்கள் பல ஒன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்த கற்சிற்பங்கள். இச்சிற்பம் திருச்சுற்று மாளிகையின் வடப்புறம் காட்சி தருகிறது. இங்கு அறுபத்துமூன்று நாயன்மார்களின் சிற்பங்கள் காணக்கிடைக்கின்றன. இவை பதினைந்து, பதினாறாம் நூற்றாண்டைச் சேர்ந்தவை. காரைக்கால் அம்மையார் இங்குப் பேயாராக வழிபாடு செய்யப்படுகிறார். அவர் செவ்வக பீடத்தில் அமர்ந்த கோலத்தில் காட்சி தருகிறார்.

### 7.1.8. கங்கை கொண்ட சோழபுரம்

இங்கு அபஸ்மாறனின் கீழே குறுவடிவில் உள்ள தேவகணங்கள் இசை முழக்க, இவர்கள் இடப்பாகத்தில் அம்மையார் சிற்பம் அமர்ந்த கோலத்தில் செதுக்கப்பட்டுள்ளது. அம்மையார் எலும்புருவில் காட்சி தருகிறார். தலைவிரி கோலம் சித்திரிக்கப்பட்டுள்ளது. மார்பகம் தேவைக்கு மேல் செதுக்கப்பட்டுள்ளன.

### 7.1.9 கோயம்புத்தூர்

கோயம்புத்தூர் மாவட்டத்திலிருந்து காரைக்கால் அம்மையாருக்கான சிற்பம் ஒன்று கிடைத்துள்ளது. அது அம்மையார் சிலைதான் என்பது பீடத்தில் இருந்து தெரியவருகிறது. அழகிய

இளமைப் பருவத்து முகத்துடனும், அப்பருவத்திற்கேற்ற ஆடை, ஆபரணமுடனும் இத்திருவுருவம் காட்சி தருகிறது. தலைமுடி இடப்புறம் வளைத்துக் கட்டப்பட்டுள்ளது. இனிமையான முகத்துடன் இருகைகளிலும் மாங்கனியுடன் அவள் நிற்கின்றாள். அவள் வாழ்வின் முற்காலத்தைப் பற்றிய ஒரு விளக்கமாக இதைச் சிற்பி அமைத்திருக்கலாம்.

### 7.1.10 இராசேந்திர சோழகன்

இங்கு நடராச பெருமானின் பாதத்தின்கீழ் அமர்ந்தபடி அம்மையார் இறைவன் தாண்டவத்திற்குத் தாளம் இசைக்கிறார். அம்மையார் இச்சிற்பத்தில் மிகவும் மெல்லிய தோற்றத்தில் காட்சியளிக்கிறார். தலையில் அக்கமாலை அணிந்துள்ளார். கழுத்தில் ஒரு அணிகலன் காணப்படுகிறது. இறைவன் அடியின்கீழ் இருந்து ஆட்டத்தைக் காண்பதால் ஆட்டம் முழுமையாகத் தெரியவில்லை போலும். எனவே, அம்மையார் நிமிர்ந்து பார்ப்பதாகவும், ஒரு காலைத் தூக்கிக் கொண்டு எழமுற்படுவது போலவும் அமைக்கப்பட்டுள்ளது.

### 7.1.11 மதுரை

இச்சிற்பம் பேய்வடிவில் வடிக்கப்பட்டுள்ளது. கடுமையான முகத்துடனும், குழிந்த வயிறுடனும், எலும்புகள் வெளியில் தெரியும் வண்ணம் அமைந்துள்ளது. இரண்டு கால்களையும், தொங்கவிட்டு அம்மையார் அமர்ந்துள்ளார். வடிகாதுகளும், நெற்றியில் அக்கமாலையும் காணப்படுகிறது. சிவபெருமானின் அடியில் வீற்றிருக்கும் இவ்வுருவத் திருமேனியின் கைகளும், மார்புப் பகுதியும் சிதைந்து காணப்படுகின்றன.

## 7.2 செப்புத் திருமேனிகள்

### 7.2.1 திருத்துறைப் பூண்டி

இவ்வுருவத் திருமேனி எலும்புருவாகக் காட்சி தருகிறது. தோள், மார்பு, கரங்களில் மடிப்புகள் தென்படுகின்றன. தோள்களில் உள்ள உருண்டை வடிவமான மூட்டுகள் வெளியில் தெரிகின்றன. முகம் மனிதத் தன்மையற்று, பேயின் முகத்தையொத்து அழுந்தி, அகன்ற கண்களுடன், கோடு விழுந்தாற்போன்ற புருவத்துடன், ஒடிந்தெழுந்த முகவாய்க்கட்டையுடன் திறந்த வாயிலிருந்து பளிச்சிட்டு இறங்கும் இரண்டு நீண்ட கோரைப் பற்களுடன் காணப்படுகிறது. மார்பகங்கள் தேவைக்கு மேல் உருவாக்கப்பட்டுள்ளன. இச்செப்புத் திருமேனிக்குரிய காலம் 16ஆவது நூற்றாண்டென்று கணிக்கப்பட்டுள்ளது. இவர்தம் கைகளில் உள்ள தாளங்கள் இரண்டையும் தூக்கிப் பிடித்தவண்ணம் காட்சி தருகிறார். பேய் உருவத்தில் அமைக்கப்பட்ட மற்ற சிற்பங்களிலிருந்து இது பெரிதும் மாறுபட்டுக் காணப்படுகிறது.

### 7.2.2 கைலாசநாதர் ஆலயம்

காரைக்காலில் கைலாசநாதர் ஆலயத்தில் அம்மையாருக்குச் செப்புத் திருமேனி காணப்படுகிறது. இத்திருமேனி நடராச பெருமானின் அருகில் உள்ளது. அம்மையார் அர்த்த பத்ம பீடத்தில் பத்மாசன நிலையில் அமர்ந்த கோலத்தில் அமைக்கப்பட்டிருக்கிறார். கைகளில் உருத்திர தோள்வளை, மார்பில் தாலி, அக்கமாலை ஆகிய அணிகலன்களுடன காட்சி தருகிறார். வடிகாதுகளில் அணிகலன் இல்லை. அம்மையார் இறைவனைத் தொழுத நிலையில் இருக்கிறார். அவருடைய நெற்றியில் நெற்றிமாலை காட்சி தருகிறது. கூர்மையான மூக்கு, புருவங்கள், பார்வை இவை பதினாறாம் நூற்றாண்டு சிற்பக்கலைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும். ஒடுங்கிய கை, கால்கள் நீண்டு இளமைக்கோலத்தில் காட்சி தருகிறார். மார்பில் கச்சை இல்லை.

### 7.2.3 திருவாலங்காடு

காரைக்கால் அம்மையாரின் புராண ஊரான திருவாலங்காட்டில் கிடைத்த செப்புத் திருமேனியில், அம்மையார் மிகவும் இளைத்த கோலத்தில், குச்சி போன்ற கரங்கள், கால்களுடன் காட்சி தருகிறார். என்பு விலாக்களும், வெளிநோக்கி அசைகின்ற அழகிய அமைப்பில் உள்ள முடியுடனும், பக்தி நிரம்பி வழியும் முகத்துடனும் அம்மையார் வடிக்கப்பட்டுள்ளார். இறைவனின் நாட்டியத்திற்குத் தாளம் இசைப்பவரான அம்மையார் தம் கைகளில் தாளத்துடன் காட்சி தருகிறார். வடிகாதுகளும், வட்டுடையும் காணப்படுகின்றன.

### 7.2.4 திருவாய்மூர்

திருவாய்மூரில் நின்றகோலத்தில் என்புருவில் அம்மையார் காணப்படுகிறார். இச்சிற்பத்தில் சிவபெருமானின் நடனத்தில் ஆழ்ந்து தோய்ந்துள்ள காரணத்தால் அம்மையாரிடம் தாளங்கள் இசைக்கப்படுவதாக அமையவில்லை. வடிகாதுகளுடன் இடையில் வட்டுடை காணப்படுகிறது.

### 7.2.5 பேரூர்

இங்கு அம்மையார் நின்றகோலத்தில் உள்ளார். கைகளில் தாளமோ, மாங்கனியோ காணப்படவில்லை. வலக்கை அபயகஸ்தமாகவும், இடக்கை வரதகஸ்தமாகவும் அமைந்துள்ளன. இடையில் வட்டுடையும், இரண்டு கைகளிலும் காப்பும் அணிந்துள்ளார். தோள், கழுத்து, நெற்றி இவைகளில் அக்கமாலைகள் காணப்படுகின்றன. மார்பகம் மிகவும் வித்தியாசமாகக் காட்டப்பட்டுள்ளது. வடிகாதுகளுடனும், சிரித்த முகத்துடனும் காணப்படுகிறார்.

### 7.2.6 திருச்செங்கோடு

அம்மையார் பீடத்தின்மேல் வலக்காலை மடக்கி, இடக்காலைத் தொங்கவிட்டு அமர்ந்துள்ளார். இதில் பேய்உரு காட்டப்பட்டு, விலா எலும்புகள் தெரியும் வண்ணம் அமைந்துள்ளது. வலக்கையில் மாங்கனியும், இடக்கையில் அட்சய பாத்திரமும் ஏந்தி, தோள்களிலும், கழுத்திலும், நெற்றியிலும் அக்கமாலைகள் அணிந்துள்ளார். தலைவிரி கோலமும், வடிகாதுகளும் அமைந்துள்ளன. காதுகளில் வளையம் காணப்படுகிறது. இடைமுதல் கணுக்கால் வரை ஆடை அணிந்துள்ளார்.

### 7.2.7 ஸ்ரீ வைகுண்டம்

இங்கு அம்மையார் தம் இடக்காலை மடக்கி, வலக்காலை நன்கு மடக்காத நிலையில் அமர்ந்த கோலத்தில் காணப்படுகிறார். இரண்டு கைகளிலும் தாளம் உள்ளது. கைகளிலும், கழுத்திலும் நெற்றியிலும் அக்கமாலைகள் காட்சி தருகின்றன. வடிகாதுகளில் வளையம் காணப்படுகிறது. கைகளில் வளையலும், இடையில் வட்டுடையும், கால்களில் தண்டையும் அணிந்துள்ளார்.

### 7.2.8 நாகப்பட்டினம்

நாகப்பட்டினத்தில் காணக்கிடைக்கும் சிற்பத்தில் அம்மையார் குத்துக்காலிட்டு அமர்ந்திருக்கிறார். இதில் காணப்படும் என்புருவம் கலைஞனின் கற்பனைக்கேற்பச் சித்திரிக்கபட்டுள்ளது. இச்சிற்பம் பேய்ச் சிரிப்பு சிரித்தபடி காணப்படுகிறது. இதில் விரிந்த கூந்தலுடனும், வடிகாதுகளுடனும், கையில் தாளத்துடனும் அம்மையார் காணப்படுகிறார்.

## 7.3 கடல்கடந்த நாடுகளில் அம்மையார்

நெல்சன் ஆக்டின்ஸ் மியூசியம் ஆப் ஆர்ட் என்ற இடத்தில் உள்ள இந்திய சிற்ப அறையில், காரைக்கால் அம்மையார் என்ற பெயருள்ள ஒரு இந்திய ஞானியின் வெண்கலச்சிலை அமர்ந்த கோலத்தில் காணப்படுகிறது. அப்பெண் எலும்புருவில் ஒல்லியான வடிவில் சூனியக்காரிபோல அமைக்கப்பட்டிருக்கிறாள். குழிவிழுந்த கண்களுடன், வெளியே தெரிகின்ற எலும்புடன், தோள், கைகளில் உள்ள முட்டிகள் வெளியே தெரியும்வண்ணம் சித்திகரிக்கப் பட்டுள்ளார், அவள் உருவம் பேய் போலவும், கோடு போன்ற நெற்றிப் புருவங்களும், வெளித் தோற்றமான கண்களும், பருத்த கூர்த்த மூக்குடனும், அகன்ற நீண்ட காதுகளும், பாதி திறந்த வாயினின்று இழியும் கோரைப்பல்லும் அமைந்துள்ளன. அவள், தன் இரு கைகளிலும் இரண்டு தாளங்களைப் பிடித்திருக்கின்றாள்.

இந்தச் சிலை கி.பி. 1933 இல் கிடைக்கப் பெற்றதும், இந்து தெய்வமாகிய காளி என்ற தவறுதலாகக் கூறப்பட்டு வந்தது. அத்தவறு 1959ஆவது ஆண்டு வெளிவந்த மியூசியம் ஹாண்டு புக்கில் திருத்தப்பட்டது.

கி.பி. ஆறாம் நூற்றாண்டு முதல் எட்டாம் நூற்றாண்டுவரை வடிக்கப்பட்ட சிவபெருமானின் ஊர்த்துவ தாண்டவ திருமேனியின் முன்பாக, ஒட்டிய வயிறும், புடைத்துக் காணப்படும் விலா எலும்புகளும், குழிவிழுந்த கண்களுமுடைய ஒரு பெண் சிவபெருமானின் திருத் தாண்டவத்திற்குத் தாளம் இசைப்பதாய்ச் செப்புத் திருமேனிகள் செய்யப்பட்டுள்ளன.

சிவபெருமானின் ஆனந்த தாண்டவ மூர்த்தத்தில் சிவபெருமானுக்கு முன்னால் மாணிக்க வாசகரின் திருமேனியை வைத்து வழிபடும் வழக்கம் இருந்தது. கம்பூச்சியா, தாய்லாந்து,

இந்தோனேசியா ஆகிய நாடுகளில் சிவபெருமானின் ஊர்த்துவ தாண்டவமூர்த்தத்தில், சிவபெருமானுக்கு எதிரில் அம்மையாரின் பேய்வடிவம், கல்லாலும், செம்பாலும் செய்யப்பட்டு வழிபாட்டிற்கு உரியதாக்கப்பட்டது.

தமிழ்நாட்டில் கடல்வாணிகர்கள் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டு முதல் காரைக்கால் அம்மையாரைத் தங்கள் குல தெய்வமாகக் கருதி வழிபட்டனர். அவர்கள் கடல்கடந்து பிற நாடுகளுக்கு வாணிபத்தின் பொருட்டு சென்றபோது தங்கள் குல தெய்வமான அம்மையாரைத் தம்முடன் கொண்டு சென்றனர்.

சம்பாவில் போங்குலே எனும் கோயிலில் பதினாறு கைகளையுடைய ஊழிக்கூத்தன் திருமுன்னர், அம்மையாரின் திருமேனி செதுக்கப்பட்டுள்ளது. பண்டேய் ஸ்ரீ என்னும் கோயிலில் ஊர்த்துவ தாண்டவ மூர்த்தியின் திருமேனியுடன் அம்மையாரின் திருமேனி கல்லாலும், செம்பாலும் உருவாக்கப்பட்டுள்ளது. இக்கோயில் கோபுரம் கெமர் கலைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும். இக்கோயிலின் கீழைக் கோபுரத்தில் ஊர்த்துவ தாண்டவ மூர்த்தி செதுக்கப்பட்டு, அவருக்கு இடப்புறம் ஊர்த்துவ வடிவுடைய குழலை ஒருவர் வாசிக்க, வலப்புறத்தில் பேய் வடிவில் அம்மையார் அமர்ந்திருக்குமாறு இச்சிற்பம் வடிக்கப்பட்டுள்ளது. பேய்வடிவில் அமைந்த அம்மையாரின் திருமேனிகள் சேகரிக்கப்பட்டுப் 'பெனம்பென்' அருங்காட்சியகத்தில் வைக்கப்பட்டுள்ளன.

'வேட்பாஸட்' என்ற இடத்தில் காணப்படுகின்ற 11ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த புடை ஓவியத்தில், சிவபெருமானின் தாண்டவத்தை வலப்புறமிருந்து உமையம்மை காணவும், இடப்புறமிருந்து அம்மையார் காணுமாறு வடிக்கப்பட்டுள்ளது. பத்துக் கைகளுடன் இறைவன் நடனமாடும் திருமேனி 'வாட்டெக்' என்ற

இடத்தில் உடைந்து காணப்படுகிறது. 'பெனம் கிஸோர்' என்ற கோயிலில் கிடைக்கின்ற சிற்பத்தில் இருகைகளுடன் ஆடும் சிவபெருமானுக்கு வலப்புறம் காரைக்கால் அம்மையார் பேய் வடிவில் அமர்ந்த கோலத்தில் தாளம் வாசிக்கிறார்.

இலங்கையில் பொலநறுவை என்ற இடத்தில் பேய் வடிவில் உருவாக்கப்பட்ட அம்மையாரின் திருமேனி அவ்வூர் அருங்காட்சியகத்தில் வைக்கப்பட்டுள்ளது. இச்செப்புத் திருமேனி 11—ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது எனக் கணிக்கப்பட்டுள்ளது.

## 7.4 முடிவுரை

பொதுவாக, காரைக்கால் அம்மையார் திருமேனிகளில் கோரைப்பற்கள் எல்லா இடங்களிலும் இல்லை என்றாலும், வெளியிடப்பட்ட அம்மையார் திருமேனிகளில் பல பேய்த் தன்மைகளோடு கூடிய முகமே வடிக்கப்பட்டுள்ளது. அதாவது, அகன்ற உருண்டையான கண்கள், அல்லது அருவருக்கத்தக்கப் பெரிய வாய், அருவருக்கத்தக்க எலும்புரு போன்றவை அமைந்து பேய்த் தன்மையைக் காட்டுகின்றது. இத்துறவியிடம் பெரும்பாலும் இரு தாளங்கள் காணப்படுகின்றன. பேயுருவில் அமைக்கப்பட்ட அம்மையாரின் திருமேனிகளில் அவர் இடையில் ஆடை அணிந்துள்ளார். ஆனால், பெரும்பாலும் மார்பில் கச்சை இல்லை.

ஒரு மனிதத்துறவி பேய்வடிவில் சித்தரிக்கப்பட வேண்டிய காரணத்தை ஆயும்போது அதற்கான விடையை அம்மையார் பாடலிலேயே காணலாம். அற்புதத் திருவந்தாதியிலும், திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகங்களிலும் கடைசிப் பாக்களில் அம்மையாரே தன்னைக் "காரைக்கால் பேய்" என்று கூறிக்கொள்கிறார்.

'நெல்சன் ஆக்டின்ஸ் மியூசியம் ஆப் ஆர்ட்' என்ற அருங்காட்சியகத்தில் காணப்படுகின்ற அம்மையாரின் சிலைக்குரிய காலம் 12, 13 ஆம் நூற்றாண்டென்று காலம் கணிக்கப்பட்டது. ஆனந்த குமாரசுவாமி முதலானோர் 14ஆம் நூற்றாண்டென்று கருதுகின்றனர். இத்திருமேனி தமிழ்நாட்டில் எந்தப் பகுதியிலிருந்து வெளிவந்தது என்ற தெரியவில்லை.

காரைக்கால் அமைந்துள்ள தமிழகத்தின் கிழக்குக்கரைப் பகுதிகளிலிருந்து தென்கிழக்கு ஆசியாவுடன் வாணிகத் தொடர்புள்ளவர்கள் இன்றும் உள்ளனர். மரக்கலம்மூலம் இவர்கள் பண்டைக்காலம் முதல் வெளிநாடுகளுக்குச் சென்று வாணிகம் நடத்தியமையால் "மரக்கலக்காரர்' என்ற சொல் பின்னர் மரைக்காயர் என மருவி வந்தது. இவர்கள் மூலமாகவே காரைக்கால் அம்மையார் சிற்பங்கள் வெளிநாடுகளில் பரவியதில் வியப்பொன்றும் இல்லை.

*பிறையும் புனலும் அனல் அரவுஞ்சூடும் இறைவர்*
*— அம்மையார்*

# 8. முடிவுரை

'காரைக்கால் அம்மையார் வாழ்வும் வாக்கும்' என்னும் இவ்வாய்வுநூலில் முன்பியல்களிலிருந்து கண்டறியப்பட்ட சில முடிவுகள் இவ்வியலில் தொகுத்துச் சொல்லப்படுகின்றன. காரைக்கால் அம்மையார் வரலாறு எவ்வாறு படிப்படியாக வளர்ச்சி பெற்று சேக்கிழார் காலத்தில் முழுமை பெற்றது என்றும், அவருக்குப்பின் அவ்வரலாறு மேலும் பலவாறு திரிந்தமையும் விளக்கிக் காட்டப்பட்டது. அம்மையாருடைய இயற்பெயர் குறித்து ஆராயப்பட்டது. புனிதவதி என்று சேக்கிழார் கொடுக்கும் பெயர் அம்மையாருடைய இயற்பெயர் அன்று என்று ஆசிரியர் முடிவுக்கு வருகின்றார்.

காரைக்கால் அம்மையார் இயற்றிய நூல்களைப்பற்றிய மதிப்பீடு விரிவாகச் செய்யப்பட்டுள்ளது. இவருடைய திருப்பாடல்களில் இறைவனின் திருக்கோலம் எவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது என்பதையும், அம்மையாரால் இந்நூல்களில் எடுத்தாளப்பட்ட புராணக்கதைகள் பற்றியும், அவர் பாடல்களில் இடம்பெற்றுள்ள உயிர் இனங்கள், செடிகொடிகள் பற்றியும், சிவபெருமானின் திருப்பெயர்கள் குறித்தும் விரிவாக எடுத்துக்காட்டப்படுகிறது. அம்மையாருடைய அருட்பாடல்களையும் பெரியபுராணத்தையும் அடிப்படையாகக் கொண்டு அம்மையார் காலச் சமுகம் விளக்கப்படுகிறது. அம்மையார் பாடல்களில் இடம்பெற்றுள்ள பேய்கள் பற்றிய வருணனையும் சுருக்கமாக இடம்பெற்றுள்ளன.

அம்மையார் இயற்றிய இலக்கியங்கள் எவ்வாறு அவர் காலத்திற்குப் பின்னால் சைவ சமய இலக்கியத்தைப் பாதித்தது

என சுருக்கமாக எடுத்துரைக்கப்படுகிறது. பதிக அமைப்பும், இரட்டை மணிமாலை அமைப்பும், அந்தாதி அமைப்பும், வெண்பா, கட்டளைக் கலித்துறை யாப்புகளும் பின்வந்த சைவ, வைணவ அடியார்களால் பக்தி இலக்கியத்தில் போற்றிக் கொள்ளப் பட்டமையும் எடுத்துரைக்கப்படுகின்றன. அம்மையார் பாடலில் இடம்பெற்றுள்ள தத்துவக் கருத்துக்களும், கற்பனைகளும், அணிநலன்களும், ஆராயப்படுகின்றன.

அம்மையார் பாடல்கள் காட்டும் சிவபெருமானுடைய பல்வகைத் தாண்டவங்கள் எடுத்துரைக்கப்பட்டன. தாண்டவத்தின் பொருளும், தாண்டவமாடும் சபைகளும், எழுவகைத் தாண்டவங்களும் பொதுவாக எடுத்துரைக்கப்படுகின்றன. அம்மையாருடைய பாடல்களில் சிறப்பாக இடம்பெற்றுள்ள ஊர்த்துவ தாண்டவம் பற்றி விரிவாக எடுத்துரைக்கப்படுகிறது. இத்தாண்டவ மூர்த்தத்தில் இடம்பெறும் பல்வேறு பொருள்கள் குறித்து அம்மையார் பாடல்களிலிருந்து மேற்கோள்கள் காட்டப்படுகின்றன. ஊர்த்துவ தாண்டவத்திற்கு அம்மையார் அமைத்துள்ள பின்னணியும் தாண்டவத்தின்போது இசைக்கப்படும் இசைக் கருவிகளும், சிவனோடு ஒக்க ஆடும் பேய்களின் ஆடலும், விளக்கியுரைக்கப்படுகின்றன.

காரைக்கால் அம்மையாருக்கு எழுப்பப்பட்டுள்ள கோயில்கள் குறித்துச் சுருக்கமாக எடுத்துரைக்கப்பட்டது. காரைக்காலில் உள்ள கோயில் மிக அண்மைக் காலத்தில் கட்டப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது. திருவாலங்காட்டில் அம்மையாருக்காக எழுப்பப்பட்ட கோயில் அழிந்துகிடக்கின்ற காரணத்தால் அக்கோயில் குறித்து விரிவான தகவல்கள் எதுவும் இடம்பெறவில்லை. காரைக்காலில் உள்ள கோயில் அமைப்பு விரிவாக விளக்கப்படுகிறது. திருவாலங்காட்டோடு தொடர்புடைய பிற செய்திகள் எடுத்துரைக்கப்படுகின்றன.

காரைக்கால் அம்மையார் வரலாற்றையொட்டி கல்லிலும், செம்பிலும் பல உருவத்திருமேனிகள், உருவாகியுள்ளன. அவற்றில் சில அம்மையாருடைய முந்தைய நிலையினையும், பல பேயுரு பெற்ற பிந்திய நிலையினையும் காட்டுவனவாய் உள்ளன. அத்திருமேனிகளின் அமைப்பு இங்கு சுருக்கமாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன. கடல்கடந்த நாடுகளிலும் நடராசர் வடிவத்தோடு அம்மையார் வடிவமும் சேர்ந்திருப்பது சுட்டிக்காட்டப்படுகிறது.

காரைக்கால் அம்மையாரைப்பற்றிய இந்தநூல் பல வகையிலும் முந்திய நூல்களில் இருந்து வேறுபட்டு தமிழ் இலக்கிய, பண்பாட்டு வரலாற்றின் அடிப்படையில் அமைகின்றது. இவ்வாய்வினை முழு நிலையில் விரிவாக எடுத்துக் கொள்வதற்குப் பல வாய்ப்புகள் உள்ளன. தென்னிந்தியாவிலும், கடல்கடந்த நாடுகளிலும் உள்ள அம்மையார் திருமேனிகள் குறித்த ஆராய்ச்சியே ஒரு விரிவான ஆராய்ச்சிக்குரியது. பிற மொழிகளில் அம்மையார் வரலாறு பரவி இருக்கின்ற பாங்கையும் ஆராய இந்தநூல் வழிவகுக்கின்றது.

## தேர்ந்தமை நூற்பட்டியல்

### நூல்கள்

1. அழகப்பன், வெ.சு., <u>பதினொராந் திருமுறைத்திறன்</u>
கண்ணம்மை பதிப்பகம்,
காரைக்குடி – 1987

2. ஆனந்த குமாரசுவாமி — சிவானந்த நடனம், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை – 1980.

3. ஆலால சுந்தரம்பிள்ளை,கா., — பெரியபுராணத்தில் காரைக்கால் அம்மையார் புராணம், ஆர்.ஜீ. அச்சியந்திரசாலை, சென்னை – 1935.

4. இரத்தின சபாபதி, வை., & இராதகிருஷ்ணன், எஸ்., — திருஞான சம்பந்தர் ஓர் ஆய்வு மெய்யுணர்வு மேல்நிலைக் கல்வி நிறுவனம், சென்னைப் பல்கலைக் கழகம், 1981.

5. இராமசுவாமி, மே.சு., — தமிழ்நாட்டுச் செப்புத் திருமேனிகள், தொல்பொருள் ஆய்வுத்துறை வெளியீடு, தமிழ்நாடு அரசு – 1976.

6. கமலையா, க.சி., — ஆனந்த மாநடம், B–194. பதினோராவது அவின்யூ சென்னை – 1978.

7. கமலையா, க.சி., — நமது பண்பாடு, தமிழ்ப்புத்தகாலயம், சென்னை – 1973

8. காரைக்கால் அம்மையார் — திருமுறைத் திரட்டு, சக்திமயில் நிலையம், புதுச்சேரி – 1983.

9. கைலாசபதி, க., — பண்டைத்தமிழர் வாழ்வும் வழிபாடும், மக்கள் வெளியீடு, சென்னை – 1978.

10. கோவிந்தசாமி, மு., — தமிழக வரலாறு, பாரிநிலையம், சென்னை–1985.

11. சபாபதி தேசிகர், தி.மு., — திருவாலங்காட்டு தலவரலாறு, திருவாலங்காடு–1975.

12. சிவபாத சுந்தரம், சோ., — சேக்கிழார் அடிச்சுவட்டில், வானதி பதிப்பகம், சென்னை – 1978.

13. சுந்தரமூர்த்தி சுவாமிகள் — தேவாரம், ஞானசம்பந்தம் அச்சகம், தருமபுரம் – 1964.

14. சுப்பிரமணிய முதலியார், சி.கே., — பெரியபுராணம், முருகன் அச்சகம், சென்னை – 1980.

15. சுப்பராய சாஸ்திரி — காரைக்கால் ஸ்தல புராணம், (மொழி பெயர்ப்பு), இந்திய காவலன் அச்சியந்திர சாலை – 1895.

16. ஞானப் பிரகாசம், வி.மி., & கமலையா, க.சி., — ஆய்வுலகம் போற்றும் ஆசிரிய மணிகள், பாரி நிலையம், சென்னை – 1980.

ு,

ஆய்வு

ணப்

றை

17. ஞானசம்பந்தன். அ.ச., பெரியபுராணம் — ஓர் ஆய்வு
மாருதி பிரஸ்,
சென்னை – 1987.

18. தமிழண்ணல் புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு,
மீனாட்சி புத்தக நிலையம்,
மதுரை—1987.

19. திருஞானசம்பந்த சுவாமிகள் தேவாரம் (1,2,3)
ஞான சம்பந்தம் அச்சகம்,
தருமபுரம் – 1953.

20. திருநாவுக்கரச நாயனார் தேவாரம் (4,5,6)
ஞான சம்பந்தம் அச்சகம்,
தருமபுரம் – 1963.

21. திருநாவுக்கரசு. க.தி., தென்கிழக்கு ஆசிய நாடுகளில் தமிழ்ப் பண்பாடு,
உலகத் தமிழாராச்சி நிறுவனம்,
சென்னை – 1987.

22. திருநாவுக்கரசு, மறை., பெரியபுராண ஆய்வுரை,
நான்காம் தொகுதி,
மறைமலையடிகள் பதிப்பகம்,
சென்னை – 1978.

23. திருமருகல் சிங்காரவேலனார், தெய்வீகப் பெண்மணிகள்,
புத்தகப் பூங்கா,இராயப்பேட்டை,
சென்னை—1981.

24. திருமுருக கிருபானந்த வாரியார், சிவனருட் செல்வர்,
வானதி பதிப்பகம்,
சென்னை – 1979.

25. பாலூர் கண்ணப்ப முதலியார் தொண்டை நாட்டுப் பாடல் பெற்ற சிவத்தலங்கள்
பாரிநிலையம்,
சென்னை – 1969.

26. பாண்டுரங்கன், அ.,(ப.ஆ) நோக்கு
ஐந்திணைப் பதிப்பகம்,
சென்னை – 1989.

27. பி.ஸ்ரீ., தில்லைத் திருநடனம்
பென்லெண்ட் பப்ளிஷர்ஸ்,
சென்னை – 1971.

28. புலியூர் கேசிகன், (உ.ஆ) மணிமேகலை, பாரி நிலையம்,
சென்னை –1980.

29. பிள்ளை, கே.கே., தமிழக வரலாறு – மக்களும் பண்பாடும், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்.
சென்னை – 1981.

30. ராதாகிருஷ்ணப்பிள்ளை,எம். தென்னாட்டுக் கோயில்கள்
அல்லயன்ஸ் கம்பெனி,
சென்னை–1987.

31. வித்தியானந்தன். சு., தமிழர் சால்பு
பாரி புத்தகப் பண்ணை,
சென்னை – 1985.

32. வெள்ளை வாரணன், க., பன்னிரு திருமுறை வரலாறு,
இரண்டாம் பகுதி,

அண்ணாமலைப்
பல்கலைக்கழகம்,
சிதம்பரம் – 1980.

33. வேங்கடசாமி, மயிலை சீனி., இறைவன் ஆடிய எழுவகைத் தாண்டவம், சாந்தி நூலகம், சென்னை – 1967.

34. வேங்கடசாமி நாட்டார்.ந.மு. சிலப்பதிகாரம், திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூல் பதிப்புக்கழகம், லிமிடெட், சென்னை–1956.

35. . . . . . . . திருவாலங்காட்டுப்புராணம்.

ஆராய்ச்சிக் கட்டுரைகள்.

36. கலைக்கோவன், இரா., 'கர்ணக் குழப்பங்கள்' 'செந்தமிழ்ச் செல்வி' செப்.87, ப.28–36, அக்.87, ப.65–70.

37. கிருட்டிணன்,மை.அ., 'பெரியபுராண இல்லறப் பெண்டிர்' ஆய்வுக் கோவை, 10வது, கருத்தரங்கு, இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம், கோயம்புத்தூர்–1978. ப.166.

38. சிவப்பிரகாசம், வை.கா., 'காரைக்கால் அம்மையார்' புதுவைச் செய்திகள், மார்ச் – 1962. ப.14–15.

39. தில்லைவனம், சு., 'காரைக்கால் அம்மையார்' பக்தி நோக்கம், புதுவைச் செய்திகள், செப்.84, ப.6–14.

40. வீராசாமி, தா,வே., 'பெரியபுராணத்தில் இயற்கை இறந்த நிகழ்ச்சிகள்', வையை, மதுரைப் பல்கலைக்கழகம், மதுரை / சூலை 1974. ப.235.

41. வேலாயுதனார், மு.த., 'புதுமைமிகு புதுவை' புதுவைச் செய்திகள், செப்.1972. ப.14–16

42. வேலாயுதனார், மு.த., 'பழம் பெரும் காரை' புதுவைச் செய்திகள், ஏப்.1967. ப.9–10

## ENGLISH BOOKS

43. Dorothy Fickle — Karaikalammaiyar, Saint and Poetess, The Nelson Atkins Museum of Art Bulletin, Vol. V, No. 8 July 1983.

44. Sasivalli. S. — Karaikkal Ammaiyar, International Institute of Tamil Studies, Madras, Sep.1984.

45. Sivaramamurthy. C. — Nataraja in Art, Thought and Literature. National Museum, New Delhi - 1974.

46. Yogi Suddhananda Bharathi — The Grand epic of Saivism, The South India Saiva Siddhanta Works Publishing Society Limited, Madras - 1970.

**FRENCH BOOKS**

Bertrand LEMBEZAT — Karaikal Ammear, Patronne de la Ville de Karaikal, Joseph Power Press, Karaikal - 1952.

Filliozat, Jean — Karaikkal Ammeyyar, par Karevelane, Pub. del' Institute Francais d'Indologie, Gros E.D., Pondicherry - 1982.



Pattabiramin, P.Z. — Trouvailles de Nedoungadou - Tandavas de Siva, Imprimerie de Sri Aurobindo Ashram, Pondicherry - 1956.